# நூல் விவரம்

## Ainthinai Malai

Author: Themozhi
Language: Tamil
Genres: Non-fiction - Literature History and Criticism (A Collection of Essays, short stories on Tamil Language, Literature and Culture)
ISBN: 978-0-9963993-7-1
Pages: 214
Published in: February 21, 2021
Publisher: Arivoli Pathipu
Contact: arivolipathipu@gmail
Cover Art Creator: Nana Shaam Marina [naanaas@gmail.com]



## ஐந்திணைமாலை

ஆசிரியர்: தேமொழி
மொழி: தமிழ்
வகை: கட்டுரைகள், கதைகள், மூலமும் உரையும், இலக்கியம்
ISBN: 978-0-9963993-7-1
பக்கம்: 214
வெளியீடு: பிப்ரவரி 21, 2021
பதிப்பகம்: அறிவொளி பதிப்பு
தொடர்பு: arivolipathipu@gmail
மேலட்டை வடிவமைப்பு: எழுத்தோவியர் நாணா

# அணிந்துரை

**முனைவர்.ந.அருள்**
இயக்குநர் (மொழிபெயர்ப்பு)
தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறை,
தலைமைச் செயலகம், புனித ஜார்ஜ் கோட்டை,
சென்னை – 600 009.




**Dr.N.Arul**
Director (Translation)
Tamil Development and Information Department
Secretariat, Fort St.George, Chennai - 600 009.

நாள் : **11.02.2021**

**தேமொழி வழங்கிய தேன்மழை!**

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களின் பாவளத்தில் பன்னிரெண்டாம் நூலாக கலை மலிந்த பாடல்கள் நிரம்பிய கணிமேதாவியாரின் திணைமாலை நூற்றைம்பதில் ஒவ்வொரு திணையின் பாடல்களையும் ஐந்து சிறு கதைகளாகப் புனைந்து அவற்றை மணங்கமழும் ஒரு மாலையாகத் தொடுத்து ஐந்திணைமாலை என்னும் ஓர் அழகிய நூலைத் திருமதி தேமொழி படைத்துள்ளார்.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலையெனும் ஐவகை நிலங்களில் வாழ்ந்த மக்களின் அன்றைய ஒழுகலாற்றை தொகுத்துக் கூறும் திணைமாலை நூற்றைம்பதின் ஒவ்வொரு திணையின் பாடல்களையும் கதைகளாக உருவாக்கியுள்ள ஆசிரியரின் அறிவார்ந்த முயற்சி போற்றுதற்குரியதாகும்.

ஐந்திணைச் சூழலுக்குப் பொருந்திய கதைகள் மட்டுமின்றி, கதைகளுக்குரிய பாடல்களைச் சொற்பிரித்து கற்போருக்கு எளிய நடையில் எழில் ததும்ப ஆசிரியர் உரையெழுதிய பாங்கு தேமொழியின் இலக்கியப் புலமைக்கு அணி சேர்க்கின்றது.

எண்ணற்ற தமிழ்ப்படைப்புகள் வாயிலாக அரிய கருத்துக்களை நூலாசிரியர் வரைந்துள்ளார். தமிழ்ப்புதினங்கள், நாடகங்களைச் சுருக்கி அவற்றின் சுவை குன்றாமல் எழுதும் தமிழ் எழுத்தாளர்களின் பட்டியலில் இவருக்கென இன்றியமையாதொரு தகுதியிடமுண்டு என்றால் அது மிகையாகாது. ‘அனிச்ச மலர்கள்’, ‘ஜினா என்றொரு க்ருயெல்லா’ போன்ற இவரின் படைப்புகள் கவிஞரின் எழுத்தாற்றலை இவ்வுலகிற்கு எடுத்துரைத்த அருமையான கதைகளாகும்.

அயல்நாட்டில் வாழ்ந்தாலும், தாய்மொழித்தமிழில் தணியாப் பற்றுக்கொண்டு எண்ணற்ற சிறந்த படைப்புக்களை தமிழுலகிற்கு நல்கி வரும் திருமதி.தேமொழி வளர்ந்து வரும் சூழலுக்கேற்ப இணைய வழியிலும் தமிழ்த் தொண்டாற்றுவது தமிழுலகுக்குப் பெருமிதம் தருகிறது.

இல்லத்தரசி, இன்கதையாசிரியர், சிந்தனைக் கட்டுரையாளர், சீரிய கவிஞர் என தேமொழியின் பெருமை அடுக்கடுக்காக அமைகிறது. தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் ‘மின்தமிழ்மேடை’ காலாண்டு இதழின் பொறுப்பாசிரியர், தமிழ் மரபு அறக்கட்டளை அமைப்பின் செயலாளர் எனப் பன்முகம் கொண்டுள்ள திருமதி தேமொழி தான் மேற்கொள்ளும் பணியைப் பிறர் வியக்கும் வகையில் பொலிவுடன் ஆற்றி முடிக்கும் வல்லமை பெற்றவர்.

திருமதி தேமொழி எழுத்தாலும் – எண்ணத்தாலும் கலை வளர்க்கும் பெருமையோடு எளியோர்க்கு தக்க நலங்களை முன்வந்து செய்யும் நயத்தக்க பண்பாளராகவும் வாழ்வது குறிக்கத்தக்கதாகும்.

ஐந்திணைமாலையை எழுதி வழங்கும் திருமதி தேமொழியை வாழ்த்துவது எனக்குப் பெருமையளிக்கிறது. இந்நூலை உருவாக்குவதற்கு எத்தகைய நுட்பமான ஆய்வுகளை அவர் மேற்கொண்டிருப்பார் என்பதை நம்மால் உணர முடிகிறது. கடின உழைப்பிற்கும் தமிழ் ஆர்வத்திற்கும் கிடைத்த வெற்றி மாலையாகவே இந்நூலை நான் கருதுகிறேன்.

நல்லிசைப்புலமை வாய்ந்த கவிஞர் தேமொழி தொடர்ந்து பயனுள்ள பனுவல்களைப் படைத்து தமிழ் வளத்துக்கு அணி சேர்ப்பாராக !

வாழ்க தேமொழி! வளர்க தமிழ் வளம் !!

(ஔவை அருள்)

அலைபேசி & மின்னஞ்சல் : 98410 26043; dr.n.arul@gmail.com

# என்னுரை

*வணக்கம்.*

*இந்த நூலுக்கு "ஐந்திணைமாலை" என்ற தலைப்பு தேர்ந்தெடுக்கப்பட்டதன் நோக்கம்; அன்பின் ஐந்திணைகளாக "திணைமாலை நூற்றைம்பது" நூலின் ஒவ்வொரு திணையின் பாடல்களும் ஐந்து சிறு கதைகளாக மாலைபோல தொடுக்கப்பட்டுள்ளதால் நூலின் தலைப்பே விளக்கம் தரும் வகையில் அமையும் என்ற ஓர் எதிர்பார்ப்புதான்.*

*இக்கட்டுரைகளை/கதைகளைத் தொடர்ந்து பாடல்களுக்கான மூலமும் உரையும் நூலில் கொடுக்கப்பட்டுள்ள முறை பின்வருமாறு அமைகின்றது: முதலில் மூலப் பாடலும், அடுத்து அதே பாடல் சொற்பிரிக்கப்பட்டும் இடம் பெறுகின்றது. பாடலைத் தொடர்ந்து பாடலுக்கான உரையை நான் பொருள் கொண்ட வகையில் எளிய நடையில் எழுதியுள்ளேன். எனது உரையைத் தொடர்ந்து பாடலுக்காகக் கிடைக்கப்பெற்ற பழைய உரையும், அதனைத் தொடர்ந்து திரு. பால சங்கரன் அவர்களின் உரையும் ஒப்பிட்டுப் பாடல் குறித்து மேலும் விளக்கம் பெற உதவிடும் நோக்கில் கொடுக்கப்பட்டுள்ளது. எனது உரை எழுதும் முயற்சிக்கு உதவியது திரு. அ. நடராச பிள்ளை உரை நூலில் இடம்பெற்ற சொற்பொருள் விளக்கம் பகுதியாகும். மகாவித்வான் ரா. ராகவையங்கார் மற்றும் திரு. அ. நடராச பிள்ளை ஆகியோரின் உரை நூல்களில் 128 ஆம் செய்யுள் முதல், தொடர்ந்து அதன் பின் வரும் இருபத்தேழு செய்யுட்கட்கும் பழைய பொழிப்புரை கிடைக்கப் பெறவில்லை என்று சுட்டப்பட்டுள்ளது இங்குக் குறிப்பிடத்தக்கது.*

*திணைமாலை நூற்றைம்பது நூலுக்கு மகாவித்வான் ரா. ராகவையங்கார் அவர்களின் நூலும் திரு. அ. நடராச பிள்ளை அவர்களின் நூலும் தமிழ் இணையக் கல்விக்கழகம் நூலகத்தின் வழியாக அனைவரும் படிக்கும் வகையில் கிடைக்கப் பெறுகின்றன. அவ்வாறே பால சங்கரன் அவர்களின் விளக்க உரையையும், வைதேகி ஹெர்பர்ட் அவர்களின் விளக்க உரையையும் இணைய தளங்களின் வழியே படிக்க இயலும். சொற்பிரிப்புக்கு முனைவர்.ப.பாண்டிய ராஜா அவர்களின் 'சங்கம்பீடியா' தளமும், தமிழ் இணையக் கல்விக்கழகத்தின் தளமும் பெரிதும் உதவின.*

*திணைமாலை நூற்றைம்பது பாடல்களையும் விளக்கங்களையும் தமிழ் இணையக் கல்விக்கழகத்தின் நூலகத் தளத்தின் வழியே படித்து, பாடல்களை வரிசைப்படுத்தி இணைத்து கதைவடிவில் அமைப்பதே முதலில் எனது குறிக்கோளாக இருந்தது. பாடல்களுக்கு உரை எழுதும் முயற்சி எனது புரிதலுக்காகவும், எழுதும் கதையில் இடையிடையே பயன் கொள்ளும் நோக்கிலும் நான் எழுதியது. இருப்பினும், இந்த உரைகள் அனைவருக்கும் பயன்படக்கூடும், பிறர் உரையுடன் ஒப்பிட்டுப் பாடல்கள் குறித்து மேலும் தெளிவு பெறவும் முடியும் என்ற என் எண்ணமே இந்த நூல் உருவாகக் காரணம்.*

*பாடல்களையும் உரைகளையும் படித்துக் கொண்டிருக்கையில் ஒருமுறை ஏதோ இணையத் தளக் கோளாறு காரணமாக தமிழ் இணையக் கல்விக்கழகத்தின் திணைமாலை நூற்றைம்பது நூலின் பக்கம் சரிவர இயங்கவில்லை. சோர்வுடன் இரவு அவர்களுக்குத் தகவலை அறிவித்துவிட்டு விடிந்தவுடன் சென்று பார்க்கையில் தளத்தைச் சீர் செய்திருந்தார்கள். தகவல் அறிந்ததும் உடனடி நடவடிக்கை எடுத்து செயலாற்றிய தமிழ் இணையக் கல்விக்கழகத்தில் கடமை உணர்வு மிக்க இணையப் பிரிவு பணியாளர்களுக்கும் இந்த உரை மூலம் எனது நன்றியையும் பாராட்டையும் தெரிவித்துக் கொள்கிறேன்.*

*பணிவோய்வு பெற்றாலும் தமிழிலும், சங்கத் தமிழ்ப்பாடல்களில் என் போன்ற பலருக்கு ஆர்வத்தை ஏற்படுத்தும் முறையில் தன்னார்வப் பணியாளராகவும், இளைய தலைமுறையினருக்கு ஓர் எடுத்துக்காட்டாகவும் செயலாற்றி வரும் அமெரிக்கன் கல்லூரியின் முன்னாள் பேராசிரியர் முனைவர்.ப.பாண்டியராஜா அவர்களுக்கு எனது மனம் கனிந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.*

*நூலுக்கு அழகிய அட்டைப்படத்தை வடிவமைத்து அதில் தமிழின் தொன்மையைக் குறிப்பால் உணர்த்தும் வண்ணம் திணைமாலை நூற்றைம்பது ஓலைச்சுவடிகள் கொண்ட ஒரு பானையில் முற்கால தொல் தமிழ் எழுத்தான தமிழியில் "ஐந்திணைமாலை" என்றும், அப்பானை வைக்கப் பட்டுள்ள பாறையில் முந்தைய தமிழ் வட்டெழுத்தில் நூலின் பெயரையும், நூலாசிரியர் பெயரையும் கல்வெட்டாகப் பொறித்துத் தந்துள்ள தோழர் எழுத்தோவியர் நாணா என்ற ஓவியர் நாராயணன் அவர்களின் கற்பனைத்திறன் வியக்க வைக்கிறது. அவருக்கு எனது அன்பான நன்றிகள்.*

*நூலுக்கு அணிந்துரை வழங்கி எனது முயற்சியை ஊக்கப் படுத்தியுள்ள முனைவர்.ந.அருள் (இயக்குநர், மொழிபெயர்ப்பு -தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறை, தலைமைச் செயலகம், சென்னை) அவர்களுக்கு எனது நெஞ்சம் கனிந்த நன்றிகள் என்றென்றும் உரித்தாகிறது.*

*இக்கட்டுரைகளை வெளியிட்ட சிறகு மின்னிதழுக்கும் நன்றிகள் பல.*

*உலகத் தாய்மொழி நாளின் வெளியீடாக வரும் இந்த நூலைத் தமிழ் ஆர்வலரான என் அப்பா, திருச்சி மருத்துவர் மு. சிவக்கண்ணு அவர்களுக்கு அன்புக் காணிக்கையாக்குகிறேன்.*

*நன்றி.*
*அன்புடன்*
தேமொழி
*பிப்ரவரி 21, 2021*
*themozhi@yahoo.com*

## தமிழ்

மொழியை உயிராய் மதித்தவர்

என்றும் நிலையாய்

## மனதில் நிற்பவர்

**என் அன்பு அப்பாவிற்கு ....**



**திரு Dr.M.சிவக்கண்ணு MD.,D.C.H.,Ph.D., அவர்கள்.**

நிறுவனர்.Dr.M.சிவக்கண்ணு மகளிர் கலை அறிவியல் கல்லூரி.

Dr.M.சிவக்கண்ணு மருத்துவமனை - திருச்சி.

29.10.1935 — 10.2.2021

# ஐந்திணைமாலை

நூலின் உள்ளடக்கம்

# அன்பின் ஐந்திணை

*தமிழிலக்கியத்திற்கு இலக்கணம் வகுக்கப்படும் பொழுது, ஒரு திணைக்கு உரியபொருள் அத்திணையின் உரிப்பொருள் எனக் காட்டப்படுகிறது. ஐந்து நிலங்களுக்குரிய ஒழுக்கங்களாக; புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் ஆகியவையும் அவற்றின் நிமித்தமும் முறையே குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம் ஆகிய ஐந்திணைகளின் உரிப்பொருள் எனப்படும்.*
*இந்த அன்பின் ஐந்திணைகளை;*

*'புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்*
*ஊடல் இவற்றின் நிமித்த மென்றிவை*
*தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே.'*
*(தொல். பொருள். அகத்திணையியல் நூற்பா-16)*

*என்று தொல்காப்பிய நூற்பா வரையறுக்கிறது.*
*ஆகவே,*
*புணர்தலும் புணர்தல் நிமித்தமும் குறிஞ்சி ;*
*பிரிதலும் பிரிதல் நிமித்தமும் பாலை ;*
*இருத்தலும் இருத்தல் நிமித்தமும் முல்லை ;*
*இரங்கலும் இரங்கல் நிமித்தமும் நெய்தல் ;*
*ஊடலும் ஊடல் நிமித்தமும் மருதம்*
*ஆகிய நிலங்களுக்கு உரியவையாக நாம் அறிகிறோம்.*

*ஒரு திணைக்குரிய உரிப்பொருள் மயங்குவதில்லை. ஒரு பாடலின் உரிப்பொருளே அப்பாடல் அகத்திணையில் எந்த திணையைச் சார்ந்தது எனத் தீர்மானிக்க உதவுகிறது. குறிஞ்சித்திணைப் பாடல்களின் காட்சிகள் கருத்துகள் உரையாடல்கள் என எவற்றுக்குமே அதன் பொருண்மையான புணர்தலும் புணர்தல் நிமித்தமும்தான் அடிப்படை. இதே வரையறையே மற்ற பிறதிணைப் பாடல்களுக்கும் பொருந்தும்.*

*பாட்டும் தொகையும் என அறியப்படும் சங்கப்பாடல்களில் தோழிக்குத் தனிச் சிறப்புண்டு. தலைவன் தலைவியை மணந்து (வரைவு) கொள்ளாமல் காலம் தாழ்த்தும் பொழுது தோழி தலைவனிடம் தலைவியை மணந்து கொள்ள வரைவு கடாதல் என்ற நோக்கில் தலைவியைச் சந்திக்க அவன் வரும் இடர் தரும் வழி, தலைவிக்குக் காவல் மிகுதி, இற்செறிப்பு, ஊரில் அலர் துவக்கம், வரைவு வேட்கை, வெறியாட்டு ஏற்பாடு என்று நிலைமையை அறிவுறுத்துதல்; குறியிடம் மறுப்பது, பகற்குறி, இரவுக்குறி, அறத்தொடு நிற்றல், ஆற்றுவித்தல், தூது செல்லல் என்றும்; உடன்போக்கு, வரைவு மலிதல் உதவிகள் செய்வது என்றும் தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே காதல் துவங்கி வளர்ந்து கைகூடுவதில் சங்ககாலத் தோழியின் பங்களிப்பு மிகுதி.*

# திணைமாலை நூற்றைம்பது

*எளிய வழியில் அகப் பாடல்கள் கூறும் அன்பின் ஐந்திணை ஒழுக்கம் குறித்து அறிய 'திணைமாலை நூற்றைம்பது' நூலின் பாடல்கள் உதவுகின்றன. மதுரைத்தமிழாசிரியர் மாக்காயனார் மாணாக்கர் கணிமேதாவியார் இயற்றிய திணைமாலை நூற்றைம்பது என்ற நூல் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. 'ஏலாதி' நூல் இயற்றிய அதே கணிமேதாவியார் இயற்றிய நூல் இது. இவர் சமண சமயத்தைச் சார்ந்தவர் என்பதையும், மதுரைத் தமிழாசிரியர் மாக்காயனாரின் மாணாக்கர் என்ற செய்தியையும் ஏலாதி நூலின் முகவுரையின் மூலம் நாம் அறிய முடிகிறது. இந்நூலில், அகத்திணை ஒழுக்கம் குறித்த வெண்பாக்கள் குறிஞ்சி, நெய்தல், பாலை, முல்லை, மருதம் என்ற வரிசையில் அமைந்துள்ளன.*

*ஐந்திணை ஒழுக்கங்களைக் கோவையாக அமைத்து மாலை போலத் தொடுத்துள்ளமையால் 'திணைமாலை' என்றும், நூலில் இடம்பெற்றுள்ள பாடல்களின் எண்ணிக்கையின் அளவினால் 'திணைமாலை நூற்றைம்பது' என்றும் இந்நூல் பெயர் பெற்றது என்ற விளக்கம் கொடுக்கப்படுகிறது. இருப்பினும், ஒவ்வொரு திணைக்கும் 30 பாடல்கள் என மொத்தம் 150 பாடல்கள் இருக்க வேண்டிய நிலைக்கு மாறாக; இந்நூலில் குறிஞ்சி, நெய்தல், முல்லை திணைகள் மூன்றும் 31 பாடல்களைப் பெற்றுள்ளதால் மொத்தம் 153 பாடல்கள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. நூலின் இறுதியிலே காணப்பெறும் பாயிரச் செய்யுள் ஒன்றையும் கணக்கில் கொண்டால் இந்நூல் மொத்தம் 154 பாடல்களைக் கொண்டதாகும்.*

*இவற்றுக்கு மிகப் பழைய உரையும் உள்ளது. அகத்திணை தொகுப்பாக அமைந்த மற்ற கீழ்க்கணக்கு நூல்களில் தலைப்பிற்கு ஏற்ப பாடல்களின் எண்ணிக்கை அமைந்திருக்க, இந்த நூல் மட்டும் அந்த விதியிலிருந்து மாறுபடுவது குறிப்பிடத்தக்கது. தமிழிலக்கியம் கூறும் அகத்திணைகள் பற்றி அறிய இது ஒரு சிறந்த நூல் என்று இதற்கு உரை எழுதிய மகாவித்வான் ரா. ராகவையங்கார் தனது நூலின் முன்னுரையில் பரிந்துரைக்கிறார். ஐந்திணை இயற்கைக் காட்சிகள் அழகாக இந்நூலில் விவரிக்கப்படுகிறது. குறிஞ்சித் திணையின் முதற்பொருள்(நிலமும் பொழுதும்), கருப்பொருள்(நிலத்தின் தனித்தன்மையைக் குறிப்பன), உரிப்பொருள்( அந்த நில மக்களின் ஒழுக்கமும் வாழ்வு முறையும்) என இம்மூன்று பொருள்களும் பாடல்களில் வழி தெளிவாக அறிந்து கொள்ள முடியும்.*

*தொடுக்கப் பெற்ற மலர் மாலையினைப் போன்று, ஒப்புமை கூறுவதற்கு அரிய இனிய தமிழ் மொழியில் சிறப்பாக ஆராய்ந்து இயற்றிய திணைமாலை நூற்றைம்பது என்னும் நூலில், அகத்திணை கருத்துக்களை வெறுத்தவர்களின் வெறுப்பு விலகும்படியாக, முத்துக்களைப் போன்ற வெண்பாச் செய்யுட்களில் அகப் பொருளாகிய களவியல் கொள்கைகளைக் கணிமேதாவியார் கனிவுடன் கூறினார் என்று நூலின் இறுதியில் இடம்பெறும் பாயிரம் குறிப்பிடுகிறது.*

# அன்பின் ஐந்திணை - குறிஞ்சி

*திணைமாலை நூற்றைம்பது நூலின் குறிஞ்சித் திணைப் பாடல்கள் அனைத்திலும் குறிப்பிடப்படும் தலைவனும் தலைவியும் ஒருவரே என்றோ, அவர்களின் தோழியும் தோழனும், செவிலித்தாயும், நற்றாயும், தந்தையும் தமையன்களும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர் என்றோ, அல்லது அவர்கள் வாழிடம் குறிப்பிட்ட குறிஞ்சி நில ஊர் என்றோ கூறுதலும் இயலாது. இருப்பினும், 31 குறிஞ்சிப்பாடல்களையும் ஒரே தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே நிகழும் காதலாகக் கொண்டு ஒரு வரிசைப்படுத்தி அவற்றிலிருந்து ஒரு கதையும் உருவாக்கலாம். அத்தகைய முயற்சியே இக்கட்டுரை. வரிகளுக்குப் பின்னர் அடைப்புக் குறிகளுக்குள் கொடுக்கப்படும் எண், திணைமாலை நூற்றைம்பது நூலில் உள்ள பாடல்களின் வரிசை எண்.*

*புணர்தலும் புணர்தல் நிமித்தமுமாகிய ஒழுக்கமும் கொண்ட குறிஞ்சி நிலத்தில், மலைநாட்டில் நிகழ்வது இக்கதை.*

*தலைவனுக்கு 'வேலன்' என்றும் தலைவிக்கு 'வள்ளி' என்றும் பெயர்கள் சூட்டியும் அழைக்கலாம். தலைவன் கையில் வேலை வைத்துள்ளவன், வேட்டை ஆடும் வீரன். அவன் ஓர் அழகிய மலைநாட்டிற்குத் தலைவன். அவனுக்கு ஒரு நண்பன். இவர்களைப் பாடல்களின் மூலம் அறிய முடிகிறது.*

*தலைவியின் குடும்பத்தில் இருப்போர் நற்றாய், தந்தை, தலைவியின் வீரம் மிக்க அண்ணன்மார்கள், செவிலித்தாய், தலைவியைப் பிரியாத தோழி ஆகியோர். அழகிய நிலவு போன்ற முகத்தையும், அதில் வில் போன்ற வளைந்த புருவங்களையும், அதன் கீழ் உயிரைக் குடிக்கும் வேல் போன்ற கண்களையும் கொண்ட ஒளி பொருந்திய முகத்தைக் கொண்டவள் அத்தலைவி. நறுமணம் மிக்க தேன் சொட்டும் மலர்களைத் தனது அழகிய நீண்ட குழலில் அணிந்து, சிறப்பான அணிகலன்களையும் அணிந்தவள்.*

*அவளது தமையன்கள் வீரம் மிக்கவர்கள் தங்கள் வாழ்வில் குறுக்கிடும் எவருடைய உயிரையும் போக்கிவிடுபவர்கள். அவர்களுக்கு மிக அருமையான நறுமணம் மிக்க சந்தனம், அகில் போன்ற மரங்கள் எல்லாம் ஒரு பொருட்டே அல்ல. அழகிய மலையில், முகில் தடவிச் செல்லும் அளவிற்கு உயர்ந்து வளர்ந்துள்ள அந்த மரங்களை வெட்டி வீழ்த்தி அங்குத் தினை விதைத்துப் பயிரிடுகிறார்கள்.*

*அந்தத் தினைப்புனத்தைக் காவல் காக்க தலைவியைத் தோழியுடன் அனுப்பி வைக்கிறார்கள். உடல் மணக்கும்படி சந்தனக் குழம்பைப் பூசிக்கொண்டிருக்கும் தலைவிக்கு, தினைப்புனத்தில் சந்தன மரங்களைக் கால்களாக நிறுத்தி அமைக்கப்பட்ட பரணில் நின்று தானியங்களைத் தின்ன வரும் கிளிகள் போன்ற பறவைகளை ஆலோலம் பாடி விரட்டுவது கொடுக்கப்பட்ட பணி.*

அப்பொழுது அயலூரைச் சேர்ந்த கட்டிளம் காளை ஒருவன் வேட்டையாட அப்பகுதிக்கு வருகிறான். அவன் துரத்தி வந்த மானின் மீது அம்பெய்கிறான். ஆனால் அந்த மானோ உடலில் தைத்த அம்புகளுடன் தப்பி ஓடிவிடுகிறது. மானைத் துரத்தி வரும் தலைவன் பரணில் தினைப்புனம் வழி செல்கையில் பரணில் நிற்கும் தலைவியிடமும் தோழியிடமும், பெண்களே நான் வேட்டையாடிய மான் அம்புகளுடன் இப்பக்கம் வந்ததைப் பார்த்தீர்களா? (1) என்று கேட்கிறான். இது தலைவன் தலைவி ஆகிய இருவரின் காதலின் துவக்கம். தலைவியின் அழகில் தனது உள்ளத்தை அவளிடம் பறி கொடுக்கிறான்.

தலைவியின் முகத்தை மறக்க இயலாமல் தனது ஊருக்குத் திரும்புகிறான். தலைவியின் நினைவு தன்னை வாட்டுவதாகத் தனது தோழனிடம் கூறுகிறான். வேட்டையாடிய விலங்கைக் கண்டீர்களா என்று கேட்கச் சென்ற இடத்தில் தலைவி என் உள்ளத்தைக் கவர்ந்து கொண்டுவிட்டாள்(9), தினைப்புனம் காக்கும் தலைவியின் அழகில் என்மனம் கட்டுண்டு கிடக்கிறது(30), தலைவியின் முலைகள் மேல் கொண்ட விருப்பினால் எனது நலனும் பெருமையும் அழிந்துவிட்டது(23) என்று தலைவன் தோழனிடம் கூறுகிறான். தலைவியைத் தான் சந்தித்த இடத்தை தோழனுக்கு அடையாளம் சொல்லி அனுப்புகிறான். ஆவல் மேலிடத் தலைவனின் உள்ளத்தைக் கவர்ந்தவள் எப்படி இருப்பாள் எனக் காணச் செல்லும் தோழனும் தலைவியைப் பார்த்து அயர்ந்து போகிறான். இத் தலைவியை விட்டு எவ்வாறு தலைவன் பிரிந்து வந்தான்? அது அவனது உள்ளத்தின் உறுதியைக் காட்டுகிறதோ (28) என எண்ணி வியக்கிறான்.

அரண் போன்ற மலைகள் சூழ்ந்து நடுவே இருக்கும் அழகிய தலைவியின் சிற்றூருக்கு, கொடிய விலங்குகளும், பாம்புகளும், வேங்கைப் புலிகளும், மதநீர் சொட்டும் மதம் பிடித்த யானைகளும் குறுக்கிடக் கூடிய அச்சம் தரக் கூடிய வழியில் தனது வலிமையான கால்களையும், தனது வேலையும் மட்டும் துணையாகக் கொண்டு மீண்டும் தலைவியைக் காண வருகிறான் தலைவன். அவளைச் சந்திக்க வாய்ப்பு தேடி அவளது தோழியின் மூலம் அணுக விரும்புகிறான். தினைப்புனம் அருகில் உள்ள வேங்கை மரத்தின் கீழ் நின்று தலைவிக்குக் கொடுக்க கையில் தான் கொணர்ந்த பூந்தழைகளுடன் நின்று கொண்டிருப்பவன் கண்ணில் தோழி தென்படுகிறாள்.

தலைவியைக் காண்பதே தன்னை வாட்டுவதாக (19) தனது ஆற்றாமையைத் தோழியிடம் தலைவன் கூறுகிறான். சந்தன மரம் போன்ற அருமையான மரங்களை எல்லாம் வேரோடு வெட்டி உழுது நிலத்தைப் பண்படுத்தி தினை வித்துக்களை விதைத்துப் பயிரிட்டு தினைப்புனம் உருவாக்கும் அவளது அண்ணன்மார் போன்று தலைவிக்கும் எனது வருத்தம் புரியவில்லை என்கிறான் தலைவன் (24). நான் தலைவியைக் குறித்து நன்கே அறிவேன். இளமை நிரம்பிய அவள் தனது இடை வருந்தும்படியாக சிறிது தொலைவு அவள் நடந்து செல்வதற்கு முன்னரே என் நெஞ்சம் அவளது இடை இற்று விழுந்து விடுமே என்று அஞ்சும், அவள் சிறிதும் என்பால் அன்புகாட்டுவதைக் காணாது நைந்து உருகி என் நெஞ்சம் வருந்துகிறது.

*என் உள்ளம் அவள் பின் சென்று தளர்ந்து விடுகிறது (17) என்று தலைவன் தோழியிடம் கூறுகிறான்.*

*நான் வந்தால் மலை நெற்குவியலுக்குப் பாதுகாப்பு இருக்கும். இங்கேயே நான் இருப்பேன் என்றால் சிவந்த தினையினையும் கருந்தினையினையும் கொண்ட தினைப்புனக் காவலாகவும் இருக்கும் (8) என்று தலைவன் தோழியிடம் நயமாகப் பேசி தனக்கு ஆதரவாக மனமாற்றம் கொண்டுவர விரும்புகிறான். தனது ஊரிலிருந்து தலைவிக்குக் கொணர்ந்த பூந்துகளைத் தலைவிக்குக் கொடுக்குமாறு தோழியிடம் கொடுக்கிறான்.*

*தலைவன் தரும் அன்பளிப்பை ஏற்க இயலாமல் மறுக்க வேண்டிய சூழ்நிலையை விளக்குகிறாள் தோழி. வலிமைமிக்க பெரும் புலியினைப் போன்று கொடுமை மிக்கவர் என்தமையன் மார்கள். நீயும் வலிமை மிக்க பெரும்புலியினைப் போன்றுள்ளாய். ஆதலால் இருவருக்கும் இடையில் மோதலைத் தவிர்க்க விரும்புவதால் நாங்கள் நீ கொணர்ந்த அருமையான இத்தழையினை ஏற்க இயலாத சூழ்நிலை இன்று. ஆதலால் நீ இத்தழையினை நாளைக் கொண்டுவந்தால் நாங்கள் ஏற்றுக் கொள்ள இயலும் (20) என்கிறாள் தோழி தலைவனிடம். பிறகு அவனது வற்புறுத்தல் காரணமாக ஏற்றுக் கொள்கிறாள். நீ கொண்டு வந்த இக் குறுங் கண்ணிகள் வாடாதவாறு தலையிடம் சேர்த்து, இக்கண்ணிகள் நல்லனவென்று நான் கூறினால், மையுண்ட கண்களையுடைய தலைவி வருந்தாமல் ஏற்றுக் கொள்ள உடன்படுவாள் (21) என்று தலைவனிடம் தோழி கூறி, தலைவன் தலைவிக்குத் தரும் அன்பளிப்பைத் தோழி ஏற்றுக் கொண்டு தலைவியிடம் சேர்ப்பிக்க உதவுகிறாள்.*

*பரணில் உள்ள தலைவியை அணுகும் தோழி தலைவன் தந்த பூந்தழைகளை அவளிடம் கொடுத்துவிட்டு, உன்னால் தன் விருப்பம் நிறைவுறும் என்று எண்ணி உனக்கு அன்பளிப்புகளுடன் வருகிறான் அந்த மலைநாட்டுத் தலைவன். ஆனால் தனக்கு என்ன தேவை என்பதை எனக்கு விளங்கச் சொல்கின்றானில்லை. வேங்கை மரத்தினது நிழலில் நிலை கொள்ளாது நிற்கின்றான். வலிமை மிக்க பெரும் புலியினை ஒத்தவனாகிய இவனது மனக் கருத்துதான் என்னவாக இருக்கலாம் (31) என்று தோழி தலைவியைக் குறும்பாக வினாவுகிறாள்.*

*பரணில் காவல் காக்கும் தலைவியையும் தோழியையும் தினைப்புனத்தில் நுழைந்த மதயானை ஒன்று அச்சுறுத்துகிறது. தக்க நேரத்தில் அங்கு வந்த தலைவன் அம்பு வீசி யானையை விரட்டி பெண்களைக் காப்பாற்றுகிறான். சுனையில் பூத்த நீலோற்பலம் பூக்களையும் மணம் வீசும் அசோக மலர்களையும் கொய்து வந்து தலைவியின் கூந்தலில் சூட்டுகிறான். தலைவி தலைவன் மீது காதல் கொள்கிறாள். தலைவன் தலைவியிடம், வீரம் மிக்க உன் அண்ணன்கள் ஒரே அம்பினால் மற்றவரைக் கொல்வர். ஆனால் காமனின் கணைகளை உனது இருவிழிகளாகக் கொண்டு நீ உன் இரு கண்களால் தாக்கி என்னைக் கொல்கிறாய் (22) சொல்கிறான்.*

*தலைவனும் தலைவியும் தினைப்புனம் அருகில் உள்ள சோலையில் அடிக்கடி சந்தித்து தங்கள் காதலில் கட்டுண்டு இருக்கையில் காலம் கடந்து செல்வதைக்*

*கருத்தில் கொள்ளாமல் இருக்கிறார்கள். ஆனால் தினைப் பயிர் வளர்ந்து முற்றிவிடுகிறது. வேங்கை மரபும் பூக்கத் தொடங்கி அறுவடைக் காலம் நெருங்குவதை உணர்த்துகிறது. காதலர் இருவரும் அதை உணர்ந்தார் இல்லை. ஆனால் தோழிக்குக் கவலை ஏற்படுகிறது.*

*தலைவியைத் தேடி வரும் தலைவனை விரைவில் தலைவியைத் திருமணம் செய்து கொள்ள வைக்கும் ஏற்பாட்டில் இறங்குகிறாள் தோழி. அவனிடம், தலைவனாகிய உங்கள் மீது கொண்ட காதல் உணர்வால், பெண்மை மிகுந்த நிலையில் வாய்திறந்து தலைவி ஆலோலம் பாடி விரட்டுகையில் அவளது குரல் கிளியின் குரல் போலவே இருப்பதால், தினை உண்ணும் பறவைகள் அஞ்சி எழுந்து பறப்பதில்லை. ஆகவே குரல் மாறிவிட்ட இவள் பறவை விரட்டும் தொழிலுக்கு ஏற்றவள் இல்லை என இனி அவளை வீட்டிலேயே நிறுத்திவிடுவர் (3) என்று தோழி தலைவனிடங் கூறுகிறாள். அதேபோல தலைவியிடம், தலைவியே, பனை போன்ற வளர்ந்த இன்பத்தை நாம் எதிர்நோக்கியிருக்க, அதற்கு மாறாகப் பாத்தியில் விளையும் சிறு தினையாக அது மாறிவிடுமாறு, அறுவடைக் காலத்தின் அறிகுறியாக வேங்கை மரம் பூத்துவிட்டது. அறுவடை நெருங்கும் அளவு பயிரும் வளர்ந்துவிட்டது, இனி தலைவனைப் பார்க்க இங்கு வரும் வாய்ப்பு இல்லாது போகும். இற்செறிப்பால் தலைவனிடம் இருந்து பிரியும் நிலை வரப்போகிறது (5) எனத் தோழி தலைவியிடம் கூறுகிறாள்.*

*அவ்வாறே, பகலில் தலைவியை நாடி வந்த தலைவனைக் கண்டு தலைவியை விரைவில் மணம் புரிந்து கொள்ளச் சொல்லி மீண்டும் வலியுறுத்துகிறாள் தோழி. என்ன ஆகப்போகிறதோ! பெருந்தன்மை இல்லாத இந்த இள வேங்கை மரமானது பூ பூத்து தினைக் கதிர் அறுவடை செய்ய வேண்டிய நாள் வருவதைத் தெரிவிக்கிறது. பொன்னாலாகிய அணிகலன் முதலியவற்றைப் பரிசமாக எதிர்பார்க்கும் போர் விருப்பமிக்க வேலினையுடையவர் எந்தையும் என்னையன் மாரும். என்ன கொடுமை. இனிமேல் தலைவிக்கும் உங்களுக்கும் உள்ள நட்பானது கதிர் அறுக்கப்பட்ட புனம் போல வறண்டு விடும் (18) என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்.*

*இனி தலைவி வீட்டில் அடைபட்டுவிடுவாள் என்பதைப் புரிந்து கொள்ளும் தலைவன் எவ்வாறு இனி அவளைச் சந்திப்பது என்று கவலை கொள்கிறான். அவனது துயரை உணர்ந்த தோழி தலைவி இற்செறிப்புக்கு உள்ளானால், வேறு எவ்வாறு சந்திக்கலாம் எனக் குறிப்பு கொடுக்க நினைக்கிறாள். தலைவனே, உயர்ந்த பலாமரங்களின் பக்கத்திலே, மரங்களால் பாத்தியாகப் பிரிக்கப்பட்ட தோட்டத்தின் நடுவே, நிலவொளி படர்ந்தது போன்ற மிகுந்த மணல் வட்டமாகப் பரவியுள்ள பகுதியில், காட்டாற்றுக்கு அருகே உள்ள குளிர்ந்த சோலையில் நானும் தலைவியும் பகலில் விளையாடுவோம் (29) என்று தோழி தலைவனிடம் சந்திக்க வேண்டிய இடத்தைக் குறிப்பால் கூறுகிறாள்.*

*தலைவி இற்செறிப்பு செய்யப்படுகிறாள். அவளைக் காண வரும் தலைவனால் அவளைப் பார்க்கக் கூடும் என்று எண்ணும் இடங்களில் எங்கும் அவளைக் காணாது தவிக்கிறான். மாறாதப் புகழுடைய பாண்டியனின் மதுரை மாநகரைப்*

*போன்ற சிறப்புப் பொருந்திய என் தலைவியினை அவளது விளையாட்டுப் பண்ணையிலும் காணமுடியவில்லையே. அழகிய என் தலைவியை என்னால் எங்கும் காண இயலவில்லையே (4) என்று அவளைக் காண இயலாத வருத்தத்துடன் தனக்குள் சொல்லிக் கொள்கிறான். இரவில் வந்து சந்தித்து விடுவது என்று தீர்மானித்துக் கொள்கிறான். கொடிய விலங்குகள் வாழும் காட்டு வழியில் அவளைத் தேடி இரவில் வருகிறான். இந்நிலையில் தலைவனின் உயிருக்கு ஏற்படக்கூடிய இடர் குறித்து, அவ்வாறு ஏதாவது நிகழ்ந்தால் தலைவியும் உயிர் வாழ விரும்ப மாட்டாளே என்று தோழி அச்சம் கொள்கிறாள்.*

*அவன் இரவில் வருவதைத் தவிர்க்க வேண்டுகிறாள் (இக்கருத்திற்கே திணைமாலை நூற்றைம்பது நூலில் இருக்கும் 31 குறிஞ்சிப் பாடல்களில் 8 பாடல்கள் ஒதுக்கப்பட்டுள்ளது என்பது தோழி எந்த அளவு தலைவனின் இச்செயலைத் தடுக்க நினைக்கிறாள் என்பதைக் காட்டுகிறது). தலைவனே, மிகுந்த இருள் நிரம்பிய நள்ளிரவிலே, நீ வந்தாயானல் அதனால் உனக்கு இடையூறு நேரும் எனத் தலைவி கலங்குவாள் அல்லவா? அதனை நீ எண்ணிப் பார்க்க வேண்டுகிறேன் (6). மதம் கொள்ளும் யானைகளை, பெரும் புலிகளை, கொடிய நாகங்களை எதிர் கொள்ளக்கூடிய வழியில் இரவில் நீ வருவதை என் தலைவியால் தாங்கிக் கொள்ள இயலாது (7, 11, 13,10). உன் நலனுக்காகத் தலைவி வருந்தும்படி அவளைக் காண இரவில் வரவேண்டாம். அவ்வாறு வருவீர் என்றால் அதைத் தாளாது இனி உயிர் வாழ மாட்டாள் தலைவி (25, 26) என்று பலவாறு கூறி தோழி தலைவனைத் தடுக்கிறாள்.*

*தலைவனைக் காணாது அவனை எண்ணி உடல் நலிவுறுகிறாள் தலைவி. அவளுக்கு ஏற்பட்டிருக்கும் நோயை நீக்க வேலவனின் வெறியாட்டுக்கு ஏற்பாடு செய்கிறாள் செவிலித்தாய். அவளுக்குத் தலைவியின் நிலைக்கான காரணத்தை விளக்குகிறாள் தோழி. வெறியாட்டும் பொருட்டு வரவழைத்த வேல் கைக்கொண்ட பூசாரி சென்றுவிடட்டும். பலியிடக் கொண்டுவந்துள்ள ஆட்டுக் குட்டியினையும் விடுவிக்கவும், கடவுளுக்குப் படைக்கக் கொண்டு வந்துள்ள கள்ளினையும் அதனை உண்ணக் காத்திருக்கும் மக்களுக்குக் கொடுத்துவிடவும் (12). தலைவியின் நெஞ்சத்தைக் கவர்ந்தவன் ஒருவன் உள்ளான் செவிலித்தாயே! தினைப்புனம் காக்கையில் மதங்கொண்ட யானை ஒன்று தலைவியைத்தாக்க வந்த வேளையில் அதனைத் தாக்கிவிரட்டி தலைவியைக் காப்பாற்றினான் ஒருவன். அக் கட்டழகன் தலைவியின் உள்ளத்தில் இடம் பிடித்துவிட்டான் (2), யானையிடம் இருந்து காப்பாற்றிய தலைவனைத்தான் தலைவி மணப்பாள் (14) என்று தோழி செவிலிக்குக் கூறுகிறாள். குற்றமில்லாத என் தலைவிக்கு நலக்குறைவு எதுவும் இல்லை (காட்டாற்று நீரில் அடித்துச் செல்லப்பட்ட பொழுது, பாய்ந்து சென்று காப்பாற்றிக் கரை சேர்த்த அவளது காதலனைத் தவிர்த்து வேறு எவரையும் உறுதியாகத் தலைவி தன் வாழ்க்கைத் துணையாக ஏற்க மாட்டாள் என்று செவிலியிடம் தோழி கூறும் ஒரே ஒரு பாடலின் (12) கருத்து மட்டும் கதைப்போக்கில் ஏற்படுத்தக் கூடிய முரண் கருதித் தவிர்க்கப்பட்டிருக்கிறது).*

*தலைவியைத் தேடி தலைவன் வருவதைத் தாயும் அறிந்து விடுகிறாள், நிலை மோசமாவதை உணர்கிறாள் தோழி. எனவே தலைவனிடம், தலைவனே, இதற்கு*

*முன் தலைவியை மணவாது நாளைக் கழித்தீர்கள். இனிமேலாகிலும், காலம் தாழ்த்தாது மணந்து கொள்வீர்கள் என்று எண்ணி உங்களுக்கு ஒன்று சொல்கின்றேன். இடர் கண்டு வெறுக்கத்தக்க இம்மலை வழியாகத் தலைவியைத்தேடி நீங்கள் வருவதை எங்கள் அன்னை பார்த்துவிட்டதால் எங்களைச் சினந்தாள். இனி எங்கள் மீது கண்காணிப்பை அதிகப்படுத்துவாள். ஆகையால், தலைவியை விரைவில் மணமுடிப்பீர்களாக (27) என்று தோழி தலைவனிடம் கூறினாள். தலைவனும் தனது ஊரைச் சேர்ந்த சான்றோர்களைத் தனது சார்பாகத் தலைவியின் இல்லத்திற்கு அனுப்புகிறான்.*

*ஆனால், தலைவியின் குடும்பத்தார் தலைவன் தலைவியை மணமுடித்துத் தருமாறு முன்வைத்த கோரிக்கையை ஏற்கவில்லை. தலைவியை அடைய முடியாத ஆற்றாமையால் மடல் ஊரத் துணிந்த தலைவன் அதைத் தோழிக்குத் தெரிவிக்கிறான்(16). அன்று பூத்த மணக்கும் சுரபுன்னை மலர்களைச் சூடி, அதன் தேனால் நனையப்பட்ட கூந்தலையுடைய தலைவி, அணிகலனோடு கூடிய தன்னுடைய மார்பினை எனக்குக் கொடுத்து, என்னோடு சேரும் காலம் வரைக்கும், மடலேற அணிந்த எலும்பாற் செய்த அணிகலன் என் மார்பிலிருந்து நீங்கப் போவதில்லை என்று உனக்குச் சொல்கிறேன். அதற்கு மாறாக வேறு சொல் கூறமாட்டேன். பனைமடலால் செய்யப்பட்ட குதிரையின் மீதே அமர்ந்து தலைவியின் தெரு வழியே மடல் ஊருதற்குத்துணிந்து விட்டேன் என்று தலைவன் தோழியிடம் கூறுகிறான்.*

*தலைவனும் தலைவியும் காதல் கைகூடாமல் துயர் கொள்வதைச் சகிக்கமாட்டாத நற்றாய் தலைவனின் கோரிக்கையை ஏற்றுத் தலைவியை அவனுக்கு மணமுடிக்குமாறு தலைவியின் தந்தைக்கும் தமையனுக்கும் அறிவுறுத்துகிறாள்(15). தலைவன் மன்றல் விரும்பி அனுப்பிய, குறையேதும் கூறவியலாத சான்றோர்களினது வருகையினை ஏற்றுக் கொண்டவர்களாக, மறுக்காது நீர் வார்த்துக் கொடுத்தலாகிய மண முறையில் மகளை மணம் செய்து கொடுத்தல் நல்லது. அல்லாமல், மகளின் தளர்ச்சியுறாத எழிலும் முலைகளுமாகிய இரண்டினுக்கும், கடலாற் சூழப்பட்ட இந்த உலகைக் கொடுப்பினும் பொருத்தமான விலையாகுமோ? காதலினையே மதிக்கவேண்டும் என்று நற்றாய் தலைவியைத் தலைவனுக்கு மணமுடிக்க முடிவெடுக்கிறாள்.*

***குறிப்பு - கதையாகக் கோர்க்கப்பட்ட பாடல்களின் வரிசை, பாடல் எண்களுடன் கொடுக்கப்பட்டுள்ளது:***

*1. பெண்களே நான் வேட்டையாடிய மான்கள் அம்புகளுடன் இப்பக்கம் வந்ததைப் பார்த்தீர்களா?*

*9. வேட்டையாடிய விலங்கைக் கண்டீர்களா என்று கேட்கச் சென்ற இடத்தில் தலைவி என் உள்ளத்தைக் கவர்ந்து கொண்டுவிட்டாள்*

*30. தினைப்புனம் காக்கும் தலைவியின் அழகில் என்மனம் கட்டுண்டு கிடக்கிறது என்று தலைவன் தோழனிடம் கூறுகிறான்*

*23. காதலியின் முலைகள் மேல் கொண்ட விருப்பினால் தன் நலனும் பெருமையும் அழிந்துவிட்டதாகத் தலைவன் கூறுகிறான்*

*28. தலைவியைக் கண்ட தோழன் இவளை விட்டு எவ்வாறு தலைவன் பிரிந்து வந்தான்? அது அவனது உள்ளத்தின் உறுதியைக் காட்டுகிறதோ என எண்ணி வியக்கிறான்*

*19. தலைவியைக் காண்பதே தன்னை வாட்டுவதாகத் தனது ஆற்றாமையைத் தோழியிடம் தலைவன் உரைத்தல்*

*24. பிறர் அருமை அறியாத தனது அண்ணன்களைப் போன்று தலைவிக்கும் எனது வருத்தம் புரியவில்லை என்கிறான் தலைவன்*

*17. நான் தலைவியைக் குறித்து நன்கே அறிவேன் என்று தலைவன் கூறுவது*

*8. தலைவன் தோழியிடம் நயமாகப் பேசி தனக்கு ஆதரவாக மனமாற்றம் கொண்டுவர விரும்புதல்*

*20. தலைவன் தரும் அன்பளிப்பை ஏற்க இயலாமல் மறுக்க வேண்டிய சூழ்நிலையை தோழி விளக்குகிறாள்*

*21. தலைவன் தலைவிக்குத் தரும் அன்பளிப்பைத் தோழி ஏற்றுக் கொண்டு தலைவியிடம் சேர்ப்பிக்க உதவுகிறாள்*

*31. உன்னால் தன் விருப்பம் நிறைவுறும் என்று எண்ணி உனக்கு அன்பளிப்புகளுடன் வருகிறான் தலைவன் என்கிறாள் தோழி*

*22. வீரம் மிக்க உன் அண்ணன்கள் அம்பினால் மற்றவரைக் கொல்வர், ஆனால் நீ உன் கண்களால் என்னைக் கொல்கிறாய்*

*3. தலைவனே உன் உறவால் தலைவியின் இயல்பு மாறியதைக் கண்டு இனி அவளைத் தினைப்புனம் காக்க அனுப்பாமல் வீட்டில் இருத்திவிடுவார்கள்*

*5. தலைவியே அறுவடை நெருங்கும் அளவு பயிர் வளர்ந்துவிட்டது,*
*இனி தலைவனைப் பார்க்க இங்கு வரும் வாய்ப்பு இல்லாது போகும் எனத் தோழி தலைவியிடம் கூறுகிறாள்*

*18. பகலில் தலைவியை நாடி வந்த தலைவனைக் கண்டு தலைவியை விரைவில் மணம் புரிந்து கொள்ளச் சொல்வது*

*29. பலாமரக் காட்டருகில், காட்டாறு பாயும் சோலைக்கருகில் உள்ள மணல் வெளியில் நானும் தலைவியும் பகலில் விளையாடுவோம் என்று தோழி தலைவனுக்குக் குறிப்பு கொடுக்கிறாள்*

*4. அழகிய என் தலைவியை என்னால் எங்கும் காண இயலவில்லையே*

*6. தலைவனே இரவில் வருவதால் உனக்கு ஏற்படக்கூடிய இடையூற்றுக்குத் தலைவி வருந்துவாள் என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்*

*7. தலைவனே நீ இரவில் நீ வருவதை என் தலைவியால் தாங்கிக் கொள்ள இயலாது என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்*

*11. இரவில் மதம் கொண்ட யானைகள் உலாவும் வழியாகத் தலைவியைக் காண வரவேண்டாம்*
*13. பாம்புகளும் யானைகளும் நிறைந்த காட்டு வழியின் வழியே இரவில் தலைவிக் காண வரவேண்டாம் என்று தோழி கூறுகிறாள்*
*10. தலைவனே தேவர்கள் உலாவும் இடங்கள் வழியாகத் தலைவியைக் காண வருவதைக் கைவிடுங்கள்*
*25. உங்கள் நலனுக்கா தலைவி வருந்தும்படி அவளை இரவில் காண வரவேண்டாம்*
*26. உங்கள் நலனுக்கா தலைவி வருந்தும்படி அவளை இரவில் காண வரவேண்டாம்*
*12. செவிலியிடம் வெறியாடலைத் தவிர்க்கும்படியும், தலைவி அவளது காதலனை மணக்க விரும்புகிறாள் என்றும் தோழி அறிவுறுத்துகிறாள்*
*2. தலைவியின் நெஞ்சத்தைக் கவர்ந்தவன் ஒருவன் உள்ளான் செவிலித்தாயே!*
*14. தினைப்புனம் காக்கையில் மதங்கொண்ட யானையிடம் இருந்து காப்பாற்றிய தலைவனைத்தான் தலைவி மணப்பாள் என்று தோழி செவிலிக்குக் கூறுகிறாள்*
*27. தலைவிக்காக நீ வருவதைத் தாய் அறிந்து கொண்டாள், இனி காவல் மிகுதியாகும் எனவே தலைவியை விரைவில் மணம் முடிப்பாயாக*
*16. தலைவியை அடைய முடியாத ஆற்றாமையால் மடல் ஊரத் துணிந்த தலைவன் அதைத் தோழிக்குத் தெரிவிக்கிறான்*
*15. தலைவனின் கோரிக்கையை ஏற்றுத் தலைவியை அவனுக்கு மணமுடிக்குமாறு நற்றாய் தலைவியின் தந்தைக்கும் தமையனுக்கும் அறிவுறுத்துகிறாள்*

# *அன்பின் ஐந்திணை - நெய்தல்*

*கணிமேதாவியார் இயற்றிய திணைமாலை நூற்றைம்பது நூலில் முதலில் இடம் பெறும் குறிஞ்சித் திணைப்பாடல்களை அடுத்து 'இரங்கலும் இரங்கல் நிமித்தமும்' ஒழுக்கம் குறித்த 31 வெண்பாக்கள் (பாடல்கள் 32 -62) நெய்தல்திணைப் பாடல்களாக இடம் பெறுகின்றன. இப்பாடல்களிலும் நெய்தல் நில இயற்கைக் காட்சிகளும், அம்மக்களின் வாழ்வியலும் அழகுற விவரிக்கப்படுகிறது. நெய்தல் திணையின் முதற்பொருள்(நிலமும் பொழுதும்), கருப்பொருள்(நிலத்தின் தனித்தன்மையைக் குறிப்பன), உரிப்பொருள்( அந்த நில மக்களின் ஒழுக்கமும் வாழ்வு முறையும்) என இம்மூன்று பொருள்களும் பாடல்களில் வழி தெளிவாக அறிந்து கொள்ள முடியும்.*

*இந்த நெய்தல்திணைப் பாடல்களிலும், சங்கப்பாடல்களில் தோழிக்குத் தனிச் சிறப்புண்டு என்பதற்கு இணங்க, தலைவன் தலைவியை மணந்து (வரைவு) கொள்ளாமல் காலம் தாழ்த்தும் பொழுது தோழி தலைவனிடம் தலைவியை மணந்து கொள்ள வரைவு கடாதல் என்ற நோக்கில் தலைவியைச் சந்திக்க அவன் வரும் இடர் தரும் வழி, ஊரில் அலர் துவக்கம், வரைவு வேட்கை, குறியிடம் மறுப்பது, பகற்குறி, இரவுக்குறி, அறத்தொடு நிற்றல், ஆற்றுவித்தல், தூது செல்லல் என்றும்; வரைவு மலிதல் உதவிகள் செய்வது என்றும் தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே காதல் துவங்கி வளர்ந்து கைகூடுவதில் தோழியின் பங்களிப்பு மிகுதி.*

*இந்நூலின் நெய்தல் பாடல்களை குறிஞ்சி நிலப் பாடல்களுடன் ஒப்பிடுகையில் தலைவிக்குக் காவல் மிகுதி, இற்செறிப்பு, வெறியாட்டு ஏற்பாடு, உடன்போக்கு போன்ற குறிஞ்சிப் பாடல்களில் காணப்பட்ட கருத்தாக்கங்களை நெய்தல் பாடல்களில் காண இயலவில்லை. ஊர் மக்களின் அலர், அதனை தவிர்க்க பகலில் சந்தித்த காதலர்கள் இரவில் சந்திக்க முற்படுதல், இருப்பினும் அலர் தொடர்தல், அதனால் தோழி தலைவனிடம் இரவிலும் வரவேண்டாம் என்று கூறி தலைவியை மணக்க ஏற்பாடு செய்யச் சொல்லல் என்ற பாடல்களே மிகுதி. 'கனை இருள் வாரல்!' என்ற கருத்தைத் தொடர்ந்து பல பாடல்களில் தோழி தலைவனிடம் கூறிக்கொண்டே இருக்கிறாள்.*

*தோழி இடம் பெறாத பாடல்கள் எண்ணிக்கையில் மிகவும் குறைவு. தோழி வரைவு கடாயது என்பது 13 பாடல்களில் (பாடல்கள்: 34, 35, 36, 37, 43, 46, 50, 52, 53, 54, 55, 57, 59) காட்டப்படுகிறது. அதாவது மொத்த நெய்தல் பாடல் எண்ணிக்கையைக் கணக்கில் கொண்டால், 40 விழுக்காட்டுப் பாடல்கள் இந்த வகையில் அமைந்துள்ளன. தலைவன், தலைவி, தோழன், தோழி, செவிலித்தாய் ஆகியோர் மட்டுமே பாடல்களில் நேரடியாக இடம் பெறுகிறார்கள். தலைவியின் தந்தை, தமையன் மார் போன்றவர் குறித்து குறிப்புகள் மட்டுமே காட்டப்படுகின்றது. செவிலித்தாயும் இரு பாடல்களில் மட்டுமே*

*காட்டப்படுகிறாள். குறிஞ்சி நிலத் தலைவியைவிட நெய்தல் தலைவி கட்டுப்பாடுகள் அதிகம் இன்றி இருக்கிறாள். தலைவியைச் சந்திக்க இயலாத தலைவன் அதைக் கடற்கரை நண்டிடம் கூறிப் புலம்புவதும், தலைவனைச் சந்திக்க இயலாத தலைவி அதைக் கடல் அலைகளிடம் சொல்லிப் புலம்புவதும் என இரு பாடல்கள் காட்சியில் சிறப்பு மிக்கப் பாடல்களாக அமைந்துள்ளன.*

*திணைமாலை நூற்றைம்பது நூலின் நெய்தல் திணைப் பாடல்கள் அனைத்திலும் குறிப்பிடப்படும் தலைவனும் தலைவியும் ஒருவரே என்றோ, அவர்களின் தோழியும் தோழனும், செவிலித்தாயும், தந்தையும் தமையன்களும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர் என்றோ, அல்லது அவர்கள் வாழிடம் குறிப்பிட்ட நெய்தல் நில ஊர் என்றோ கூறுதலும் இயலாது. இருப்பினும், 31 நெய்தல் பாடல்களையும் ஒரே தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே நிகழும் காதலாகக் கொண்டு ஒரு வரிசைப்படுத்தி அவற்றிலிருந்து ஒரு கதையும் உருவாக்கலாம். அத்தகைய முயற்சியே இக்கட்டுரை. வரிகளுக்குப் பின்னர் அடைப்புக் குறிகளுக்குள் கொடுக்கப்படும் எண், திணைமாலை நூற்றைம்பது நூலில் உள்ள பாடல்களின் வரிசை எண்.*

*இரங்கலும் இரங்கல் நிமித்தமுமாகிய ஒழுக்கமும் கொண்ட நெய்தல் நிலத்தில், கடற்கரையோரப் பகுதியில் நிகழ்வது இக்கதை.*

*அது ஓர் அழகிய நெய்தல் நிலம். குளிர்ந்த கடல் நீரும் அதில் தொடர்ந்து ஒரு அலை வந்து கரையில் மோதித் திரும்பும் முன்னர் மேலும் இரு அலைகள் அதை விரட்டிவந்து மோதிச் செல்லும் வளப்பம் நிறைந்த கடற்கரை. பகலிலும் இரவிலும் மக்கள் கடற்பகுதியில் அலைந்து அலைகளுக்குப் போட்டியாக ஆரவாரித்துக் கொண்டு நடமாடியவண்ணம் உள்ளார்கள். அலைகளால் அள்ளி வரப்பட்டு கடற்கரையில் ஒதுக்கப்பட்ட சிப்பிகள் வாய்பிளந்து காட்டுவதால் வெளிப்படும் முத்துக்களின் ஒளி இரவில் இருளையும் விரட்டக் கூடியதாக இருக்கிறது. அவற்றை அள்ளிச் செல்ல விரும்பும் மக்களின் நடமாட்டத்தை இரவிலும் காணக்கூடியதாக உள்ளது.*

*கடற்கரையில் உப்பங்கழிகளும் அவற்றைச் சுற்றி சூழ்ந்துள்ள கடற்கரையின் பசுமை நிறைந்த கானல் சோலைகளும், நீல நிறக் கடலும் இவற்றுக்கு மாற்றாக மிக வெண்மையான மணல் நிரம்பிய கடற்கரை மணலும் கண்ணைக் கவரும் வண்ணம் உள்ளது. உப்பங்கழிகளில் சுறாமீன்கள் சுழன்று விளையாடி நீந்தியவண்ணம் உள்ளன. கடற்கரை எங்கும் அன்று பூத்த மலர்களுடன் மணம் மிக்க புன்னை மரங்களும், ஞாழல் மரங்களும், நெருக்கமாக அடர்ந்து வளர்ந்த தாழை மரங்களும், உயர்ந்து வளர்ந்த பனை மரங்களும் உப்பங்கழிகளைச் சுற்றி அடர்ந்த தில்லை மரங்களும் நீர் முள்ளிச் செடிகளும் வளர்ந்துள்ளது. கடற்பகுதியில் வீசும் புலால் நாற்றத்தைப் புன்னை மரத்தின் மலர்களின் இனிய நறுமணம் நீக்கிக் கொண்டிருக்கிறது. எங்கும் நெய்தல் மலர்கள் பூத்துள்ளன. அங்கு மீட்டாமலே மேன்மையான இசையை தேன்வண்டுகள் பொழிந்த வண்ணம் உள்ளன.*

*அவ்வூரின் நுளையர் குடும்பத்தில் அண்ணன்களும் ஓர் தங்கையும் எனச் சிறு குடும்பம் உள்ளது.  அந்த  அண்ணன் மார் படகு செலுத்தி, நுட்பமாகப் பின்னிய வலையை வீசி மீன் பிடிக்கும் தொழிலில் மிக வல்லவர்கள்.   அவர்கள் ஆழ்கடலில் அமிழ்ந்து  முத்துக்களும்  சங்குகளும் கூட பிடித்து வருவார்கள்.  அவர்கள் அவ்வாறு வலை வீசி கடலில்  இருந்து முகந்து  வரும் மீன்களை வெய்யிலில்  கருவாடாக உலர வைத்து, அவற்றைப் பறவைகள் கொத்திப் போகாமல் காவல் காப்பது தங்கையின் வேலை. இவளே இக்கதையின் தலைவி. இவள்  வேலை ஒத்திருக்கும் மிகப் பெரிய நீண்ட கண்களையும், மருண்ட பார்வையையும், காதில் சிறிய சுறாமீன்கள் வடிவில் வார்க்கப்பட்ட மகரக்குழை  காதணிகளையும், கையில் முத்துக்கள்  பதித்த வளையல்களையும் அணிந்திருக்கிறாள்.  ஆகவே அவளை நாம் முத்தழகி என்றும் பெயர் சூட்டி  அழைக்கலாம்.*

*தலைவியின் அண்ணன்கள் வலைவீசி மீன் பிடிக்கக் கடலுக்குச் சென்று விட்டார்கள். கடற்கரை சோலைப் பகுதியில் மீன்கள் உலர்த்தப் பட்டுள்ளன. அருகில் அடப்பங் கொடிகளில் முளைப்பாலிகையினைப் போல ஒன்றாகக் கூடி மலர்கள் பூத்திருக்கின்றன.   அவற்றின் மீது உடலில் இருந்து நீக்கிய கவசம் போல மீன் வலைகள் வெய்யிலில் உலர்த்தப் பட்டிருக்கின்றன. அப்பகுதியில் தலைவியும் அவளது  இணைபிரியாத தோழியும் கருவாடுகளை உலர்த்தி அவற்றைக் காவல் காத்த வண்ணமும், அவற்றை வாங்க விரும்புவோருக்கு  விலை  கூறி விற்றவாறும் பகல் பொழுதை ஓட்டிக்  கொண்டிருக்கிறார்கள்.*

*அந்த கடற்கரை ஊரின் தலைவனின் படகுக்  கூட்டம் கரையை நோக்கி வருகிறது. அமைதி என்பதையே அறியாத மன்னவன் ஒருவனின் படை ஒன்று போருக்குச் செல்லுகையில் எவ்வளவு ஆரவாரம் இருக்குமோ அது போல ஆரவாரம் கடற்கரைப் பகுதியில் ஏற்படுகிறது.   அலை ஓசை போரின் பறை ஓசை போல முழங்க , அலைகள் யானைப் பாகனாகவும், நீண்ட தோணிகள் யானைப் படைகள் போலத் தோற்றமளிக்க, வானில் சுற்றும் பருந்துகள் புரவிகள் போல விரைந்து பின் தொடர, அந்த ஓசையில் அச்சமுற்ற  கடற்கரையினை அடுத்துள்ள சோலையில் ஆர்த்தெழும்   பறவைகள்  ஒருசேர அலறலுடன் வானில் எழும்பிட படைவீரர்களுடன் மன்னன் போருக்குச் செல்லும் காட்சி போல இருக்கிறது அது. அந்தத் தலைவனின் தோற்றத்தால் கவரப்படுகிறாள் தலைவி.*

*அவள் பார்வை கருவாடுகளைக் காவல் செய்வதை விட்டு அவன் செல்லும் இடமெல்லாம் தொடர்ந்து அவனையே காவல் செய்யத் துவங்குகிறது. தலைவியின் அழகைக் கண்டு மயங்கிய தலைவனும் அவள் பார்வை தன்னை சிறைபிடிப்பதை உணர்கிறான்.  அன்று பூத்த ஞாழல் மலர்களைக் கொத்தாகப் பறித்து தலைவியின் கையில் திணிக்கிறான்.  இவர்களின் செயல்களை தோழியும் நோட்டமிட்டவாறே  எதையும் அறியாதவள் போல உடன் இருக்கிறாள்.*

*தனது இடத்திற்குத் திரும்பிய தலைவன் தலைவியின் கவர்ந்திழுக்கும் பார்வை தவிர வேறொரு  சிந்தனையும் இன்றி அதில் மூழ்கியிருக்கிறான்.  தலைவனிடம் கண்ட மாறுதலை உணர்ந்து தோழன் அவனிடம்  பேச்சு கொடுக்கிறான்.*

*கடற்கரையில் மீன் உலர்த்திக்  காவல் காக்கும் தலைவியின் கண்கள் என்மீது பாய்ந்து என்னையே வட்டமிட்டு என்னை அவளது காவலுக்குள் வைத்தது என்று தலைவன் தோழனிடம் கூறுகிறான் (32). அவளது வெண் முத்துப்பற்கள் சிந்தும் புன்முறுவலைக் காணுகையில்  மனம் துவண்டு வருந்துகிறேன் என்கிறான் (33). தலைவியின் ஒரே பார்வையில் கவிழ்ந்துவிட்ட தலைவன் ஒரு பண்பாளனா என்ற எண்ணம் தோழனின் மனதில் தோன்றுகிறது.*

*அவனது மனதின் எண்ணத்தைப் புரிந்து கொண்ட தலைவன் தலைவி குறித்து மேலும் அடையாளம் கூறி அவனையே சென்று பார்த்துக் கொள்ளச் சொல்கிறான். கடல் அலைகள் ஆர்ப்பரித்துத் திரும்பிச் சென்ற வண்ணம் அலைமோதும் கரையினிடத்தே, கரையில் அலையும் நண்டுகளைக் கால்களினாலே  கண்டு பிடித்தவாறு, கரை அருகே  மலர்ந்துள்ள நெய்தற் பூக்களைக் கொய்தவாறு நிற்கும், மிக நீண்ட கண்களை உடையவள் எனக்குக் காதல் மயக்கத்தை உண்டாக்கியவள். அவள் அந்த பரதவரின் மகளாகிய என் தலைவி (60)  என்று தலைவன் தோழனிடம் கூறுகிறான். தலைவனைக் கவர்ந்தவளைத்தான் பார்த்துவிடுவோமே  என்ற எண்ணத்தில் தலைவன் குறிப்பிட்ட அடையாளங்கள் உதவியுடன் கடற்கரைக்கு வந்து அவளைக் கண்டு வியக்கிறான் தோழன்.*

*ஒப்புமை கூற இயலாத இத்தகைய சிறந்த அழகியான தலைவியைக் கண்ட பிறகும், இணையற்ற அவளது இரு பெரிய கண்களைப் பார்த்த பின்னரும் கூட  அவளை விட்டு தனது உறவுகளை நாடி தனது இடத்திற்குத் திரும்பிய தலைவன் மன உறுதி கொண்டவன் மட்டுமல்ல  பண்பில் சிறந்தவன்தான் (45) என்று தோழன் மனதில் எண்ணம் ஏற்படுகிறது. மீண்டும் தலைவனிடம் செல்கிறான்.*

*ஒரு பொருட்டாக அக்கறை செலுத்தாதவர்களும் கூட  காண நேர்ந்தால் இயற்கையழகு நிறைந்த தெய்வமாகக்  காட்சி அளிக்கக் கூடியவள் தலைவி. அத்தகையவளை கருத்தாகக் காக்கும் எண்ணத்தைக் கைவிட்டு, அழகிய கடற்கரைச் சோலையினிலே ஓர் அணங்கு போலத் தோற்றமளிக்கும் தலைவியை அவர் குடும்பத்தார் பிறர் துன்புறுவாரே என்ற கருத்தின்றி கட்டவிழ்த்து விட்டுள்ளார்கள் என்று தோழன் தலைவனிடம் தலைவியின் சிறப்பைப் பாராட்டிக் கூறுகிறான் (47).*

*மீண்டும் தலைவியைக் காண விரும்பி கடற்கரை பக்கம் புரவி பூட்டிய தனது தேரில் செல்கிறான் தலைவன், அங்கு தோழியைக் காணுகிறான். தான் தலைவியைச் சந்திக்க விரும்புவதைக் கூறுகிறான்.  தலைவியின் செவ்வாயின் முத்துப்பற்கள் முன்னர், அவளது  கைவளையில் பதிக்கப்பட்டிருக்கும் உண்மையான முத்துக்கள் போட்டிப் போட இயலாமல் தோற்கும் எனத் தலைவன் தலைவியின் அழகைப் போற்றுகிறான் (42).*

*அவர்களது  காதல் நாடகத்தை முன்னர் பார்த்துக் கொண்டிருந்த தோழிக்குத் தலைவன் தலைவிக்கு ஏற்றவன்தான் என்ற எண்ணம் வருகிறது. அவனுக்கு உதவ முன் வருகிறாள்.  தலைவனே, உயர்ந்த தாழை மரங்களும் ஞாழல் மரங்களும் அடர்ந்த சோலை தலைவி விளையாடும் இடம், அங்கு அவளைச் சந்திக்க வாய்ப்புள்ளது (44, 58).  அங்கு இல்லாவிடில், கடற்கரைக் கானல் அருகில்*

*கருவாடுகளை உலர்த்திக் காயவைத்துக் காவல் காத்துக்கொண்டிருக்கும் தலைவியை பகற்பொழுதில் அங்கு காணலாம் எனத் தோழி தலைவனுக்குக் குறிப்பு கொடுக்கிறாள் (51).*

*தலைவனும் தலைவியும் சந்திக்கத் துவங்குகிறார்கள். நாட்கள் கடக்கின்றன. தலைவன் தலைவியைப் பார்க்க வந்து செல்வது பிறர் கவனத்திற்கு உள்ளாகிறது. ஊரில் அலர் எழுகிறது. நம் மீது கூறப்படும் அலர் வளர்ந்து, மழைமேகம் மூளுவது போல எங்கும் சூழ்ந்து மின்னல் இடியுடன் பொழிவது போல, பலநாளாக என்னை வருத்துகிறது என்று தலைவி தனது ஆற்றாமையைத் தோழியிடம் வெளிப்படுத்துகிறாள் (41). இதனால் அவர்கள் சந்திக்க இயலாத நிலை ஏற்படுகிறது.*

*கடற்கரைக்குச் செல்லும் தோழி அங்கு தலைவனைச் சந்திக்கிறாள், தலைவி இனி வரமாட்டாள் என்று சொல்கிறாள். நிலையைப் புரிந்து கொள்ளும் தலைவன் தோழியை நோக்கியவாறு, கடற்கரையில் விளையாடும் நண்டிடம் பேசுவது போல, துணையுடன் கூடிக்களிக்கும் நண்டே, எனது பிரிவுத்துயரை உன்னிடம் சொல்லி என்ன பயன் என மனம் வெதும்புகிறான். தோழிக்கு அவனது நிலை காண்பதற்கு மிகவும் இரங்கத் தக்கதாக இருக்கிறது. அதை அவள் தலைவியிடம் வந்து தெரிவிக்கிறாள். தனது பெண் துணையோடு இன்புற்று விளையாடும் ஆண் நண்டினையும், என்னையும் தலைவன் பார்த்து, என் இனிய துணைவியாகிய தலைவியோடு இவ்வாறு கூடிக் களிக்க எனக்கும் வாய்ப்பு கிடைக்குமோ? என்று தனக்குத் தானே பேசிக் கொண்ட தலைவன்; அந்த ஆண் நண்டினை நோக்கி நீ உனது இனிய துணையாகிய பெட்டை நண்டுடன் இன்புற்று விளையாடுதலாகிய ஒன்றையே செய்திருப்பாயானால் பிரிவுத்துன்பம் என்ன என்பதனை அறிந்திருக்கமாட்டாய், என் பிரிவுத்துயரை உன்னிடம் கூறுவதால் என்ன பயன்? என நண்டிடம் பேசுவது போலத் தலைவன் தனது கருத்தை எனது கவனத்திற்கு சொல்லிவிட்டுப் புரிந்து கொண்டவனாய் மனம் வெறுத்து விலகிச் சென்றுவிட்டான் (40) என்று தோழி தலைவியிடம் கூறுகிறாள் .*

*தலைவனின் நினைவால் தலைவியும் இரவில் உறக்கமின்றி புலம்புகிறாள். என்னைப் போல உறக்கம் வாராது நீ ஏன் அலைமோதுகிறாய். நான் படும் துன்பத்தைப் போன்ற இந்த உறங்கா நிலையாகிய துன்பத்தை உனக்குக் கொடுத்தவர் யாரென்று சொல்வாயாக என்று தலைவி கடலை நோக்கிக் கேட்கிறாள் (38).*

*இவர்கள் படும் துன்பத்தைக் காணச் சகிக்க முடியாமல் தோழி இரவில் அவர்கள் சந்திக்க ஏற்பாடு செய்கிறாள். தலைவனைக் கண்டு, தலைவனே இரவில் நீ தலைவியைக் காண வருவாயானால் உன் நினைவால் கலங்கி இருக்கும் அவளது கண்களைக் காண இயலும் (34). கடற்கரையில் உள்ள புன்னைமரச் சோலையில், அன்றில் பறவைகள் பாடும் உயர்ந்த பனைமரத்தைக் கொண்ட வீட்டின் முற்றத்தின் மணல் பரப்பில் இரவில் தலைவியைச் சந்திக்கலாம் எனத் தோழி தலைவனிடம் கூறுகிறாள் (56).*

*தலைவனும் வருகிறான், இரவில் அவர்கள் சந்திக்கிறார்கள். தலைவன் இரவில் வருகையில் அவனது புரவியின் குளம்புத் தடயம் மணலில் அழுந்தி அவன் வந்து சென்றதை அறிவிக்கிறது. தலைவியினை இரவினில் காணவருவதைப் பிறர் காணநேரிட்டால் அலர் உண்டாகும் என்று அவன் இனி இரவிலும் வந்து தலைவியைக் காண வேண்டாம் என்று தோழி கூறுகிறாள் (48). பகற் பொழுதில் நீ வந்தாய் எனில் பழிச் சொற்கள் பல வரும். அப்பழிச்சொற்களைத் தவிர்க்க விரும்பி இரவில் நீ வந்தாய் என்றால் வருவதற்கு இடையூறுகளும் பல உண்டு (59). அலர் தவிர்க்க விரும்புவாயானால் இரவிலும் மக்கள் நடமாட்டம் உள்ள பட்டினத்தில் இரவில் தலைவியைக் காண வர வேண்டாம் (49). உனது செய்கையால் ஊரில் அலர் மிகுவதால் அவள் மிகுந்த துயருடன் கண்ணீர் சிந்தியவாறு இருக்கிறாள். நீ வந்தாயானால் அவள் உயிர் துறப்பாள் (55). இரவில் நீ தலைவியைச் சந்திக்க வரும் வழி இடர்கள் மிக்க வழி, அதன் வழி வருவது துன்பம் தரும், உமக்கு ஒன்று நேருமாயின் தலைவி உயிர் வாழமாட்டாள். ஆகவே நீ தலைவியைப் பார்க்க வர வேண்டாம் (61) என்று தலைவனிடம் தோழி கூறுகிறாள்.*

*தலைவி மீது ஊரார் அலர் தூற்றாதவாறு இருக்க நீ இரவும் பகலும் தலைவியைக் காண விரும்பி இப்பக்கம் வரவேண்டாம் (35). இனி வருவாய் என்றால் தலைவியை மணமுடிக்க ஓர் நாள் குறித்து வந்து அவளை மணந்து கொள்ளுதலே நீ அவளுக்குச் செய்யும் நன்மையாக இருக்கும் (43). தலைவிக்குத் துன்பம் நீங்குமாறு நீ அளித்த வாக்குறுதிக்குக் கடல் சான்றாக உள்ளது. அவளை ஊரார் அலர் தூற்றாதவாறு மணம் செய்து கொள்வாயாக (36, 37). தலைவனே என் உதவியுடன் நீ இனி தலைவியைச் சந்திக்கத் தேவையில்லை, அவளை மணமுடித்து உன்னவள் ஆக்கிக் கொள் (57). தூக்கக் கலக்கத்தில் கண்ட கனவு போன்று விளங்கிக் கொள்ள முடியாத, வகையில் வருகின்ற உனது வரவை நிறுத்திவிடு தலைவனே. முறைப்படி தலைவியை மணமுடித்து உனது துணையாக்கிக் கொள்வதே உனது தகுதிக்குப் பொருத்தமான செய்கை (50 ). களவுப் புணர்ச்சியில் மிகுந்த விருப்பம் கொள்ளாமல் தக்க நாளொன்றினை தேர்வு செய்து தலைவியை மணம் புரிந்து கொள்வதுதான் உனக்கேற்ற நன்னெறியாகும் (52). எமது சுற்றத்தாரிடம் சென்று ஒப்புதல் பெற்று தலைவியை மணமுடித்து அவளுடன் வாழ்வாயாக (53). இது குறித்து எண்ணி ஆய்வு செய்து காலத்தை வீணாக்க வேண்டாம், தக்க நாள் ஒன்றைத் தேர்வு செய்து, காலம் தாழத்தாது பெண் கேட்டு வந்தால், நீ தலைவியைத் துணையாக அடையும் வாய்ப்பு உமக்குக் கிட்டும் (46). ஆகவே மேலும் ஆராய்ந்து கொண்டிராதே, கோள்கள் குறித்து ஆராய்தல் தேவையில்லை. நிமித்தம் அறியும் கணிஞரை வரவழைத்து, ஓர் மண நாளைக் குறித்துக் கொண்டு வந்து, இவளை விரும்பி மணம் புரிந்து கொள்ளுதலே நீ தலைவிக்குச் செய்யும் நன்மையாக அமையும் (54) என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்.*

*தலைவியைப் பெண்கேட்டு அயலார் சிலர் வருகிறார்கள். தோழி இனி அமைதியாய் இருப்பது சரியல்லவென்று செவிலித்தாயிடம் தலைவியின் காதல் குறித்து தெரிவிக்கிறாள். கடற்கரைச் சோலையில் தலைவிக்கு ஞாழல் பூவினை தந்து சென்ற தலைவனே தலைவியின் மென்தோள்களை அடையத் தகுதி உடையவன், அவளை மணக்க விருப்பம் தெரிவித்து வரும் மற்ற அயலவர் அல்ல (39). விற்போரில் வல்ல வீரர்கள் கூடி நடத்தும் வில்விழாக் கூட்டத்திலும்,*

*கடலினாலே சூழப் பெற்ற இவ்வுலகத்தினிடத்தே நல்லவர் பலர் கூடி நடத்தும் மணவிழாக் கூட்டத்திலும், அன்று கடற்கரையினிடத்து தலைவிக்கு ஒப்பற்ற உதவியினைச் செய்த கடல் துறை முகத்துக்குரியவனை ஒத்த ஆடவரை நாங்கள் காணவில்லை!! இவரைப் போன்ற அத்தகைய சிறந்தவர் சுவர்க்கத்திலிருந்தாலும் அவரை தலைவிக்குத் தேர்வு செய்து மணமுடிப்பாயாக நல்ல எமது அன்னையே! நம் தலைவிக்கு இவனே பொருத்தமான மணமகன் என்பதால், அவன் போலச் சிறந்தவர் கிடைப்பவர் அரிது என்று செவிலிக்குத் தோழி அறத்தொடு கூறி நிற்கிறாள் தோழி (62).*

***குறிப்பு - கதையாகக் கோர்க்கப்பட்ட பாடல்களின் வரிசை, பாடல் எண்களுடன் கொடுக்கப்பட்டுள்ளது:***

*32. கடற்கரையில் மீன் உலர்த்திக் காவல் காக்கும் தலைவியின் கண்கள் என்மீது பாய்ந்து என்னையே வட்டமிட்டு என்னை அவளது காவலுக்குள் வைத்தது என்று தலைவன் தோழனிடம் கூறுகிறான்.*

*33. தலைவியின் வெண் முத்துப் பற்கள் சிந்தும் புன்முறுவலைக் காணுகையில் மனம் துவண்டு வருந்துகிறேன் நான் என்று தலைவன் தோழனிடம் கூறுகிறான்.*

*60. கடற்கரையில் நண்டு பிடித்தவாறு நெய்தல் பூக்களைக் கொய்து கொண்டிருக்கும் நீண்ட கண்களையுடைய தலைவி எனக்குக் காதல் மயக்கம் தந்தாள் என்று தோழனிடம் கூறுகிறான் தலைவன்.*

*45. ஒப்புமை கூற இயலாத இத்தகைய சிறந்த அழகியான தலைவியைக் கண்ட பிறகும் அவளை விட்டு தனது உறவுகளை நாடி தனது இடத்திற்குத் திரும்பிய தலைவன் பண்பில் சிறந்தவன்தான் என்று தோழன் வியக்கிறான்.*

*47. அழகிய கடற்கரைச் சோலையினிலே ஓர் அணங்கு போலத் தோற்றமளிக்கும் தலைவியை அவர் குடும்பத்தார் பிறர் துன்புறுவாரே என்ற கருத்தின்றி கட்டவிழ்த்து விட்டுள்ளார்கள் என்று தோழன் தலைவனிடம் தலைவியின் சிறப்பைப் பாராட்டிக் கூறுகிறான்.*

*42. தலைவியின் செவ்வாயின் முத்துப்பற்கள் முன்னர், அவளது கைவளையில் பதிக்கப்பட்டிருக்கும் உண்மையான முத்துக்கள் போட்டிப் போட இயலாமல் தோற்கும் எனத் தலைவன் தலைவியின் அழகைப் போற்றுகிறான்.*

*44. தலைவனே உயர்ந்த தாழை மரங்களும் ஞாழல் மரங்களும் அடர்ந்த சோலை தலைவி விளையாடும் இடம், அங்கு அவளைச் சந்திக்க வாய்ப்புள்ளது எனத் தோழி குறிப்பு கொடுக்கிறாள்.*

*58. அலைகடலும் அதனருகே கடற்கரைச் சோலையும், வெண் மணலும் ஞாழலும், தாழையும் புன்னையும் நிரம்பிய இடங்களை விரும்பிப் பார்ப்பாயாக எனத் தோழி தலைவனுக்குப் பகற்குறி சொன்னாள்.*

*51. கடற்கரைக் கானல் அருகில் கருவாடுகளை உலர்த்திக் காயவைத்துக் காவல் காத்துக்கொண்டிருக்கும் தலைவியைப் பகற்பொழுதில் அங்கு காணலாம் எனத் தோழி தலைவனுக்கு குறிப்பு கொடுக்கிறாள்.*

*41. நம் மீது கூறப்படும் அலர் வளர்ந்து, மழைமேகம் மூளுவது போல எங்கும் சூழ்ந்து மின்னல் இடியுடன் பொழிவது போல, பலநாளாக வருத்துகிறது என்று தலைவி தனது ஆற்றாமையை வெளிப்படுத்துகிறாள்.*

*40. துணையுடன் கூடிக்களிக்கும் நண்டே, எனது பிரிவுத்துயரை உன்னிடம் சொல்லி என்ன பயன் என மனம் வெதும்புகிறான் தலைவன்.*

*38. தலைவனின் நினைவால் உறக்கமின்றித் தவிக்கும் என் நிலையைப் போல உறங்காமல் அலைமோதும் இத்துன்பத்தை உனக்குக் கொடுத்தவர் யார் கடலே? என்று தலைவி கடலினை நோக்கிக் கேட்கிறாள்.*

*34. தலைவனே இரவில் நீ தலைவியைக் காண வருவாயானால் உன் நினைவால் கலங்கி இருக்கும் அவளது கண்களைக் காண இயலும் என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்.*

*56. தலைவனே கடற்கரையில் உள்ள புன்னைமரச் சோலையில், அன்றில் பறவைகள் பாடும் உயர்ந்த பனைமரத்தைக் கொண்ட வீட்டின் முற்றத்தின் மணல்*

*பரப்பில்  இரவில் தலைவியைச் சந்திக்கலாம் எனத் தோழி தலைவனிடம் கூறுகிறாள்.*
*48. தலைவியினை இரவினில் காணவருவதைப் பிறர் காணநேரிட்டால் அலர் உண்டாகும்  என்று தலைவனை  இரவில் வர  வேண்டாம் என்று தோழி அறிவுறுத்துகிறாள்.*
*59. பகல் இரவு என்று இரு பொழுதுகளும் தலைவியைச் சந்திக்க  வருதலை விடுத்து  விரைவில் அவளை மணமுடித்துக் கொள் என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்.*
*49. அலர் தவிர்க்க விரும்புவாயானால் இரவிலும்  மக்கள் நடமாட்டம் உள்ள பட்டினத்தில்    இரவில் தலைவியைக் காண வருதல் ஏற்புடையதல்ல  எனத் தோழி தலைமகனிடம் மறுத்துரைக்கிறாள்*
*55. தலைவனே தலைவியைப் பார்க்க வரவேண்டாம், உனது செய்கையால் ஊரில் அலர் மிகுவதால் அவள் மிகுந்த துயருடன் கண்ணீர் சிந்தியவாறு இருப்பதைக் காண்பாயாக. நீ வந்தாயானால் அவள் உயிர் துறப்பாள்  என்று தலைவனிடம் இரவு வருகையை நிறுத்தச் சொல்கிறாள் தோழி.*
*61. இரவில் நீ தலைவியைச் சந்திக்க வரும் வழி இடர்கள் மிக்க வழி, அதன் வழி வருவது துன்பம் தரும், ஆகவே நீ தலைவியைப் பார்க்க வர வேண்டாம் என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்.*
*35. தலைவி மீது ஊரார் அலர்  தூற்றாதவாறு இருக்க நீ  இரவும் பகலும் தலைவியைக் காண விரும்பி இப்பக்கம் வரவேண்டாம் என்று தலைமகனிடம் தோழி  கூறுகிறாள்.*
*43. தலைவனே இரவில் தலைவியைத் தேடி  வாராதே, வந்ததால் அவளை மணமுடிக்கும் நோக்கில் மட்டும் வருவாயாக (கனை இருள் வாரல்!) என்கிறாள் தோழி.*
*36. உன் நாட்டுப் பறவைகளும் குடியும் குடித்தனமுமாக வாழ முற்படுகையில், அது போல நீயும்  தலைவியை  மணந்து அவளுடன் தங்கிவிடுவாயாக எனத் தோழி தலைவனிடம் கூறுகிறாள்.*
*37. தலைவிக்குத்  துன்பம் நீங்குமாறு நீ அளித்த வாக்குறுதிக்குக் கடல் சான்றாக உள்ளது.  அவளை ஊரார் அலர் தூற்றாதவாறு  மணம் செய்து கொள்வாயாக என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்.*
*57. தலைவனே என் உதவியுடன் நீ இனி தலைவியைச் சந்திக்கத் தேவையில்லை, அவளை மணமுடித்து உன்னவள் ஆக்கிக் கொள் என்கிறாள் தோழி.*
*50. இரவில் வருவதை நிறுத்தி முறைப்படி தலைவியை மணமுடித்து உனது துணையாக்கிக் கொள்வதே உனது தகுதிக்குப் பொருத்தமான செய்கை என்று தோழி தலைவனுக்கு அறிவுறுத்துகிறாள்.*
*52. நாள்  கடத்தாது, தக்க நாள் ஒன்றில் தலைவியை மணமுடித்து இல்லறம் மேற்கொள்வதே உன் தகுதிக்கேற்ற நல்லொழுக்கம் எனத் தோழி தலைவனுக்கு உரைக்கிறாள்.*
*53. தலைவனே எமது சுற்றத்தாரிடம் சென்று ஒப்புதல் பெற்று தலைவியை மணமுடித்து அவளுடன் வாழ்வாயாக என்று தோழி தலைவனுக்குக் கூறுகிறாள்.*
*46. தலைவியைப் பெண்கேட்டு வந்து விரைவில் மணம் முடிப்பாய் தலைவனே, அதை விட்டு இடர் நிறைந்த இரவில் அவளைக் காண வருவதைத் தவிர்ப்பாயாக என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்.*

*54. தலைவனே இரவில் வாராதே, இனி வருவாய் என்றால் தலைவியை மணமுடிக்க ஓர் நாள் குறித்து வந்து அவளை மணந்து கொள்ளுதலே நீ அவளுக்குச் செய்யும் நன்மையாக இருக்கும் எனத் தோழி தலைவனிடம் கூறுகிறாள்.*
*39. கடற்கரைச் சோலையில் தலைவிக்கு ஞாழல் பூவினை தந்து சென்ற தலைவனே தலைவியின் மென்தோள்களை அடையத் தகுதி உடையவர், அவளை மணக்க விருப்பம் தெரிவித்து வரும் மற்ற அயலவர் அல்ல என்று தோழி செவிலித் தாயிடம் தலைவியின் காதல் குறித்துத் தெரிவிக்கிறாள்.*
*62. தலைவிக்கு இவனே பொருத்தமான மணமகன் என்பதால், அவன் போலச் சிறந்தவர் கிடைப்பவர் அரிது என்று செவிலிக்குத் தோழி அறத்தொடு கூறி நின்றாள்.*

# அன்பின் ஐந்திணை - பாலை

*கணிமேதாவியார் இயற்றிய திணைமாலை நூற்றைம்பது நூலில் முதலில் இடம் பெறும் குறிஞ்சித் திணை, நெய்தல் திணைப் பாடல்களைத் தொடர்ந்து, மூன்றாவதாகப் பாலைத்திணைப் பாடல்கள் இடம் பெறுகின்றன. இப்பாடல்களின் மூலம் பாலை நிலத்தின் கொடிய தன்மையும், அப்பகுதியின் இயற்கைக் காட்சிகளும், அம்மக்களின் வாழ்வியலும் அழகுற விவரிக்கப்படுகிறது. பாலைத் திணையின் முதற்பொருள்(நிலமும் பொழுதும்), கருப்பொருள்(நிலத்தின் தனித்தன்மையைக் குறிப்பன), உரிப்பொருள்( அந்த நில மக்களின் ஒழுக்கமும் வாழ்வு முறையும்) என இம்மூன்று பொருள்களும் பாடல்களில் வழி தெளிவாக அறிந்து கொள்ள முடியும்.*

*தலைவி, தலைவன், தோழி, நற்றாய், செவிலித்தாய் ஆகியோர் படல்களில் நேரடியாகக் குறிக்கப்படுகிறார்கள். தலைவியின் தந்தையும் தமையன் மாரும் பற்றிய குறிப்புகள் இடம் பெறுகின்றன, ஆனால் அவர்கள் நேரடியாக இடம் பெறவில்லை. திணைமாலை நூற்றைம்பதின் குறிஞ்சி நெய்தல் பாடல்களுடன் ஒப்பிடுகையில் பாங்கனுக்குப் பாலைநிலப் பாடல்களில் பங்களிக்கப்படவில்லை. தலைவனுக்குத் தலைவனைத் தவிர உறவுகள் வேறு யாரும் இல்லை, இருப்பதாகக் காட்டப்படவுமில்லை.*

*இந்த பாலைத்திணைப் பாடல்களிலும், சங்கப்பாடல்களில் தோழிக்குத் தனிச் சிறப்புண்டு என்பதற்கு இணங்க, தலைவன் தலைவியை மணந்து கொள்ளத் தோழி உறுதுணையாக இருக்கிறாள். தோழி இடம் பெறாத பாடல்கள் எண்ணிக்கையில் மிகவும் குறைவு. தலைவன் மணந்து கொள்ளக் காலம் தாழ்த்தும் பொழுது தோழி தலைவனிடம் தலைவியை மணந்து கொள்ள 'தோழி வரைவு கடாயது' என்ற நோக்கில் இடம் பெரும் பாடல்கள் பாலைத்திணைப் பகுதியில் இடம் பெறவில்லை. அவர்கள் காதல் தடைப்படும் பொழுது உடன்போக்கு செல்ல அவர்களுக்குத் தோழி முன்வந்து உதவுகிறாள். தலைவியை ஆற்றுவித்தல், தூது செல்லல் என்றும்; வரைவு மலிதல் உதவிகள் செய்வது என்றும் தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே காதல் துவங்கி வளர்ந்து கைகூடுவதில் தோழியின் பங்களிப்பு மிகுதி.*

*பாடல் 74இல் பாலைத்திணையின் குறிப்புகளுடன் நெய்தலின் இரங்கல் ஒழுக்கமும் இருத்தலைக் காட்டி திணை மயக்கம் காட்டப்படுகிறது. 81ஆம் பாடல், தலைவியின் இற்செறிப்புக்காரணமாக தலைவனுடன் உடன் போக்கு சென்றுவிட்ட தலைவியை அவள் எங்குச் சென்றாள் என்ன சொன்னாள் என்று மரங்களையும் கொடிகளையும் பாலைநில வழியே அவளைத் தேடிச் செல்லும் செவிலித்தாய் கேட்பதாகவும் குறிப்பிடப்படுகிறது. அதே பாடல், தலைவியைத் தேடிச் சென்ற தலைவன் இற்செறிப்புக்காரணமாக அவளைக் காண இயலாத தனது ஆற்றாமையால், அங்கிருக்கும் மரம் செடி கொடிகளிடம் அவள் எங்கே போனாள்*

*என்ன சொன்னாள் என்று கேள்விமேல் கேள்வி கேட்டுப் புலம்பிக் கொண்டிருக்கிறான் என்று காட்டப்படுவதும் தெரிகிறது. இங்குள்ள கதையில் இப்பாடல் தலைவனது கூற்றாகக் கையாளப் பட்டுள்ளது.*

*இந்நூலின் பாலைத்திணைப் பாடல் இடம் பெரும் பகுதி மலைகள் உள்ள இடம். கோடையில் பாலையாக மாறும் பகுதி. இப்பகுதியில் இற்செறிப்பு இடம் பெறுகிறது, குறி கேட்பதும் இடம் பெறுகிறது. உடன்போக்கும் இடம் பெறுகிறது. தலைவியைச் சந்திக்க இயலாத தலைவன் அதை மரம் செடி கொடிகளிடம் கூறிப் புலம்புவதும், தலைவனைப் பிரிந்த தலைவி அதைப் புறாவிடம் சொல்லிப் புலம்புவதும், செவிலித்தாய் குரா மரத்திடம் தலைவி சென்ற வழி காட்டச் சொல்லி வேண்டுவதும், வழிப்போக்கர்களாக வரும் கணவன் மனைவியாகிய இருவர் தலைவியும் தலைவனும் சென்ற வழி காட்டி உதவுவதும் ஆகிய பாடல்கள் சொல்லும் காட்சிகள் நயம் மிக்கவை.*

*திணைமாலை நூற்றைம்பது நூலின் பாலைத் திணைப் பாடல்கள் அனைத்திலும் குறிப்பிடப்படும் தலைவனும் தலைவியும் தோழியும் ஒருவரே என்றோ, அவர்களின் நற்றாயும், செவிலித்தாயும், தந்தையும் தமையன்களும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர் என்றோ, அல்லது அவர்கள் வாழிடம் குறிப்பிட்ட பாலை நில ஊர் என்றோ கூறுதலும் இயலாது. இருப்பினும், 30 பாலை நிலப் பாடல்களையும் (பாடல்கள்: 63-92) ஒரே தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே நிகழும் காதலாகக் கொண்டு ஒரு வரிசைப்படுத்தி அவற்றிலிருந்து ஒரு கதையும் உருவாக்கலாம். அத்தகைய முயற்சியே இக்கட்டுரை. வரிகளுக்குப் பின்னர் அடைப்புக் குறிகளுக்குள் கொடுக்கப்படும் எண், திணைமாலை நூற்றைம்பது நூலில் உள்ள பாடல்களின் வரிசை எண்.*

*பிரிதலும், பிரிதல் நிமித்தமுமாகிய ஒழுக்கம் கொண்ட பாலை நிலப் பகுதியில் நிகழ்வது இக்கதை.*

*பாலைநில வழிகளில், கள்ளிச் செடிகள் மிகுந்து வளர்ந்துள்ள காட்டு வழியில் காட்டுப்பசுக்கள் அஞ்சி ஓடிடும். காட்டு எருமைகள் பிரிந்து காணாது போன தங்களது காட்டெருமைப் போத்துக்களை நினைத்துக் கதறி அழுது கொண்டிருக்கும். கற்களும் யானைகள் பரவி நிற்பன போலத் தோற்றமளிக்கும். சிள்வண்டுகள் கொடிய ஒலி எழுப்பியபடி திரிந்து கொண்டிருக்கும். பெரிய யானைகள் தாகத்திற்குத் தண்ணீர் குடிக்க விரும்பி சுனைகளிடம் சென்று, அங்கு நீர் கிடைக்கப் பெறாது, மேலும் நடக்க இயலாமல் அந்த சுனை அருகிலேயே துவண்டு விழுந்து கிடக்கும். இயலாமல் வருந்தி இறந்து வீழ்ந்த யானைகளை, தமது பசி மிகுதியினாலே அவ்வழியில் செல்பவர்கள் பார்த்து அவற்றை உண்டு பசியாறிச் செல்லும் வழக்கமும் உள்ளது. வெப்ப மிக்க ஞாயிறு எரிந்து, புழுதிகள் சூடேறி மேலே எழுந்து புழுதிப் புயலாக வீசி வானையும் சூடேற்றும். தரையிலே, நடந்து செல்வார் அடிகள் வெந்து கண்களையும் சுடச் செய்வதுமாகி பாலைநில வழியே எவரும் செல்ல விரும்ப மாட்டார்கள். கொள்ளை கொள்ளக் கூடிய பொருள் வழிப்போக்கரிடம் இல்லாவிட்டாலும், திடீரென்று எதிர்பாராத வகையில் வந்து அவர்கள் மீது அம்பெய்து கொன்று இரக்கமற்ற வகையில்*

*கொள்ளையடிக்கும் மறவர்கள் எதிர்ப்படும் அந்தப் பாலைநிலத்தின் வழி, பயணம் செய்ய ஏற்ற வழியல்ல.*

*தலைவியும், தலைவியின் நற்றாயும் செவிலித்தாயும் தந்தையும் தமையன் மார்களும் மலைகள் கொண்ட பகுதி ஒன்றில் வசிக்கிறார்கள். கொடிய கோடையில் அப்பகுதி வறட்சி கண்டு பாலைத் தன்மையைக் கொள்கிறது. இத்தகைய நிலப்பகுதியில் வாழும் மிக அழகியான தலைவி காதுவரை நீண்டும் அகன்றும் உள்ள பெரிய விழிகளைக் கொண்டவள். அந்த விழிகள் மானைப் போன்ற மருண்ட பார்வைக் கொண்டனவாய் இருக்கின்றன. காதில் மகரக்குழைகளையும், இரு கை நிறைய மின்னும் பொன் வளையல்களையும் அணிந்திருக்கிறாள். நறுமணம் கொண்ட தகரப்பொடியால் செய்த சாந்தை தனது அவிழ்ந்து விரிந்து புரளும் நீண்ட குழலில் பூசி தனது கூந்தலுக்கு மணமூட்டி இருக்கிறாள். அவளுக்கு ஒரு தோழி. விற்போரில் வல்லவனான ஒரு இளைஞனுக்கும் தலைவிக்கும் இடையே அன்பு மலர்கிறது. தலைவியின் தோழி அவர்கள் இருவரின் காதலைப் புரிந்து கொண்டு அவர்களது நல் வாழ்வில் அக்கறை கொண்டவளாக இருக்கிறாள். தலைவன் பொருள் தேடும் பொருட்டு தலைவியைப் பிரிந்து பாலைநிலம் வழியாக வேறு இடத்திற்குச் செல்ல விரும்பி அதைத் தலைவியிடம் கூறுகிறான். அதைக் கேட்டு அவள் அஞ்சுகிறாள். அவளைப் பிரிந்து சென்ற பிறகு அவளது துயர் கொண்ட மருண்ட விழிகளே அவனை வாட்டிய வண்ணம் உள்ளன.*

*என் நெஞ்சே! பகலவனின் கொடிய வெப்பத்தால் நெல்லும் பொரியாகப் பொரிந்துவிடக் கூடிய பாலை நிலத்தின் நெடிய வழியில் நான் பொருள் ஈட்டச் செல்ல விருப்பது குறித்து நீ அஞ்சாதே என்று எனது தலைவிக்கு ஆறுதலாகச் சில சொற்கள் சொல்வதற்குள், அவளைப் பிரிவதை எண்ணி என் மனமும் அச்சமுற்றது. அதனால் எனது முக மாறுதலைக் கண்டு அஞ்சிய அவளது பெரிய நீள் விழிகளில் கண்ணீர் துளிர்த்தது. தலைவியும் அஞ்சி கண்கலங்கினாள், அவளை எவ்வாறு நான் பிரிவது எனத் தலைவன் கலங்குகிறான்(76). தலைவனின் இந்த முடிவைக் கேட்டு வருத்தமுற்ற தலைவி அதைத் தனது தோழியிடம் வந்து சொல்கிறாள்.*

*தலைவியின் துயரைக் காணச் சகியாத தோழி தலைவனிடம் அவனது எண்ணத்தைக் கைவிடும்படி கூறச் செல்கிறாள். பொருளால் எதையும் அடைந்துவிடலாம் என்று பொருளுக்கு முதன்மை இடம் கொடுப்பவர் சொல்வதைப் பொன் போல மதித்து, பொருள் தேடச் செல்கின்றீர். உங்களிடம் அன்பு கொண்டுள்ள தலைவியின் மேல் அருள் காட்டுவதை ஒரு பொருட்டாக நீங்கள் கொள்ளவில்லை. பொருளால் கடந்து சென்ற இளமையைப் பெறமுடியாது என்பதை எண்ணிப் பாருங்கள் என்று தோழி தலைவனுக்கு அறிவுரை கூறுகிறாள் (85). ஆனால், தோழியின் சொற்கள் தலைவனிடம் எந்த ஒரு மாற்றத்தையும் ஏற்படுத்தவில்லை. தனது முடிவில் தான் உறுதியாக இருப்பாகச் சொல்லும் தலைவன் பொருள் தேடக் கிளம்பிச் சென்றுவிடுகிறான்.*

*தலைவன் சென்றுவிட்டான் என்பதைத் தோழி தலைவியிடம் சொல்ல அஞ்சினாலும், தயங்கியவாறே அவன் பிரிவை ஒருவாறு தலைவியிடம் தெரிவித்துவிடுகிறாள். அதைக் கேட்டு மனம் வெதும்புகிறாள் தலைவி. அவள் தனது குரலில் விரக்தி தொனிக்கத் தோழிக்குப் பதில் கூறுகிறாள். தலைவன் பொருள் தேட பாலைநிலம் வழியே செல்ல உறுதியான முடிவை எடுத்துள்ளான் என்பதை என்னிடம் மறைக்காது சொன்ன நீ ஒரு சிறந்த தோழியே, ஆனால் அதனால் என்ன பயன்? ஆறுதல் வழங்கக் கூடியவர் எவரிடமாவது சென்று சொல் என்று தலைவி மனம் வருந்தி தோழியிடம் சொல்கிறாள் (86).*

*நல்ல வாழ்வை வாழ விரும்பும் எவரும் கொடிய பாலை நிலம் வழியாகச் செல்ல விரும்ப மாட்டார்கள், தலைவன் அவ்வாறு செல்லுதல் நல்லதல்ல. கள்ளிச்செடிகளும், சார் மற்றும் கரிய மாமரங்களும், நாராகிய பற்றுதலில்லாது பூக்களையுடைய, நீண்டு வளர்ந்த, முருங்கை மரங்களும், மிகுந்த மூங்கிற் புதர்களும் நிறைந்த இடத்திற்கு, நல் வாழ்க்கையை வாழ விரும்பும் மக்கள் விரும்பிச் செல்வார்களா? புள்ளிகளையுடைய பருந்துகள் மற்றும் கழுகுகள் புதிதாக வரும் வழிப் போக்கர்கள் கொண்டு செல்லும் பொருளைக் கொள்ளை அடிக்க எதிர்பார்த்து, அவ்விடத்தில், தங்கியும் உறங்கியும் வீழ்ந்து கிடக்கும் இடமாகிய பாலை நில வழியே எவரும் செல்ல விரும்புவார்களா? என்று தலைவி தோழியிடம் கூறுகிறாள் (91). அத்துடன், தன்னைச் சார்ந்தவரின் நலவாழ்வைக் கருத்தில் கொள்ளும் எவரும் தம்மைச் சார்ந்து வாழ்பவர் சிறப்பழிந்து வருந்துமாறு கொடிய பாலை நிலம் வழியாகச் செல்ல விரும்ப மாட்டார்கள், தலைவன் அவ்வாறு செல்லுதல் நல்லதல்ல என்று தலைவி தோழியிடம் கூறுகிறாள்(92).*

*தலைவிக்கு ஆறுதல் சொல்ல விரும்பும் தோழி உலக நடப்பைக் கூறி அவளை அமைதி அடையச் செய்ய முயல்கிறாள். ஆண்களின் கடமை என்ன என்று அவர்களுக்கான நெறியினை ஆராய்ந்து பார்த்தால், ஆண்மக்கள் மேற்கொள்ள வேண்டிய கடமையாகப் பொருள் தேடுதலைப் பெரியோர் வகுத்து வைத்துள்ளனர். எனவே, தலைவன் தான் மேற் கொள்ள வேண்டிய கடமையாகச் செல்வம் தேடிச் சென்றுள்ளார். ஆதலால், சுருக்கமாக உரையாடும் முறையை மேற்கொண்டு நீ சிறிது காலம் பிரிவால் வருந்துகின்ற உனது நிலையைப் பிறர் அறியாவண்ணம் மறைத்து வைப்பது நல்லது என்று தலைவிக்குத் தோழி கூறினாள்(82).*

*நல்ல தோழியே! கொடிய பாலைநில வழியே செல்ல விரும்புவார் எவராவது உண்டோ? அப்படி ஒரு செயலை எண்ணிப் பார்க்கவும் இயலாது. அவ்வாறு நினைத்தாலே நெஞ்சு எரிவது போன்று துன்பம் தரும். பொருட்படுத்தாது அப் பாலை நிலவழியே வெற்றிகரமாகச் சென்று மீண்டு வரமுடியமா? தலைவன் அந்த வழியே சென்று பொருள் தேட எண்ணியது நிறைவேறுமா? (83). கொள்ளையர்கள் இரக்கமற்று கொலை செய்யக்கூடிய பாலை நில வழியாக, தனக்கென அறிவைக் கொண்டிருப்பவர்கள் எவரும் மறந்தும் செல்ல விரும்புவார்களா? ஆதலால் தலைவன் பொருள் தேடி அந்த வழியில் செல்வது நல்லதல்ல (84), என்று மீண்டும் மீண்டும் வருந்தி தலைவி தோழியிடம் புலம்பிய வண்ணம் இருக்கிறாள். அவளுக்கு எவ்வாறு ஆறுதல் கூறுவது என அறியாது தோழியும் தவிக்கிறாள்.*

*இதற்கிடையில், கொடிய பாலை நிலம் வழியே செல்லும் தலைவனையும் தலைவியின் நினைவு துரத்துகிறது. பொருளினைத் தேட வேண்டு மென்று தீர்மானித்து; தலைவியைப் பிரிந்து போக நினைத்தாலும், போகும் வகை விளங்கவில்லையே ? இப் பெரிய இப்பாலை நில வழியே செல்கையில் எதிர்ப்பட்டு, என்னை நெடுந்தொலைவு தொடர்ந்து வந்து, தலைவியின் நீண்ட கண்களின் ஏக்கப் பார்வை என்னை எதிர் கொண்டு துரத்துகிறதே! நெஞ்சே, பொருள் தேட நான் எப்படிச் செல்வேன்? என்று தனக்குத் தானே செல்லுதற்கு வருந்தி எண்ணிக் கொள்கிறான் (68).*

*இவ்வாறு பிரிதல் காரணமாகத் தலைவனும் தலைவியும் ஒருவரை ஒருவர் நினைத்து வருந்திக் கொண்டிருக்கையில், காலம் மெதுவாகக் கடந்து செல்கின்றது. பருவங்கள் மாறுகின்றன. தலைவன் மீண்டும் வருவேன் என்று குறிப்பிட்டுச் சென்ற வேனிற் காலம் துவங்கியதை இயற்கையின் அறிகுறிகள் உணர்த்துகின்றன. எரியும் தீ போன்ற நிறத்தோடு மலர்ந்திருக்கும் நீண்ட அசோக மரத்தின் பூங்கொத்துகளில் எல்லாம் உடலில் கோடுகள் கொண்ட அழகிய நீண்ட வண்டுகள் பாடி மொய்த்துக் கொண்டிருக்கின்றன. பொன் போன்ற மலர்கள் கோங்க மரங்களெல்லாம் பூத்துக் குலுங்குகின்றன.*

*தலைவி புறாவிடம், சிறிய பெட்டைப் புறாவே! உனது துணையாகிய ஆண்புறாவோடு, ஊடல் கொள்வதால் பயன் ஒன்றும் இல்லை. ஏனெனில், அன்பு கொண்ட உறவு மனநிலையில் உள்ளவரே என்றாலும், கடினமான இதயம் கொண்டவராக எனது தலைவன் போலப் பிரிந்து சென்று விடுவார்கள். தலைவன் தேரோடு வந்து சென்ற சுவடு கொண்ட அகன்ற வழியினைப் பார்த்து, பொன்னிறம் போர்த்தியது போன்று எனது மேனியில் பசலை பூத்தது, அன்பு கொண்டவராயினும் கடின நெஞ்சம் கொண்டு பிரிந்துவிடுவார் என்று தன்னிலைக்கு இரங்கிப் புலம்புகிறாள் (74). இயற்கையின் மாறுதலையும், தலைவியின் நிலையையும் கண்ட தோழி, தலைவியே! உனக்குப் பசலை நோய் தோன்றிய காரணம் என்ன? என்று வினவி, வேனிற்பருவம் என்பதால் தலைவன் வந்துவிடுவான் என்பதைத் தலைவியிடம் வலியுறுத்துகிறாள் (63). பொருள் ஈட்டும் பொருட்டு நம்மைப் பிரிந்து சென்ற தலைவர் மீண்டும் திரும்பி வரும் நாள் அருகில்தான் உள்ளது. அல்லாமல் உன்னிடம் அன்பு செலுத்திய தலைவர் விரைவில் வருவேன் என்று சொன்ன சொல்லின் உறுதியை அறியாமல் துயர் கொள்ளும் தலைவியே, காலம் தாழ்த்தமாட்டார். அவர் வருவேன் என்று சொன்ன பருவகாலம் துவங்கிவிட்டது. வேனிலால் வறண்ட இம்மலை நாட்டிற்கு வரும் தலைவரைக் கண்டு மகிழ்வாயாக என்று தோழி தலைவியிடம் சொன்னாள் (79). தலைவன் பிரிவைத் தாங்க மாட்டாளே தலைவி எனக் கவலையுறும் தோழிக்கு, அவர் எந்த இடரையும் எதிர் கொள்ளாது நல்லவிதமாகத் திரும்புவார் என்று கூறி தலைவியும் தனது உறுதியை உணர்த்துகிறாள்(78).*

*உன் உணர்வை வெளிக்காட்டாது உன்னை இத்துன்பத்திலிருந்து காத்துக் கொள்வாய், என்று எத்தனைத்தான் சொன்னாலும் எச்சரிக்கை கொள்ளாது அனைவரும் அறியும் வண்ணம் வருந்தும் வெட்கக் கேடான செயலைச் செய்கிறாய்*

*தலைவியே! நெருப்பினை சிதறி விட்டாற் போன்று குளிர்ந்த முருக்க மரங்கள் பூத்தன, கனமில்லாத நெற்பொரியினைச் சிதறி விட்டாற்போன்று புங்கைமரத்தின் பூக்கள் மலர்ந்தன(64). செல்வந்தர் வீட்டுச் சிறுவர்களுக்கு அணிவிப்பதற்காகப் பொற்கொல்லர் உயர்ந்த பவளத் துண்டத்தினை ஐம்படைத்தாலியில் பதித்து வைத்தாற் போலக் காணும்படியாக மலர்ந்த மலர்களுடன் மரங்கள் திகழ்வதைக் காண்பாயாக (66), வேனில் வந்தது; இனி வேந்தனும் வருவான் கவலையற்க தலைவியே! என்று தோழி தலைவியிடம் கூறினாள்.*

*வேனிற் பருவமும் வந்து விட்டது, பொருள் தேடிச் சென்ற தலைவனோ சொன்னபடி வேனிலில் வரவில்லை. வந்துவிடுவார் பொறுத்துக் கொள் என்று நீ சொல்வதால் என்னால் பொறுத்துக் கொள்ள முடியுமா? வருந்தாதே அமைதியாக இரு என்கிறாயே தோழி என்னால் எப்படி வருந்தாமல் இருக்க முடியும்? என்னை வருத்துவதற்காகவே பொன்னிடத்திலே பொருந்தியுள்ள பவழத்தினைப் போன்று இந்தப் பூக்கள் அடர்ந்து வளர்ந்துள்ள முருக்க மரங்களில் மலர்ந்துள்ளன. அதைக் காணுகையில் என் நெஞ்சினிலே துன்பம் மிகுந்துள்ளது, என்னால் தாங்க இயலாது (67) என்று தலைவி தோழிக்கு மறுமொழி கூறினாள். தலைவியே பொருள் தேடச் சென்ற தலைவர் இன்றே வருவார். இந்த நல்ல செய்தியை உணர்ந்து மிகவும் துடிக்கிறது எனது இடது கண். ஆதலால், கவலை கொள்ள வேண்டாம் என்று தோழி தலைவிக்கு ஆறுதல் சொல்கிறாள் (80). வேலை நிறைவேறிய பின்னர் மீண்டும் வாழிடம் திரும்ப எண்ணும் தலைவன் தன் மனக்கண்ணில் தோன்றிய தலைவியின் உருவம் கண்டு, பெண்ணே என் எதிரே என்னைச் செல்லவிடாமல் தடுக்கும் உனது பார்வையுடன் நீ நின்றாய் என்றால், என்னால் உன்னை விட்டுச் செல்ல முடியுமா? என்று அவளை இனிப் பிரியா முடியாத தனது நிலையை மனக்கண்ணில் தோன்றும் உருவத்திடம் சொல்லி விரைகிறான்(77).*

*தலைவன் ஊர் திரும்பிவிட்டான். தலைவனும் தலைவியும் தனிமையில் கூடிக் களிக்கிறார்கள். உன்னுடைய பார்வையைப் போன்ற பார்வையைக் கொண்ட மான் ஒன்று குளிர்ந்த குராமரத்தினது நிழலில் நிற்பதைப் பார். மான் போன்ற பார்வை கொண்ட பெண்ணே இங்கு மணலில் வந்து என்னுடன் விளையாடுவாயாக (70) என்று தலைவன் அழைக்கிறான். இருவரும் மகிழ்ந்திருந்தாலும் இச்செய்தியை அறிந்த தலைவியின் குடும்பம் மகிழவில்லை. தலைவனையும் தலைவியையும் கடிந்து கொள்கிறார்கள். தலைவியின் தந்தையும் தமையன் மார்களும் பழிச்சொற்கள் கூறி தலைவியின் மனதை வருத்துகிறார்கள். தலைவி வீட்டை விட்டு வெளியேறாத வண்ணம் வீட்டிலேயே அடைக்கப்படுகிறாள்.*

*தலைவனுக்கு வாக்களித்தவாறு, இற்செறிப்பின் காரணமாகச் சந்திக்க வேண்டிய புனத்தில் சந்திக்க வேண்டிய வேளையில் தலைவியால் தலைவனைச் சந்திக்க இயலவில்லை. தலைவியைத் தேடிச் சென்ற தலைவன் அவளைக் காண இயலாத தனது ஆற்றாமையால், அங்கிருக்கும் மரம் செடி கொடிகளிடம் அவள் எங்கே போனாள் என்ன சொன்னாள் என்று கேள்விமேல் கேள்வி கேட்டுப் புலம்பிக் கொண்டிருக்கிறான். கொன்றை மரமே! குருந்தமரமே! கொடிகளாகப் படர்ந்துள்ள முல்லைச் செடியே! நீங்கள் மிகவும் வாட்டமுற்றுக் காணப் படுகின்றீர்களே!*

*உங்கள் எதிரில் நிற்கும் நான், உங்கள் துயரின் காரணம் தலைவியுடன் நீங்கள் கொண்ட உரையாடல் என்று அறிந்து கொண்டேன். நீண்ட கண்களையுடைய அவள் இவ்விடத்தை விட்டுச் செல்லும்படி என்ன கூறினீர்கள்? உங்களிடம் அவள் என்ன கூறினாள்? அதற்கு நீங்கள் அவளுக்கு என்ன மறுமொழி அளித்தீர்கள்? அதற்கு அவள் உங்களிடம் என்ன பதில் சொன்னாள் ? மின்னும் அணிகலன்களைப் பூண்ட அவள் அவற்றை மிளிரவிட்டுக் கொண்டிருக்க என்ன உரையாடல் இங்கு நடந்தேறியது? என்று பலவாறு புலம்புகிறான் தலைவன் (81).*

*தலைவனும் தலைவியும் எதிர்கொள்ளும் இந்த சோதனை நிறைந்த சூழலைத் தோழியால் பொறுத்துக் கொள்ள இயலவில்லை. தலைவி தலைவனுடன் உடன்போக்கு செய்வதுதான் இதற்கான தீர்வு என்று கருதுகிறாள். முன்னர் தலைவி உடன்போக்கு எண்ணத்தைக் கைவிட்டது நினைவு வருகிறது. தலைவனிடம் அது குறித்துப் பேசுகிறாள். கழுத்தில் சிவந்த மாலை அணிந்தது போன்ற தோற்றம் கொண்ட கிளியின் சிவந்த வாயினின்றும் வெளிப்படும் கிள்ளை மொழியைக் கேட்க இயலாமல் போகும், குளிர்ந்த குளத்தில் மலர்ந்திருக்கும் கருமையான கண்களையொத்த நீல மலர்களைக் காண இயலாமல் போகும், சிறப்பு மிக்க உறவினரும் சுற்றமும் அலரால் தோன்றக் கூடிய பழிச்சொல் கேட்டு துயர் கொள்வார் என்பனவற்றைக் கருதி வருந்தியதாலும் முன்னர் பேதையாகிய என் தலைவி உடன் போக்கு எண்ணத்தைக் கைவிட்டாள் (73). ஆனால் இனி வேறு வழியில்லை. தலைவியை உங்களுடன் அழைத்துக் கொண்டு வேறிடம் சென்று விடுங்கள் என்று தலைவனிடம் கூறிய தோழி அதற்கான ஏற்பாட்டில் இறங்குகிறாள். தலைவியிடமும் சென்று உடன்போக்கிற்குச் சம்மதிக்கச் செய்கிறாள். தலைவனுடன் உடன்போக்கு செய்யும்படி தோழி சொன்ன அறிவுரைக்கு உடன்பட்ட தலைவி, யாவரும் விரும்பும் புகழினைக் கொண்ட தலைவனைப் பின் தொடர்ந்து உடன் போக்கு செய்தல் ஒழுக்கம் பிறழாத செயலே ஆகும். விற்போரில் வல்லவனாக, வேலைக் கையில் கொண்ட தலைவன் பக்கத்தே துணையாய் வர செல்லுதற்கரிய தொலைவையும் பாலை நிலவழியையும் கடப்பது எனக்குக் கடினமான செயல் அல்ல என்று தலைவி தோழியிடம் கூறினாள்(87).*

*அத்துடன், தோழியை நோக்கி, பொருத்தமற்ற வெறுப்புச் சொற்கள் கூறி, எங்களது காதலைப் புரிந்து கொள்ளாது, எங்களைக் கடிந்து கொள்ளும் தந்தையையும் தமையன் மார்களையும் விட்டு நான் விலகுகிறேன். எங்களது காதலை ஏற்காமல் பொல்லாப்பு கூறும் எங்களது இல்லத்தாரைப் பிரிந்து தலைவனுடன் உடன்போக்குச் செய்கிறேன். தோழியே, எனது பெற்றோரையும் தமையன் மாரையும் சந்திக்கத் துணிவுடன் என் வீட்டிற்கு நீ செல்வாயானால், நாங்கள் ஒருவர் மீது ஒருவர் கொண்டுள்ள அன்பை அவர்களுக்கு எடுத்துக் கூறி , உடன்போக்கு செல்லும் எனது நிலையையும் முடிவையும் அவர்களுக்குக் கூறி, என் மீது கோபம் கொள்ளும் அவர்களது மனதை மாற்றி, எம்மேல் அவர்கள் கொண்டுள்ள குறை நீக்கி, எங்கள் மீது வீட்டை விட்டுச் செல்லும் பழிச் சொல்லும் கருத்தினையும் அவர்கள் மனத்திலிருந்து நீக்கி, நீ எல்லோருக்கும் நல்லவளாக இரு என்று தலைவி தோழியிடம் கேட்டுக் கொள்கிறாள்(88).*

*தலைவனும் தலைவியும் முன்னர் தலைவி மறுதலித்த கொடிய பாலை நிலம் வழியாகவே வேறிடம் செல்ல முடிவெடுத்து வீட்டை விட்டு வெளியேறி தங்களது புதிய வாழ்க்கையைத் தொடரச் செல்கிறார்கள். கொடுமையான அந்த வெம்மை நிறைந்த பாலை வழியில் அவர்கள் பயணம் தொடர்கிறது. மாலை மயங்குகிறது. அவர்கள் இருவரும் செல்வதைக் கண்ட வழிப்போக்கர் சிலர், தலைவியை அழைத்துக் கொண்டு பாலைவழிச் செல்லும் தலைவனிடம், நீங்கள் செல்கின்ற இப்பாலை நில வழியும் நீண்டதாக உள்ளது. நெருப்பினைப் போன்ற கதிர்களைக் கொண்ட பகலவனும் பாதியளவு வரை அந்த பெரிய மலையின் பின்னே மறைந்து விட்டான். ஆதலால், அணிகளை அணிந்துள்ள இந்த அழகிய மங்கையுடன் நீங்களும், எங்களில் ஒருவராக உங்களைக் கருதிக் கொண்டு எமது சிறிய ஊரில் இரவில் தங்கி, நாளை அங்கிருந்து செல்வதே நல்லது என்று கூறி தங்களில் ஒருவராக அவர்களது சிற்றூரில் இரவு தங்கிச் செல்லும்படி அழைக்கிறார்கள்(69).*

*தலைவி உடன்போக்கு மேற்கொண்டதை அறிந்த செவிலித்தாய் துயர் தாளாமல் தலைவியைத் தேடி பாலை நிலம் வழியே செல்கிறாள். வழியில் இருக்கும் குரா மரத்தின் கீழ் நின்று மரத்திடம் உதவுமாறு முறையிடுகிறாள். ஒரு தாய் போன்று மன நெகிழ்வுற்றுத் தாழ்ந்து முலை போன்ற கோங்க மலர்களைக் கொடுத்துப் பாலூட்ட நீ பொம்மை போன்ற பெண் குழந்தையைப் போன்ற காய்கள் பெற்றெடுத்தாய் குரா மரமே. அது போலவே தலைவியும் நான் பராமரிக்கும் எனது மகள் தான் பெரிய குராமரமே! அவள் உன்னிடம் சொல்லியவற்றை என்னிடம் சொல்ல முடியாவிட்டாலும் பரவாயில்லை. ஆனாலும், முள் போன்ற கூரிய பற்களைக் கொண்ட என் மகள் தனது தலைவனுடன் சென்ற வழி இதுதான் என்று மனமுவந்து அவள் எந்த வழியில் சென்றாள் என்பதை எனக்குக் காண்பிப்பாயாக என்று குராவிடம் கூறுகிறாள்(65).*

*அவ்வழியே வரும் கணவன் மனைவியாகிய இருவர் செவிலித்தாயின் நிலை கண்டு அவள் மீது கழிவிரக்கம் கொள்கிறார்கள். தாங்கள் அவர்களைப் பார்த்தோம் என்றும், விரைந்து சென்றால் அவர்களைக் காணலாம் என்றும் கூறுகிறார்கள். விரைந்து நீங்கள் செல்வீர்கள் என்றால், நம்மவர்களாகிய அவ்விருவரையும் காணவேண்டும் என்ற உங்கள் எண்ணம் எளிதில் நிறைவேறும். (பிறன்மனை நோக்காப் பேராண்மை கொண்டவனாகிய அவன்) வெப்ப மிக்க கதிரவன் போன்ற தலைவனை, நான் பார்த்தேன் என்றும், குளிர்ந்த மதியையொத்த தலைவியை (மற்ற ஆண்மகனை ஏறெடுத்தும் பார்க்காத) இவள் பார்த்தாளாம் என்று ஆண்மகன் செவிலித்தாயிடம் கூறுகிறான்(89). அவன் காட்டிய வழியில் விரைகிறாள் செவிலித்தாய். எதிர்ப் பட்டவரிடம் எல்லாம் அவர்களை இந்த வழியில் நீங்கள் பார்த்தீர்களா, பார்த்தீர்களா என்று கேட்டுக் கொண்டே கவலை தோய்ந்த முகத்துடன் செல்கிறாள்.*

*நிலவையும் கதிரையும் ஒத்திருந்த தலைவியும் தலைவனும் அந்தப் பாலை நிலத்தின் வழி சென்றதைக் கண்டதாக வழிப்போக்கர்கள் சிலர் செவிலித்தாயிடம் கூறுகிறார்கள்(71). செவிலித்தாயே, அழகிய தலைவி துன்பம் ஏதுமின்றித்தான் பாலைநில வழியே சென்றாள், எனவே கவலையற்க என வழிப்போக்கர்களில் சிலர் செவிலித்தாய்க்கு ஆறுதலும் கூறுகிறார்கள் (72). வீட்டில் தலைவி பிரிந்து*

*சென்றுவிட்டதால் நற்றாயும் வருந்தியவாறு உள்ளாள். எரியும் தழல் போலச் சுடுகின்ற பகலவனின் ஒப்பில்லாத கதிர்களால் வெம்மை சூழ்ந்த பாலை நிலத்தில், விரித்து விட்ட கூந்தலையுடைய என்மகள் விருப்பத்தோடு செல்லும் வழியில், முறுக்கி விட்ட கயிற்றினைப் போன்று மலைப்பாம்புகள் புரண்டு இறந்து கிடக்குமே. அத்தகைய கொடிய பாலை நில வழியே தனது தலைவனைப் பின்தொடர்ந்து சென்றுவிட்டாளே என் மகள். அத்தகைய கொடிய வழி மகளுக்கு அச்சம் தருமோ என அன்னை தனக்குள் கேட்டு கவலை கொள்கிறாள் (75). மகள் திரும்பி வருவாளா? உடன் போக்கு சென்ற மகளைத் தலைவன் எனது வீட்டிற்கு அழைத்து வருவானா? அல்லது தனது வீட்டிற்கே கொண்டு சென்றுவிடுவானா? என்று நற்றாய் நிமித்தம் கேட்க முடிவு செய்கிறாள். தெய்வத் தன்மையின் அருளால் நிமித்தம் கூறக்கூடிய ஒருத்தியை அழைக்கிறாள். நிமித்தம் கூறும் பலரிலும் நீ வேறுபட்டவள் என்ற கருத்தினால் உன்னைக் கேட்கிறேன். உன் தெய்வத்தன்மையின் உதவி கொண்டு கூறுவாயாக. புகழ்ந்து கூறும் நற்பண்பினைக் கொண்டவனாக எனது மனைக்கு முறைப்படி மணம் முடித்துத் தர எனது மகளைத் தலைவன் அழைத்து வருவானா? அல்லது, ஒளி மிக்க வளையணிந்த என் மகளைத் தனது மனைக்கே அழைத்துச் சென்று விடுவானா ? என்று நற்றாய் குறி சொல்பவளிடம் கேட்கிறாள்(90).*

***குறிப்பு - கதையாகக் கோர்க்கப்பட்ட பாடல்களின் வரிசை, பாடல் எண்களுடன் கொடுக்கப்பட்டுள்ளது:***

*76. என் நெஞ்சே! பொருள் ஈட்ட நான் பாலை வழி செல்ல இருப்பதை எண்ணி அஞ்சாதே என்று நான் தலைவியை ஆற்றுவிக்கும் முன் அவளது பிரிவை எண்ணி நான் அஞ்சுவதை உணர்ந்து கொண்ட தலைவியும் அஞ்சி கண்கலங்கினாள், அவளை எவ்வாறு பிரிவது எனத் தலைவன் கலங்குகிறான்.*

*85. பொருளால் எவற்றையும் அடைந்துவிடலாம் என்று பொருள் தேடி நீங்கள் செல்ல விரும்புகையில், தலைவியின் மீது அருள் காட்ட மறக்கிறீர்கள். பொருளால் கடந்து சென்ற இளமையைப் பெறமுடியாது என்பதை எண்ணிப் பாருங்கள் என்று தோழி தலைவனுக்கு அறிவுரை கூறுகிறாள்.*

*86. தலைவன் பொருள் தேட பாலைநிலம் வழியே செல்ல முடிவெடுத்துள்ளான் என்பதை என்னிடம் மறைக்காது சொன்ன நீ ஒரு சிறந்த தோழியே, ஆனால் அதனால் என்ன பயன், ஆறுதல் வழங்கக் கூடியவர் எவரிடமாவது சென்று சொல் என்று தலைவி மனம் வருந்தி தோழியிடம் சொல்கிறாள்.*

*91. நல்ல வாழ்வை வாழ விரும்பும் எவரும் கொடிய பாலை நிலம் வழியாகச் செல்ல விரும்ப மாட்டார்கள், தலைவன் அவ்வாறு செல்லுதல் நல்லதல்ல என்று தலைவி தோழியிடம் கூறுகிறாள்.*

*92. தன்னைச் சார்ந்தவரின் நலவாழ்வைக் கருத்தில் கொள்ளும் எவரும் கொடிய பாலை நிலம் வழியாகச் செல்ல விரும்ப மாட்டார்கள், தலைவன் அவ்வாறு செல்லுதல் நல்லதல்ல என்று தலைவி தோழியிடம் கூறுகிறாள்.*

*82. தலைவியே ஆண்களின் கடமை பொருள் தேடுதல் என்பதால் தலைவன் பொருள் தேடிச் சென்றுள்ளார். பிறர் அறியும் வண்ணம் உனது துயரை வெளிக்காட்டாதிருக்க வேண்டி நீ அதிகம் பேசாமல் இருத்தல் நல்லது எனத் தோழி தலைவிக்குக் கூறுகிறாள்.*

*83. தலைவன் பொருள் தேடி பாலை வழி செல்லவிருக்கிறான் என்று தோழி கூறியது கேட்டு தலைவி அதற்கு உடன்படாது சொல்லியது.*

*84. கொள்ளையர்கள் இரக்கமற்று கொலை செய்யக்கூடிய பாலை நில வழியாக அறிவுடைய எவரும் செல்ல விரும்ப மாட்டார்கள், ஆதலால் தலைவன் பொருள் தேடி அந்த வழியில் செல்வது நல்லதல்ல என்று தலைவி தோழியிடம் கூறுகிறாள்.*

*68. நெஞ்சே, பொருள் தேட எப்படிச் செல்வேன், பாலை வழியிலும் அழகிய என் தலைவியின் நீண்ட கண்களின் ஏக்கப் பார்வை என்னை எதிர் கொண்டு துரத்துகிறதே என்று தலைவன் வருந்துகிறான்.*

*74. புறாவே ஊடல் கொள்வதால் பயனில்லை, என்னைவிட்டு நீங்கிய தலைவன் சென்ற சுவட்டைக் கண்டு எனது மேனியில் பசலை பூத்தது, அன்பு கொண்டவராயினும் கடின நெஞ்சம் கொண்டு பிரிந்துவிடுவார் என்று தன்னிலைக்கு இரங்கிப் புலம்புகிறாள் தலைவி.*

*63. தலைவியே உனக்குப் பசலை நோய் தோன்றிய காரணம் என்ன என்று தோழி தலைவியை வினவினாள்.*

*79. தலைவன் விரைவில் வருவேன் என்று சொன்ன சொல்லின் உறுதியை அறியாமல் துயர் கொள்ளும் தலைவியே, தலைவன் வரும் நாள் வெகு தொலைவில் இல்லை, அவர் வருவேன் என்று சொன்ன பருவகாலம் துவங்கிவிட்டது. வரப்போகும் அவரைக் கண்டு களிப்பாயாக என்று தோழி தலைவியிடம் கூறுகிறாள்.*

*78. தலைவன் பிரிவைத் தாங்க மாட்டாளே தலைவி எனக் கவலையுறும் தோழிக்கு, அவர் நல்ல வகையில் திரும்புவார் என்று கூறி தலைவி தனது உறுதியை உணர்த்துகிறாள்.*
*64. வேனில் வந்தது; இனி வேந்தனும் வருவான் கவலையற்க தலைவியே! என்று தோழி தலைவிக்கு ஆறுதல் சொல்கிறாள்.*
*66. வேனிற் காலம் துவங்கி விட்டது, முருங்க மரங்கள் பூத்துக் குலுங்குகின்றன, வேனிலில் வருவதாகக் கூறிச் சென்ற தலைவன் வந்துவிடுவான் தலைவியே!*
*67. பொருள் தேடிச் சென்ற தலைவன் சொன்னபடி வேனிலில் வரவில்லை, வருந்தாதே அமைதியாக இரு என்கிறாயே தோழி என்னால் எப்படி வருந்தாமல் இருக்க முடியும் என்று தலைவி தோழியிடம் கேட்கிறாள்.*
*80. தலைவியே பொருள் தேடச் சென்ற தலைவன் விரைவில் வருவார். துடிக்கும் எனது இடது கண் அந்த நல்ல செய்திக்கு அறிகுறியாகும், கவலை வேண்டாம் எனத் தோழி தலைவியிடம் கூறுகிறாள்.*
*77. பெண்ணே என் எதிரே என்னைச் செல்லவிடாமல் தடுக்கும் உனது பார்வையுடன் நீ நின்றாய் என்றால், என்னால் உன்னை விட்டுச் செல்ல முடியுமா? என்று தன் மனக்கண்ணில் தோன்றிய தலைவியின் உருவத்துடன் வேலை நிறைவேறிய பின்னர் மீண்டும் வாழிடம் திரும்ப எண்ணும் தலைவன் கூறுகிறான்.*
*70. மான் போன்ற பார்வை கொண்ட பெண்ணே இங்கு மணலில் வந்து என்னுடன் விளையாடுவாயாக என்று தலைவன் அழைக்கிறான்.*
*81. இற்செறிப்புக்காரணமாகப் புனத்தை விட்டுச் சென்றுவிட்ட தலைவியைத் தேடிச் சென்ற தலைவன் தனது ஆற்றாமையால் மரம் செடி கொடிகளிடம் கேள்வி எழுப்பிக் கொண்டிருந்தான்.*
*73. முன்னர் தலைவனுடன் உடன் போக்கை மேற்கொள்ள விருந்த தலைவி, பின்னர் அச்செய்கையால் ஏற்படக் கூடிய துயரை எண்ணிக் கைவிட்டாள் என்று தோழி தலைவனிடம் கூறினாள்.*
*87. தலைவனுடன் உடன்போக்கு செய்யும்படி தோழி சொன்ன அறிவுரைக்கு உடன்பட்ட தலைவி, விற்போரில் வல்லவனான அவனுடன் பாலை நில வழியில் செல்வது கடினமான செயல் அல்ல என்கிறாள்.*
*88. எங்களது காதலை ஏற்காமல் பொல்லாப்பு கூறும் எங்களது இல்லத்தாரைப் பிரிந்து தலைவனுடன் நான் வெளியேறுகிறேன். தோழியே எனது பெற்றோரையும் தமையன் மாரையும் சந்திக்க என் வீடு சென்றால் எங்களது அன்பைக் கூறி, உடன்போக்கு செல்லும் எனது நிலையையும் கூறி அவர்களது மனதை மாற்றி எல்லோருக்கும் நல்லவளாக இரு என்று தலைவி தோழியிடம் கேட்டுக் கொள்கிறாள்.*
*69. தலைவியை அழைத்துக் கொண்டு பாலை வழிச்செல்லும் தலைவனிடம், பொழுது சாயப் போகிறது எங்கள் சிற்றூரில் இரவு தங்கி நாளை செல்க என்று எதிர்ப்பட்ட வழிப்போக்கர்கள் கூறுகிறார்கள்.*
*65. சுரத்திடை (பாலை நிலவழி) தனது தலைவனுடன் தலைவி சென்ற வழி எது என்று எனக்குக் காட்டுவாயாக எனச் செவிலித்தாய் குரா மரத்தருகில் நின்று புலம்புகிறாள்.*
*89. உடன்போக்கு சென்ற தலைவியையும் தலைவனையும் பாலை நில வழியே தேடிச் செல்லும் செவிலித்தாயிடம், எதிர்ப்படும் கணவன் மனைவியாகிய இருவர்,*

*தாங்கள் அவர்களைப் பார்த்தோம் என்றும், விரைந்து சென்றால் அவர்களைக் காணலாம் என்று கூறுகிறார்கள்.*

*71. நிலவையும் கதிரையும் ஒத்திருந்த தலைவியும் தலைவனும் அந்தப் பாலை நிலத்தின் வழி சென்றதைக் கண்டதாக வழிப்போக்கர்கள் செவிலித்தாயிடம் கூறுகிறார்கள்.*

*72. செவிலித்தாயே, அழகிய தலைவி துன்பம் ஏதுமின்றித்தான் பாலைநில வழியே சென்றாள், எனவே கவலையற்க என வழிப்போக்கர் செவிலித்தாய்க்கு ஆறுதல் கூறினர்.*

*75. கொடிய பாலை நில வழியே தனது தலைவனைப் பின்தொடர்ந்து சென்றுவிட்டாளே என் மகள், அந்த வழி அவளுக்கு அச்சம் தருவதாக இருக்குமோ என்று துயர் கொள்கிறாள் தாய்.*

*90. உடன் போக்கு சென்ற மகளைத் தலைவன் எனது வீட்டிற்கு அழைத்து வருவானா? அல்லது தனது வீட்டிற்கே கொண்டு சென்றுவிடுவானா? என்று நற்றாய் நிமித்தம் கூறுபவரிடம் குறி கேட்கிறாள்.*

# அன்பின் ஐந்திணை – முல்லை

*"மாயோன் மேய காடுறை உலகமும்" எனத் தொல்காப்பியம் முல்லை நிலம் குறித்து வரையறுக்கிறது. இப்பகுதியில் மிகுந்துள்ள முல்லை மலரின் பெயரினைத் தாங்கியுள்ள முல்லை நிலத் திணையின் பெரும் பொழுது கார்காலம் எனவும், சிறுபொழுது மாலை நேரம் எனவும் நிலத்துக்குரிய பொழுதுகளாக அமைந்து வருகிறது. காடும், காடு சார்ந்த முல்லை நிலம், செம்மண் பரந்திருத்தலால் செம்புலம் எனவும் அழைக்கப்படுகிறது.*

*முல்லைத்திணைக்குரிய ஒழுக்கம் என்பது தலைவி தலைவன் வருகையை எதிர்நோக்கி ஆற்றியிருக்கும் இருத்தலும், இருத்தல் நிமித்தமும் என்ற ஒழுக்கமாகும். தலைவன் திரும்புவதாகக் குறித்துச் சென்ற கார்ப்பருவம் வந்தும் அவன் வராத நிலை கண்ட தலைவி மனம் கலங்கி தோழியிடம் புலம்பும் வகையிலும், தோழி தலைவியின் துயரை ஆற்றுவிக்கும் வகையிலும் பாடல்களின் கருத்துகள் அமைவதைக் காணலாம். திணைமாலை நூற்றைம்பது நூலின் முல்லைத் திணைப் பாடல்களில் முல்லை நில வளமையும் தோற்றமும், அழகிய மழைக்காலமும், மயங்கும் மாலைப் பொழுதும் மிக மிக அழகாக வர்ணிக்கப்பட்டுள்ளது.*

*மேலும், திணைமாலை நூற்றைம்பது நூலின் முல்லைத் திணைப் பாடல்களில் தொன்மக் கதைகளும் இடம் பெறுகின்றன. வரிசையில் முதல் பாடலிலேயே மாமர வடிவில் கடலில் புகுந்து ஒளிந்து கொண்ட சூரனை முருகன் தனது வேலால் அழித்த தொன்மக் கதை இடம் பெறுவதைக் காணலாம். மழை முகில் சூரனை ஒழித்த முருகனின் வேல் போல ஒளி கொண்டு மின்னியதாகக் காட்டப்படுகிறது (93). கண்ணன் சக்கரப் படையைச் செலுத்தி யானையின் மத்தகத்தைத் தாக்கி அதனைக் கொன்ற தொன்மக் கதையும் (97) இடம் பெறுகிறது. யானையின் மத்தகத்தில் புதைந்த சக்கரம் போல மலையின் பின் வட்ட வடிவ பகலவன் மறைவதாக ஒப்பிடப்படுகிறது. அதுமட்டுமின்றி, கருத்து இருண்ட வானத்திற்கும், வெண்மையான பாலொளி சிந்தும் நிலவிற்கும் கண்ணனும் அவனது அண்ணன் பலராமனும் ஒப்புமையாகக் காட்டப் படுகிறார்கள்(96, 97).*

*முல்லைத் திணைக்குரியதாக இந்த நூலில் இடம்பெறும் பல பாடல்களில் மழை தோன்றும் அறிவியல் கருத்தும் இடம் பெறுகின்றது. முல்லைத் திணைக்கான 31 பாடல்களின் 7 பாடல்களில் (பாடல் எண்கள்: 93, 95, 100, 104, 105, 109,114) கடல் நீர் கதிரவன் வெப்பத்தால் மேகமாகிக் குளிர்ந்து மழையாகப் பொழியும் அறிவியல் உண்மை கூறப்படுகிறது.*

*பாடல்களில் வெளிப்படையாகக் குறிப்பிடாமல் தலைவி ஒருமுறை (பாடல் 108 இல்) "உருமுடை வான் ஒன்று ஒழிய, நோய் செய்தவாறு" என்று கூறுகிறாள். அதாவது, தோழியே! இடியோடு கூடிப் பெய்கின்ற இம்மழை, என் போன்று காமம்*

*கொண்டவர்களுக்கு இறப்பு என்ற ஒன்று நீங்கலாக மற்ற பிற துன்பங்களையும் உண்டாக்குவதாகும் எனத் தலைவி குறிப்பிடுகிறாள். அதற்குப் பாடல் வரிகளை மட்டும் வைத்துப் பொருள் கொண்டால் இவ்வாறுதான் பொருள் கொள்ளலாம். இருப்பினும் பழைய உரையில், பிரிவினால் காதலர் கொள்ளும் நோய் வகை பத்து என்ற ஒரு எண்ணிக்கையையும், அதில் இறுதியில் உள்ள மரணம் என்பது தவிர மற்ற ஒன்பது துன்பங்களும் தலைவியை வருத்துகிறது எனக் குறிப்பிடப்பட்டு ஒரு காதல் நோய்களின் பட்டியலும் கிடைக்கிறது. காதலர் எதிர்கொள்ளும் பத்துவகை நோய்கள் என்பது அரியதோர் தகவலாக இருப்பதால் அது இங்குக் கொடுக்கப்படுகிறது.*
*பத்து வகை காதல் நோய்த் துன்பங்கள்: 1. அன்பொடு பார்த்தல், 2. உளங்கொடு பற்றல், 3. புணர்ச்சி வேட்கை, 4. உறக்க மொழிதல், 5. உடல் மெலிதல், 6. உணர்வொழிதல், 7. நாணழிதல், 8. வாய்விட்டரற்றல், 9. மயக்கமுறுதல் 10. இறப்பு.*

*திணைமாலை நூற்றைம்பது நூலின் முல்லைத் திணைப் பாடல்கள் அனைத்திலும் குறிப்பிடப்படும் தலைவனும் தலைவியும் தோழியும் ஒருவரே என்றோ அல்லது அவர்கள் வாழுமிடம் குறிப்பிட்ட ஒரு முல்லை நில ஊர் என்றோ கூறுதலும் இயலாது. இருப்பினும், மற்ற பிற திணைப் பாடல்களைத் தொகுத்து ஒரே கதைக்களமாக அமைக்கக் கையாண்ட அதே முறையில், இத்திணைக்குரிய 31 முல்லை நிலப் பாடல்களையும் (பாடல்கள்: 93-123) ஒரே தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே நிகழும் காதலாகக் கொண்டு ஒரு வரிசைப்படுத்தி அவற்றிலிருந்து ஒரு கதையும் உருவாக்கலாம். அத்தகைய முயற்சியே இக்கட்டுரை.*

*திணைமாலை நூற்றைம்பது நூலின் முல்லை நிலப் பாடல்களில் இடம் பெறுபவர் தலைவியும் தோழியும் மட்டுமே. தலைவன் ஒரே ஒரு பாடலில் மட்டுமே இடம் பெறுகின்றான். அவனுக்குத் தோழனும் கிடையாது. தலைவி, தோழி தலைவன் என எவருக்குமே பெற்றோர் உடன் பிறந்தவர் போன்ற குடும்ப உறவுகளோ, கடந்த காலத்தில் காதலர்கள் சந்தித்துக் கொண்ட நிகழ்வுகள் போன்றவற்றைக் குறித்த குறிப்புகளோ கூட இப்பாடல்களில் கொடுக்கப் படவில்லை. ஆகையால் இதைக் கதை வடிவிற்குக் கொண்டு செல்வதைவிட ஓரங்க நாடகக் காட்சி ஒன்றில், மான் போல மருண்டு நோக்கும் இளமங்கையான தலைவிக்கும், வாள் போன்ற நீண்ட கண்களையுடைய அவளது தோழிக்கும் இடையே நடக்கும் உரையாடலாகவே காட்டிச் செல்ல இயலும்.*

*தலைவன் திரும்பி வரக் காலம் தாழ்த்துகிறானே என்று கலங்கும் தலைவியின் கவலைதான் எல்லா பாடல்களிலும் ஒலிக்கிறது. தோழியும் தக்க துணையாகத் தலைவிக்கு ஆறுதல் அளிக்கிறாள். கண்முன்னே கார்காலத்தின் சுவடுகள் தெரிந்தாலும் கூட தலைவன் திரும்புவதாகச் சொன்ன கார்காலம் இன்னமும் துவங்கவில்லை என்னும் அளவிற்குப் பொய்யுரைத்து தலைவிக்கு ஆறுதல் கூறும் நிலைக்கும் செல்கிறாள். உச்சக்கட்டக் காட்சியாகத் தலைவன் வருகிறான், அவன் வரவினால் தலைவி மகிழ்ந்தாள் என்ற வகையில் ஒரு சிறுகதையாக இப்பாடல்களைத் தொகுக்கலாம். வரிகளுக்குப் பின்னர் அடைப்புக் குறிகளுக்குள்*

*கொடுக்கப்படும் எண், திணைமாலை நூற்றைம்பது நூலில் உள்ள பாடல்களின் வரிசை எண்.*

*அழகிய முல்லை நிலப்பகுதியில், வீட்டின் தோட்டத்தில் அமர்ந்து தலைவியும் தோழியும் உரையாடிக் கொண்டிருக்கிறார்கள். கார்காலத்தில் தளிர்த்து வளரும் தளவமாகிய செம்முல்லைக் கொடிகள் அருகில் உள்ள குருந்த மரத்தினைப் பற்றி அணைத்துத் தழுவிப் படர்ந்திருக்கின்றன. மழை பொழிந்து முல்லை நிலத்தின் காடுகளெல்லாம் தழைத்தோங்கி முல்லை நிலப்பகுதி அழகாக மாறி இருக்கின்றது. பொன்னால் செய்யப்பட்ட சரங்களாகக் கொன்றை மரத்தில் பூக்கள் மலர்ந்திருக்கின்றன. காந்தள் மொட்டுக்கள் பூத்து நிற்கின்றன. சாதாரி பண்ணொலி போல இசை பாடிய வண்ணம் பூக்கள் தோறும் வண்டுகள் பறந்து செல்கின்றன. முல்லை நிலமெங்கும் ஆண் மான்கள் தம்முடைய பெண்மான்களுடனே கூடிக் களித்திட, அவற்றின் குட்டிகளும் அவற்றோடு சேர்ந்து குதித்துக் கும்மாளமிடுகின்றன. மயில்கள் தோகை விரித்து ஆடுகின்றன. கருக்கொண்டு பூத்துள்ள காயாம்பூச் செடியின் பூங்கொத்துகளை, இறகுகள் தொகுதியாக அமைந்த ஆண் மயிலின் தோகை என்று எண்ணி, அஞ்சி விலகிப் பின்வாங்கி, இடியால் தாக்குண்ட பூக்களையுடைய வெண் காந்தலின் அருகிலே சென்று நாகப்பாம்பானது அந்த வெண்காந்தள் பூ போன்றே தன் உருவை மறைத்து நிற்கின்றது. இடையர்களின் குழலோசை மனதைக் கவரும் வண்ணம் ஒலிக்கிறது. அவர்கள் பறியென்னும் படுக்கைக்கு மேலாக ஓலைப்படல் வேயப்பட்டிருக்க, பறிக்குக் கீழாக பிறியோலையை விலக்கி அழைத்தும் அதட்டியும் ஆடுகளைப் படலுக்குள் அடைக்கிறார்கள். பகலவன் மலைத்தொடரின் பின் சென்று மறைந்ததால் இருள் பரவ, நிலவு தோன்றி அவ்விருளைத் தனது வெண்மையான நிலவொளியினை வெளிவிட்டு விரட்டிவிடுகின்றது.*

*கார்காலத்தில் திரும்புவேன் என்று தலைவன் அளித்த உறுதிமொழியை நினைத்து அவன் இன்னமும் வராததால் தலைவி மனம் கலங்குகிறாள். தனது துயரை தோழியிடம் கூறுகிறாள்.*

*மயக்கும் மாலைப்பொழுது எனது உயிரை வாட்டுகிறது (94). கார்ப்பருவம் வந்ததால் கொன்றை மலரத் துவங்குகின்றது தோழியே காண்பாயாக ! (98). கார்காலத்து முல்லைக்கொடிகள் குருந்த மரத்தை அணைத்துப் படர்ந்திருப்பதையும் காண்பாய் தோழி! (105). செம்முல்லைக் கொடிகள் அருகில் உள்ள குருந்த மரத்தில் படர்வது போலத் தலைவனை அணைத்துக் கொள்ள எனக்கு வழி இல்லையே (93). மாலை மயக்கத்தினை பொறுக்க இயலாதவளாகத் தலைவனை எண்ணி வருந்துகின்றேன் (97). புல்லாங்குழலின் இசையும் மாலைப் பொழுதும் என்னை வருத்துகின்றன (101). இருண்ட வானும் வெண்ணிலவும் காதல் துணை அற்றவருக்குத் துன்பத்தைத் தரும் தன்மையைக் கொண்டனவாய் உள்ளன தோழி! (96).*

*முன்னர் பிரியும் பொழுது, தன் விருப்பத்திற்கு நான் இணங்க வேண்டும் என்பதற்காக, கார்காலத்தில் திரும்பிவிடுவேன் என்று தலைவன் கொடுத்த உறுதிமொழி தவறிப் போனது. கார்காலம் துவங்கிவிட்டது. ஆனால், கொடுத்த*

*உறுதிமொழியின்படி தலைவனின் தேர் இங்கு வரவில்லை. தோழியே! ஆதலால், உள்ளத்தில் ஏற்படும் அச்சத்தால் கண்ணீரால் நிறைகின்றன என் விழிகள் (100). தலைவனின் பிரிவால் என் மேனியின் ஒளி மங்கியது, ஒளியிழந்தன எனது கண்களும், என் தோள்களும் அழகினை இழந்தன. எனது மெல்லிய விரல்களும் தலைவனைப் பிரிந்ததால் நலமிழந்த நாட்களை எண்ணத் துவங்கி, அந்த நாட்களும் எண்ணிக்கையில் அதிகமானதால் விரல்களும் தேய்ந்து விட்டன (99). கார்காலத்தில் திரும்புவேன் என்று உறுதி கூறிய தலைவனின் மொழியும் பொய்யாக இருக்கக்கூடும் என்ற தெளிவைப் பெறாத நானும் தலைவன் வரவை எதிர்நோக்கி கடமையாக எனது உயிரை வருத்திக் கொண்டிருக்கிறேன் (102). துணையின்றி தவிக்கும் காதலர்கள் துயருற்று இறவாமல் வாழும் வகை ஏதேனுமிருப்பின் என்னவென்று எனக்கு அதை உரைப்பாயாக தோழி (111).*

*கார்காலத்தில் பூத்துத் தழைத்து மலர்களாய் சொரிந்து என்னைக் கொல்கின்றாய் கொன்றை மரமே! என்று தலைவி கொன்றை மரத்தை நோக்கி தோழியின் காதில் விழும்படி கூறுகின்றாள் (104). தோழியும் தலைவியின் துயர் நீக்கும் பொருட்டு இது கார்காலம் அல்ல என்று சொல்லிவிட எண்ணுகிறாள். அவளும் மரத்தை நோக்கி, கார்காலத்தில் பொழியும் மழை போலச் சீரான மழை பொழியாத பொழுதும் செழித்துப் பூத்துள்ள குருந்த மரமே! நீ இவ்வாறாகப் பூத்திருப்பதைக் கண்டு கார்காலம் துவங்கிவிட்டதோ என்று தலைவி கருதும்படிச் செய்கிறாய். இவளை உடல் மெலிந்து வருந்து என்கிறாய். நீ இவளை மட்டும் பெரிதும் துன்புறுத்துகிறாய் என்று தலைவியை ஆற்றுவிக்கும் நோக்கில் இது கார்காலம் அல்ல எனத் தலைவியின் காதில் விழும்படி தோழி குருந்த மரத்தினை நோக்கிக்கூறுகிறாள் (114).*

*பிறகு தோழியை அணுகி, இதைக் கார்காலம் என்று உறுதியாகச் சொல்ல இயலாது. ஏன் எனில், மழை பெய்யும் தன்மையை நோக்கினால் அது கார்ப்பருவத்தின் மழைக்கேற்ற முதிர்ச்சியுடன் சீராக இல்லை. கார்காலம் வந்துவிட்டதே என்று தவறான ஓர் பருவ காலத்தில் எண்ணி வருந்துவதை நீ ஒரு செயலாகச் செய்யலாமா? தலைவியே! (103) என்று தோழி தலைவி ஆற்றுவிக்க முறப்பட்டு இது கார்காலமே அல்ல என்று பொய்யுரைக்க முற்படுகிறாள்.*

*காந்தள் மொட்டுக்கள் பூத்து நின்றன. எங்கும் மழையால் நீர் நிரம்பி தனக்குரிய கார்ப்பருவத்தினைக் காட்டி நிற்கிறது கார்காலத்து முல்லை நிலக் காடு. அவ்வாறு இருக்க எதனால் இது என் காதலர் திரும்புவதாகச் சொன்ன கார்ப்பருவம் அல்லவென்று சொல்ல முயல்கிறாய் இப்பொழுது? (118). கார்காலத்தில் பூக்கும் மலர்கள் எங்கும் தேன் வண்டுகள் பாடும் நிலை கண்டு இது கார்காலம்தான் என்று எவரும் அறிய மாட்டார்களா? (120). ஆனால், நீயோ இது கார்ப்பருவம் அல்ல என்று சொல்லி நிற்கின்றாய், அவ்வாறு கார்காலம் அல்ல என்று உரைப்பது பொருத்தமான செயலாகுமா? (119). கார்காலம் இன்னமும் வரவேயில்லை என்று பலவாறு சொல்லி எனக்கு ஆறுதல் சொல்லும், மூங்கில் போன்ற தோள்களை உடைய தோழியே! எனது கண்ணீரினையே தாரை நீராகக் கொண்டு எனது உயிரை வார்த்துக் கொடுத்தேன் இந்த பருவமல்லாத பருவத்திற்கு என்று தலைவி தோழியிடம் கூறினாள் (103).*

*மேலும் தொடர்ந்து, என் காதலர் இத்தனை நாட்களில் திரும்பிவிடுவேன் என்று கூறிச் சென்ற நாட்கணக்கு தவறாதிருக்குமானால் இது கார்காலமே. இது கார்காலமாக இல்லாவிடில் மழை இவ்வாறு தொடர்ந்து பொழியாது. ஆதலால், எனக்கு ஆறுதல் கூறும் எண்ணத்தில், எனது துயர் நீக்கும் நோக்கில் இது கார்காலம் அல்ல என்று நீ சொல்வது எனக்கு நம்பிக்கை அளிக்காது என்று தலைவி தோழியிடம் கூறினாள் (108).*

*தனது மறுதலிக்கும் முயற்சி பயனின்றிப் போனதை உணர்ந்த தோழி, தலைவியை ஆற்றுவிக்கும் தனது வழிமுறையை மாற்றி, தலைவியின் கருத்தை ஏற்று அவளுக்கு இசைவாகப் பேசி அவளது துயர் நீக்க நம்பிக்கையூட்டும் வழிமுறையைக் கையாள்கிறாள். இந்த அழகிய கார்காலம் நம்மை வருத்துவதற்கு என்றே வந்துள்ளது தலைவியே ! (107). கார்காலத்தின் அறிகுறிகள் தோன்றிவிட்டன எனவே விரைவில் தலைவன் உறுதிமொழி தந்தது போல வந்துவிடுவான் (95). தலைவன் திரும்பி வாராது இருந்துவிடுவானோ? நிச்சயம் வருவான். கார்காலம் துவங்கியது. ஆகவே நாமும் தலைவன் வரவை எதிர்நோக்கி அவனுக்கு விருந்து முதலியன செய்து காத்திருத்தல் நமது கடமையாகும் தலைவியே (112). தலைவன் திரும்பும் கார்காலமும் வந்தது, தலைவனும் திரும்பி வந்துவிடுவான் என்று தெரிந்தும் என்ன காரணத்தால் இப்பொழுது உனது மெல்லிய தோள்களில் பசலை பூக்களாயின? என்று கேட்டு தோழி தலைவியை வருந்தவேண்டாம் எனத் தோழி வற்புறுத்துகிறாள் (117).*

*தன்னை அன்புடன் ஏற்றுக் கொண்ட காதல் துணையைப் பிரிந்து செல்கின்ற காதலர் எப்படிப்பட்ட கொடியவர்! அந்தப் பிரிவினைப் பொறுத்துக் கொள் என்று பிரிவுத் துயரில் வருந்துபவர்களிடம் சொல்பவர்களும் அது போன்ற கொடியவர்களே ஆவார்கள். அவ்வாறு ஆறுதல் அடையச்சொல்லி வற்புறுத்துவோர் கொடியவர்கள், ஆதலால் தோழி நீயும் கொடியவளே (106). பெரியோர் என்பவரின் பெருந்தன்மைப் பண்பு என்பது என்றும் பெருமைக்குரியதே. துன்பம் வரும் சூழலில் இதைக் கண்கூடாக நாம் அறிந்து கொள்ள முடியும். நமக்கு அருமையான துணையாக இருந்தவர் வருத்தத்தை நீக்கும் வகையில் அருகில் இல்லையே என வருந்தி, மனம் ஆறாது, அன்புடன் தலை சாய்த்துக் கொள்ள வகையற்ற நிலையில் நான் இருப்பதைக் கண்டு, குளிர்ந்த செம்முல்லைச் செடிகளோ சிறுமைக் குணத்தால் சிரித்துக்கொண்டு பூக்கின்றன. ஆனால், அதனைப் பார்த்துப் பொறுக்கவியலாத பெருந்தன்மை கொண்ட மலைகளோ மழை நீரினைக் கண்ணீராக வழிய விட்டு மிகவும் அழுது மயங்குகின்றன (110) என்று கூறி தலைவி வருந்துகிறாள்.*

*கார்காலம் தோன்றிய அறிகுறிகளால் தலைவனின் வரவை எண்ணியிருந்த தலைவி பசலை நோய் கொண்டதைக் கண்டு வருந்திய தோழி, குருந்த மரமே! கொடி முல்லையே! கொன்றை மரமே! உங்களால் கார்காலம் தோன்றிய அறிகுறிகளைக் கண்டு அழகிய கூந்தல் தொங்கிப் புரளும்படியான மூங்கிலையொத்த தோள்களை, பெரும் பீர்க்கம் பூவின் நிறம் போன்று மீண்டும் பசலை பூக்கச் செய்துவிட்டீர்கள் என்கிறாள் (116).*

*நள்ளிரவு பொழுது கடந்தும், பரந்த பிடரி மயிரினையுடைய குதிரைகள் பூட்டப்பட்ட தேரிலமர்ந்து பொருள் தேடச் சென்ற என் தலைவன் வந்தாரில்லை (113). ஒற்றை ஆளாக நான் இருந்தும், ஒன்று அல்லாது பல பகைகளும் என்னை வருத்துதலே தமது தொழிலாகக் கொண்டுள்ளன. துணை அன்றிலை விட்டுப் பிரிந்து வேறாகப் பொருத்தமற்று பனைமடலில் தங்கியுள்ள அன்றில் பறவையும், மாலைப்பொழுதும், பெய்யும் மழையும், ஆம்பற் குழலோசையும், கடலும் மட்டுமின்றி ஊர்ந்து செல்லும் முகில்களும் என் மேல் சினம் கொண்டுள்ளன இதற்கு நான் என்ன செய்வது தோழியே? (121). கார்காலத்தில் மீளுவேன் என்று சொன்ன சொல் தவறிய தலைவன் வாராத இந்நிலை கண்டும் உயிரை நீக்காத நாணமில்லாத என்னுயிரானது, நொறுங்கி உதிர்ந்து விழுவது போலவுள்ளது (122). பொன் போன்ற சிறப்புமிக்க துணையின் அருமை புரியாது பொன் தேடப் பிரிந்து சென்றவர் இக்கார்காலத்தில் திரும்புவர். அவ்வாறு திரும்பி வாரார் என்றால் இனி துணையைச் சேரும் வாய்ப்பிழந்து வாழ்வார் (109) எனத் தோழியிடம் கூறி தலைவி வருந்தினாள்.*

*ஆனால் தலைவியை மேலும் காக்க வைக்காமல் மறுநாள் காலையில் தலைவன் திரும்பிவிடுகிறான். வாயிலில் தேரில் பூட்டிய குதிரைகளின் மணியோசை கேட்டு தோழி விரைந்து வந்து பார்க்கிறாள். அவளை நோக்கிப் புன்னகைக்கும் தலைவன், நீண்ட பெரிய கண்களில் கண்ணீர் தளும்பும் படி பார்க்கும், மூங்கில் போன்ற மெல்லிய தோள்களையுடைய தலைவியிடம், தலைவனின் தேர் வாசலில் வந்து நிற்கிறது, உன் தலைவன் திரும்பிவிட்டான் என்பதைக் கூறுவாய் தோழியே! என்று கூறுகிறான்(115).*

*மகிழ்ச்சியுடன் மின்னலாகத் தோட்டத்திற்கு ஓடி அங்கு மூங்கிலைச் சுட்டுத் துளையிட்டுப் புல்லாங்குழல் செய்வதைப் பார்த்துக் கொண்டிருக்கும் தலைவியிடம் தலைவன் வரவைக் கூறுகிறாள் தோழி. தலைவன் வந்து விட்டான், தன்னை ஒவ்வொரு மாலையும் குழலிசையால் வருத்தும் மூங்கிலால் ஆன புல்லாங்குழலால் அவ்வாறு இனி செய்ய இயலாது என மகிழ்கிறாள் தலைவி. ஏடி தோழியே! தலைவனைப் பிரிந்திருந்த என்னை, வருத்துதற்கு இலகுவானவள் என்ற எண்ணத்தில் என்னை வருத்திய புல்லாங்குழலை உலகிற் பலர் அறியச் சுட்டுத் துளை செய்யப்படும் முறையினைக் காண்பாயாக என்று தலைவி தோழியிடம் கூறி (123) மூங்கில் மீது வஞ்சம் தீர்த்துக் கொண்டவள் போல உள்ளம் உவகையுற தலைவனை வரவேற்க வீட்டிற்குள் விரைகிறாள் தலைவி.*

***குறிப்பு - கதையாகக் கோர்க்கப்பட்ட பாடல்களின் வரிசை, பாடல் எண்களுடன் கொடுக்கப்பட்டுள்ளது:***

*94. மயக்கும் மாலைப்பொழுது எனது உயிரை வாட்டுகிறது தோழியே!*

*98. கார்ப்பருவம் வந்ததால் கொன்றை மலரத் துவங்குகின்றது தோழியே காண்பாயாக !*

*105. கார்காலத்து முல்லைக்கொடிகள் குருந்த மரத்தை அணைத்துப் படர்ந்திருப்பதைக் காண்பாய் தோழி!*

*93. செம்முல்லைக் கொடிகள் அருகில் உள்ள குருந்த மரத்தில் படர்வது போலத் தலைவனை அணைத்துக் கொள்ள எனக்கு வழி இல்லையே தோழி!*

*97. மாலை மயக்கத்தினை பொறுக்க இயலாதவளாகத் தலைவனை எண்ணி வருந்துகின்றேன் தோழியே!*

*101. புல்லாங்குழலின் இசையும் மாலைப் பொழுதும் என்னை வருத்துகின்றன தோழி!*

*96. இருண்ட வானும் வெண்ணிலவும் காதல் துணை அற்றவருக்குத் துன்பத்தைத் தரும் தன்மையைக் கொண்டனவாய் உள்ளன தோழி!*

*100. கொடுத்த உறுதிமொழியின்படி தலைவன் வராததால் என் உள்ளத்தில் ஏற்படும் அச்சத்தால் கண்ணீரால் நிறைகின்றன என் விழிகள் தோழியே!*

*99. தலைவனைப் பிரிந்த நாட்களை எண்ணி எண்ணி எனது விரல்களும் நலிந்தன தோழி!*

*102. கார்காலத்தில் திரும்புவேன் என்று கூறிய தலைவன் வாக்குறுதி தவறியவனாக இருக்கக்கூடும் என்ற தெளிவைப் பெறாது நானும் தலைவன் வரவை எதிர்நோக்கி எனது உயிரை வருத்திக் கொண்டிருக்கிறேன்!*

*111. அழகிய கார்காலம் தரும் துயரால் என் உயிர் நீங்காமல் இருக்க ஏதேனும் வழி இருந்தால் சொல்வாயாக தோழி!*

*104. கார்காலத்தில் பூத்துத் தழைத்து மலர்களாய் சொரிந்து என்னைக் கொல்கின்றாய் கொன்றை மரமே!*

*114. கார்காலம் வந்தது போன்று காலம் தவறிப் பூத்துள்ள குருந்த மரமே, இது கார்காலம் அல்ல, தலைவியை வருத்தும் நோக்கில் பூத்துள்ளாய்.*

*118. கார்காலத்தின் அறிகுறிகள் தெளிவாகத் தோன்றுகையில் எதனால் இது கார்ப்பருவம் அல்லவென்று சொல்ல முற்படுகிறாய் தோழி?*

*120. கொன்றை மலர்கள் மலர்ந்து, வண்டுகள் பாடும் மாலைப் பொழுதைக் கண்ட பிறகும் இது கார்காலம்தான் என்ற உண்மையை அறிய மாட்டார்களா?*

*119. கார்காலம் இதுவல்ல என்று சொல்கிறார் சிலர், அது சரியல்ல இது கார்காலம்தான் தோழி!*

*103. இது கார்காலம் அல்ல வென்று எனக்கு ஆறுதல் கூற முற்படும் தோழியே எனது உயிரை இந்தப் பருவத்திற்கே அளிக்கிறேன் நான்.*

*108. எனக்கு ஆறுதல் கூறும் பொருட்டு எனது துயர் நீக்கும் நோக்கில் இது கார்காலம் அல்ல என்று நீ சொல்வது எனக்கு நம்பிக்கை அளிக்காது தோழியே!*

*107. இந்த அழகிய கார்காலம் நம்மை வருத்துவதற்கு என்றே வந்துள்ளது தலைவியே !*

*95. கார்காலம் துவங்கியது, மழையால் காடுகள் தழைத்தோங்குகின்றன, தலைவன் திரும்பும் காலமும் வந்தது தலைவியே!*

*112. கார்காலம் துவங்கியது. தலைவன் வரவை எதிர்நோக்கி அவனுக்கு விருந்து முதலியன செய்து காத்திருத்தல் நமது கடமை தலைவியே!*
*117. தலைவன் திரும்பும் கார்காலமும் வந்தது. தலைவன் திரும்பி வந்துவிடுவான் என்று தெரிந்தும் ஏன் பசலை நோய் கண்டாய் தலைவி?*
*106. தலைவனின் பிரிவினைப் பொறுத்துக் கொள் என்று கூறி என்னை வற்புறுத்தும் நீ கொடியவள் தோழி!*
*110. சிறுமதி கொண்ட செம்முல்லைகள் என் துயர் கண்டு நகைக்க, பெருந்தன்மை கொண்ட மலைகளோ என் நிலை கண்டு அழுகின்றன தோழியே!*
*116. கார்காலம் தோன்றிய அறிகுறிகளால் தலைவனின் வரவை எண்ணியிருந்த தலைவி பசலை நோய் கண்டாள்.*
*113. நள்ளிரவு பொழுது கடந்தும் பொருள் தேடச் சென்ற என் தலைவன் வந்தாரில்லை தோழியே!*
*121. கார்காலத்துப் பல நிகழ்வுகளும் ஒற்றை ஆளான என்னை வருத்துதலே தமது தொழிலாகக் கொண்டுள்ளன தோழியே!*
*122. முல்லைநிலக் காடுகள் தழைத்துள்ள கார்காலத்தில் தலைவன் திரும்பாததால் என்னுயிரானது, நொறுங்கி உதிர்ந்து விழுவது போலவுள்ளது தோழியே!*
*109. பிரிந்து சென்ற தலைவர் சொன்னவாறு திரும்பி வாரார் என்றால் இனி துணையைச் சேரும் வாய்ப்பிழந்து வாழ்வார் தோழி!*
*115. தலைவனின் தேர் வாசலில் வந்து நிற்கிறது, உன் தலைவன் திரும்பிவிட்டான் என்பதைக் கூறுவாய் தோழியே!*
*123. தலைவனைப் பிரிந்திருந்த என்னை வருத்திய குழலும் அதன் கொடிய செய்கையின் பலனை இப்பிறவியிலேயே அடையும் வண்ணம் துளையிடப்படுவதைக் காண்பாய் தோழி!*

# அன்பின் ஐந்திணை – மருதம்

*திணைமாலை நூற்றைம்பது நூலில் ஊடலும், ஊடல் நிமித்தமுமாகிய மருதத் திணை ஒழுக்கம் குறித்த பகுதி நூலின் இறுதியில் (பாடல்கள்:124 - 153) 30 பாடல்களைக் கொண்டு அமைகிறது. தலைவனின் பரத்தையர் தொடர்பால் தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே ஊடல் தோன்றுவது பாடல்களில் இடம் பெறும் பொருண்மை. மகாவித்வான் ரா. ராகவையங்கார் மற்றும் திரு. அ. நடராசபிள்ளை உரை நூல்களில் 128 ஆம் செய்யுள் முதல் அதன் பின் வரும் இருபத்தேழு செய்யுட்கட்கும் பழைய பொழிப்புரை கிடைக்கப் பெறவில்லை.*

*தலைவி, தலைவன், தோழி, தலைவனின் பாங்கர் கூட்டம், பாணன், விறலி, பெரியோர், செவிலித்தாய், காமக்கிழத்தியும் அவளது தோழியும், தலைவன் தலைவியின் சிறு மகன், பரத்தையர் என இந்த பாடல்களில் பலரும் பங்கு பெறுகிறார்கள். ஆனால் தலைவனின் பெற்றோர் பற்றிய குறிப்புகள் எதுவும் திணைமாலை நூற்றைம்பது நூலின் பாடல்களில் இடம் பெறவில்லை. தலைவியின் செவிலித்தாயிடம் தோழி பேசுவதாகவும் தலைவி மருதநிலத் தலைவனின் மகள் என்ற குறிப்பும் ஒரு பாடலில் கிடைக்கிறது. பரத்தையர் குறித்து ஒரு சில பாடல்கள் தவிர்த்து, பெரும்பாலான பாடல்கள் குறிப்பிட்டாலும், பரத்தையர் நேரடியாக இடம் பெறவில்லை, ஒரே ஒரு பாடலில் மட்டும் காமக்கிழத்தி தலைவன் எப்படி மாறிவிட்டான் என்று அவளது தோழியிடம் கூறி வியப்பதாக இடம் பெறுகின்றது. தலைவிக்குப் பின்னர்த் தலைவனாற் கொள்ளப்பட்ட காமக்கிழத்தியையும், பரத்தையரையும் தலைவி எங்கையர் (என் தங்கை போன்று பின்னர் வந்தவர்கள்) என்று குறிப்பிடுகிறாள்.*

*பாலையென்னும் பண், விளரி என்னும் பண், செவ்வழிப்பண் எனப் பல பண்களையும் மட்டுமின்றி அவற்றைக் கலவையாகவும் யாழில் இசைக்கும் திறமை உள்ளவனாகப் பாணன் காட்டப்படுகிறான். தலைவிக்கும் பாணனுக்கும் இடையிலேதான் உரையாடல்கள் மிகுதியாக இடம் பெறுகின்றன. சற்றொப்ப மூன்று பாடல்களில் ஒரு பாடல் இவர்களுக்கு இடையேயான உரையாடல்களே. தலைவி பாணனைக் கடிவதும், விரட்டுவதும், இகழ்ந்து பேசுவதும் என்ற பொருளில் இப்பாடல்கள் அமைகின்றன. தலைவி தோழியிடம் தனது ஆற்றாமையையும், புறத்து ஒழுக்கம் மேற்கொண்டு தலைவன் பரத்தையருடன் திரிகிறான் என்றும், ஊடலைக் கைவிட்ட பிறகு தலைவனைக் குறித்து தோழியிடம் புகழ்வதும் என சில பாடல்கள் அமைந்துள்ளன. தலைவி தனக்குள் பேசிக் கொள்வதாக இரு பாடல்களும், தோழியும் அவ்வாறு தனக்குள் பேசிக் கொள்ளும் பாடல் ஒன்றும் அமைந்துள்ளன.*

*சங்க இலக்கியங்களில் மருதத்திணைப் பாடல்களில் மரபாக, புறத்து ஒழுக்கம் மேற்கொண்டு பரத்தையருடன் திரியும் தலைவனின் செயலை மருதநிலக் கருப்பொருட்களின் மீது ஏற்றி உள்ளுறை உவமமாகப் பாடல்கள்*

*அமைக்கப்படுவது ஒரு வழக்கம். எடுத்துக்காட்டுகள்: மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் இயற்றிய அகநானூற்றுப் பாடல் (பாடல்-56); பரணர் இயற்றிய நற்றிணைப் பாடல் (பாடல்-260). பாடலில் வரும் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வோர் உவமேயத்தைப் பொருத்திக் காட்டும்படி குறிப்பாக அமைந்தால் அது உள்ளுறை உவமம் என்று சொல்லப் படும். பரத்தையர் உறவில் களிக்கும் தலைவனின் செயலைக் குறிப்பிடுகையில் உள்ளுறை உவமமாக, அவனை ஊர் மேயும் எருமை மாடாகவும், மருத நில எருமை குளத்தில் புகுந்து ஆம்பல்களைக் கிழித்து (அதாவது, ஆம்பல்களான தலைவியின் தோழியர்களை வருத்தி) குவளை மலர்களை உண்டு அசைபோடுவதாகவும் (பரத்தையர் குவளை மலர்களுடன் ஒப்பிடப்படுவார்) காட்டப்படும். தலைவியை மெல்லிய கரும்பாகவும், தனக்குக் கிடைத்துள்ள கரும்பின் அருமை அறியாமல், அந்தக் கரும்பை மோதி விலக்கி குளத்தில் பாய்ந்து குவளை மலர்களை உண்டு அசைபோடும் எருமை மாட்டுடன் தலைவனை ஒப்பிடுவதை இந்த நூலிலும் காண முடிகிறது. தலைவியே தலைவனை அவ்வாறு குறிப்பிடவும் செய்கிறாள் (பாடல்கள் - 137, 147, 148).*

*மருத நில அகத்திணை ஒழுக்கத்தையும் இயற்கைக் காட்சிகளையும் அறிய திணைமாலை நூற்றைம்பது நூலின் பாடல்கள் மிகவும் உதவுகின்றன. திணைமாலை நூற்றைம்பது நூலின் மருதத் திணைப் பாடல்கள் அனைத்திலும் குறிப்பிடப்படும் தலைவன், தலைவி, தோழி, பாணன், பரத்தையர் போன்ற எந்த ஒரு பாத்திரப் படைப்பும் ஒருவரே என்றோ, அல்லது அவர்கள் வாழுமிடம் குறிப்பிட்ட ஒரு மருத நில ஊர் என்றோ கூறுதலும் இயலாது. இருப்பினும், திணைமாலை நூற்றைம்பது நூலின் மற்ற பிற திணைப் பாடல்களைத் தொகுத்து ஒரே கதைக்களமாக அமைக்கக் கையாண்ட அதே முறையில், இத்திணைக்குரிய 30 மருத நிலப் பாடல்களையும் (பாடல்கள்:124 - 153) ஒரே தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே நிகழும் ஊடலாகக் கொண்டு ஒரு வரிசைப்படுத்தி அவற்றிலிருந்து ஒரு கதையையும் உருவாக்கலாம். அத்தகைய முயற்சியே இக்கட்டுரை. வரிகளுக்குப் பின்னர் அடைப்புக் குறிகளுக்குள் கொடுக்கப்படும் எண், திணைமாலை நூற்றைம்பது நூலில் உள்ள பாடல்களின் வரிசை எண்.*

*அன்பும் பண்பும் நிறைந்த தலைவி வளமான வயல்கள் நிறைந்த அழகிய மருதநில ஊரின் தலைவனின் ஆசை மகள். அவள் தான் வாழும் ஊருக்கு அருகில் உள்ள மற்றொரு ஊரின் தலைவனிடம் காதல் கொள்கிறாள். அவனும் அவ்வாறே அவள் மீது காதல் கொண்டவனாக இருக்கிறான். அவனும் மருத நிலத்தின் ஊர்த் தலைவன்தான். அவனது ஊரில் அழகிய சிரல் (மீன்கொத்திப்) பறவை தனது பாட்டினை தங்கிப் பாடுகின்ற, பாய்ந்தோடும் நீர் வளம் நிறைந்திருக்கிறது. கழனிகளில் மலர்ந்த தாமரை மலர்கள் நிறைந்திருக்கின்றன. செந்தாமரை மலரோடு ஒன்றாக வளர்ந்து நிற்கின்ற பசுமையான கதிர்க் குலைகளையுடைய செந்நெற் பயிர்கள் நிரம்பிய வயல்கள் கண்ணுக்கு விருந்தாக இருக்கின்றது. மண்ணில் படிந்தது போன்று தாழ்ந்து தொங்கும் குலையினையுடைய வாழை மரங்கள் நிறைந்த பசுமையான நல்ல வளம் மிகுந்த வயல்கள் நிறைந்துள்ளன. அவனை மணம் முடிக்க விரும்பும் தலைவிக்கு அவளது வீட்டில் பெற்றோரும் உற்றாரும் மறுப்பு தெரிவிக்கிறார்கள். தனது காதலுக்கு தன் இல்லத்தில்*

*வரவேற்பில்லை என்பதால் தலைவியும் வேறுவழியின்றி தோழியிடம் தனது முடிவைத் தெரிவித்து விட்டு தலைவனுடன் உடன்போக்கு செய்கிறாள். தலைவனுக்கும் தலைவிக்கும், உடன்போக்கின் பின் தலைவன் மனையில் மண விழா நிகழ்கிறது. அதனைக் கேள்வியுற்ற செவிலித்தாய் மணமக்களைக் காண வந்தபொழுது தோழி மணமக்களின் அன்புடன் கூடிய இல்லற வாழ்க்கையினை செவிலித்தாய்க்கு எடுத்துச் சொல்கிறாள்.*

*தலைவன் மீது மேல் மையல் கொண்டவளான, மருதநிலக் கிழாரின் மகளான நமது தலைவி, தனது கண் நிறைந்த கணவனாகிய காதல் தலைவனின் தோற்றம் சிறக்கும் வண்ணம் அவனுக்காக அழகிய மலர் மாலை தொடுக்கிறாள்(140). மணம் மிக்க சந்தனக் குழம்பு அணியப் பெற்ற அகன்ற மார்பின் மீது கூடியிருக்கும் தலைவி, அவன் மார்பை விட்டு நீங்காது பொழுதும் புலர்ந்துவிடும் வரை இணைந்திருக்கிறாள். அந்த விடியல் வேளையிலே, இல்லத்தின் அருகில் இருக்கும் நெற் குதிர்களின் உச்சியிலே தங்கியிருக்கும் சேவலானது கூவி உறக்கத்திலிருந்து எழுப்ப, அதைக் கேட்டுப் பிற உயிரினங்களும் விழித்தெழுந்து இசையோடு பாடல்களைப் பாடத் துவங்கிவிடும் செவிலித்தாயே! (143) என்று தலைவியும் தலைவனும் ஒருவர் மீது ஒருவர் கொண்ட அன்பில் திளைத்து நடத்தும் இல்லறத்தை மகிழ்ச்சியுடன் செவிலித்தாயிடம் கூறுகிறாள் தோழி.*

*தலைவி கரு கொள்கிறாள். பிறக்கப் போகும் தனது குழந்தையின் வரவை எண்ணி மனதில் மகிழ்ச்சி கொள்கிறாள். ஆனால், நிலை மாறுகிறது! தலைவனுக்கு பரத்தையர் தொடர்பு ஏற்படுகிறது. அவன் அவர்களுடன் புனலாடி மகிழும் செய்திகள் தலைவியை எட்டுகிறது. தலைவி மனம் வருந்துகிறாள், அந்த செய்தியைத் தலைவனுடன் தொடர்பில் உள்ள பாணனே வந்து தலைவியிடம் சொல்கிறான். பாணனே! எனக்குத் தேவையற்ற செய்திகளை இங்கு வந்து கூறாதே. முள் போன்று துன்புறுத்தும் சொற்களைக் கூறாது இவ்விடத்தை விட்டுச் சென்றுவிடு. புதிய பரத்தையர் இல்லதிற்குள் தலைவன் நுழையும் முன்னர் அங்கு சென்று அவன் வருகையை அவர்களுக்கு அறிவிப்பாயாக (126). தலைவன் பற்றிய உண்மைகளை எனக்குச் சொல்லிக் கொண்டிராமல், எழுந்து செல். இங்கு தலைவனின் இல்லத்தில் தனது மனைவியுடன் கூடிக் களிப்பதைக் காரமான செய்கையாய்க் கருதி தலைவன் விலகுகிறான். பரத்தையருடன் கூடுவதை மிக விரும்பி வருகிறான் என்று தன்னை அலங்கரித்துக் கொண்டு காத்திருக்கும் நல்லவர்களாகிய அந்த பரத்தையரிடம் சென்று சொல் (127) என்று தலைவி பாணனிடம் கூறி அவனை விரட்டுகிறாள்.*

*தனிமையில் ஆழ்ந்துள்ள பொழுது, தலைவனின் நடவடிக்கை அவள் மனதில் துயரத்தைக் கிளறுகிறது. இவ்வாறு பரத்தையர் அணைத்து மகிழும் தலைவனின் மார்பை இனி நான் அணைப்பது சரியல்ல(129). பரத்தை அவளது மார்பின் மீது அணிந்திருக்கும் அழகிய மாலையின் வயப்பட்டு, அவளது மனம் போலச் செயல்படும் மருத நிலத்து ஊர்த்தலைவனது தொடர்பின்றி நயமாக விலகிச் சென்று அந்தத் துயருடன் வாழ்வதே மேலானது (128) என்றும் எண்ணி தனது நிலையை நொந்து கொள்கிறாள். தன்னைக் காண வரும் தோழியிடமும் புறத்து ஒழுக்கம் மேற்கொண்டு பரத்தையருடன் தொடர்பில் இருக்கும் தலைவன் பற்றிக்*

*கூறி தலைவி வருந்துகிறாள். கரிய பெரிய கொம்புகளையும், சிவந்த கண்களையும் கொண்ட எருமை, வயலில் பெரிய கொம்பு போல வளர்ந்துள்ள மெல்லிய கரும்புகளை மோதித் தள்ளி, அதன் சிறந்த கொம்புகளால் ஆம்பல் மலர்களைக் களைந்து, அழகிய குவளை மலர்களையும் தின்று அழகான பற்கள் அசை போட வாயைத் தாழ்த்தி உண்பது போலத் தலைவனும் கரும்பு போன்ற என்னை விலக்கி, ஆம்பல் போன்ற எனது தோழியரைப் புறம் தள்ளி, குவளை போன்ற பலவேறு பரத்தையர் பெண்களுடன் தலைவன் உறவாடுகிறான் பாராய் தோழீ! (137, 147) என்கிறாள். ஆனால், தனக்குப் பிறக்கவிருக்கும் குழந்தையைப் பார்க்கத் திரும்பவும் வருவான் (148) என்பதை அறிவேன் என்கிறாள்.*

*அவ்வாறு தலைவன் வருகையில் அவனிடம் கொண்டிருக்கும் ஊடலைக் கைவிட்டுவிடு என்று தோழி தலைவியிடம் கூறுகிறாள். ஆனால் தனக்கு இரண்டகம் செய்த தலைவனை ஏற்க தலைவியின் மனம் இடம் தரவில்லை. துயர் தரும் மனப் பிரிவினை பொதுவான ஊடல் நிலை என்று எண்ணிப் பேசாதே தோழி! தொடர்ந்து பலகாலம் கனிந்த அன்பினை தலைவனின் உறவில் நான் பெறவில்லை. ஆகவே, வெறுப்புற்று இருக்கும் எனது மனநிலை மாறினாலும் கூட, தனது செயலுக்காக வெட்கி நடுங்கும் தலைவனை நான் எப்பொழுதுமே காண விரும்ப மாட்டேன் (153) என்று தோழியிடம் கூறுகிறாள். தலைவிக்கு மகிழ்ச்சி ஏற்படும் வகையில் அழகிய குழந்தை பிறக்கிறது. தலைவன் பிரிந்த துயரை மறந்து தனது மகனைப் பாலூட்டி சீராட்டி வளர்க்கிறாள். தலைவி எதிர்பார்த்தது போலவே, மகன் பிறந்த செய்தி கேட்டு தலைவன் தனது மகனைக் காண ஆவலுடன் இல்லம் திரும்புகிறான். தனது மனைவியைத் தழுவ முற்படுகிறான். ஆனால், தலைவி அவனை ஏற்க மறுக்கிறாள். தனது முலைகளாலும், அணிகளாலும் முன்னே பரத்தையர்கள் தம் உறவுக்காகப் பெற்றுக் கொண்ட பொருளாலும் உனது மார்பில் அவர்கள் பொருந்தியதற்கான சுவடு கலையும் முன்பே, உமிழ் நீரினைச் சிந்துகின்ற வாயினையுடைய என் மகன் முன்னர் வரும் தலைவனே! (நீ என்னைத் தழுவினால்) எனது மார்பில் சுரக்கும் பால் உன் மார்பில் அணிந்துள்ள மாலையினை சிதைத்துவிடும், ஆகவே என்னைத் தழுவாதே, என்று தலைவி தலைவனின் அணைப்பை மறுத்துக் கூறுகிறாள்(152).*

*தலைவியைச் சமாதானப்படுத்தும் வகை அறியாத தலைவன் மீண்டும் பரத்தையர் இல்லம் திரும்புகிறான். பரத்தமை மேற்கொண்டு தலைவியை மறந்து நடந்த தலைவனிடம் தலைவி பிடிவாதமான ஊடலைக் கொண்டிருந்ததால் அவன் அவளை விலக, அதனைக் கண்ட பெரியோர் தலைவி தலைவனிடம் கொண்டுள்ள உண்மை அன்பை எடுத்துக் கூறி தலைவனை அவளுடன் சேர்ந்து வாழும்படி நல்வழியில் நடத்தும் பெரியோர் இடித்துரைக்கிறார்கள். தலைவனே! வீரப்போர்ப் புண்கள் மிகப்பெற்ற மனுவென்னும் அரசன் வகுத்த அறநெறி வழி நடப்பது என்ற பண்பு உன்னை விட்டு நீங்கி, நன்னெறி விலகி நீ வாழ்ந்தாலும், செங்கயல் மீனினைப் போன்ற கண்களையுடைய தலைவி, உன் நடத்தை கண்டு வருந்தாமல் நாணம் கொள்ளும் நிலையானது தலைவியிடம் பெண்மைப் பண்பு நிறைந்துள்ளதைக் காட்டுகிறது. இது புது வகை இசை போல உலகம் அறிந்திராத ஒரு புதுமை என்கிறார்கள்(149).*

*நாட்கள் கடக்கின்றன. வளர்ந்து வரும் மகன் குறித்த செய்திகள் வந்து சேரும் பொழுதெல்லாம் தலைவனுக்குத் தனது மகனைப் பார்க்க ஆவல் மேலிடுகிறது. பரத்தையர் இல்லத்தில் தங்கியிருக்கும், தனது யாழில் பல பண்களையும் இசைக்கும் திறமை கொண்ட பாணனிடம் தனது மனக்குறையைக் கூறுகின்றான். அழகிய குரல்வளம் கொண்டு பாடும் பரத்தையருடன் புணர்ந்து நான் விளையாடினேன் என்பதால், மணியொலி போன்ற குரலையுடைய மேன்மையான எனது தலைவி என்னுடன் பிணக்கு கொண்டுள்ளாள் பாணனே! என்று தலைவன் பாணனிடங் கூறுகின்றான் (141). தலைவனுக்கும் தலைவிக்கும் இடையில் உள்ள மனவேறுபாட்டைக் களைய உதவும்படி தலைவன் கூறுகிறான். தான் வரவிருப்பதைத் தலைவியிடம் கூறச் சொல்கிறான். அவனது வேண்டுகோளை ஏற்று பாணனும் தலைவியின் இல்லத்திற்குத் தூது செல்கிறான்.*

*தலைவனின் புகழ் பாடி அவனது செயலுக்கான விளக்கங்களைக் கூறும் பாணனின் உரையைக் கேட்கும் பொழுது தலைவி பொறுமை இழக்கிறாள். பாணனே! அருமையான சிறு தேரினை தனது கையினாலே இழுத்து உருட்டி விளையாடும் எனது மகன் பிறக்கும் முன்னர், இந்த இல்லத்தில் என்னுடன் அன்புடன் கூடி விளையாடியவன் எனது தலைவன். மாறாக, பின்னர் எனக்குப் பின் வந்தவர்களாகிய பரத்தையர்களின் தோள்களில் மிகவும் விருப்பத்துடன் கூடி மகிழ்வதை விரும்பினான் (124). மண்ணால் உருவாக்கப்பட்ட யானை சிலை மீது அமர்ந்து பாகன் போலக் கையில் கோலுடன் ஓட்டி விளையாடும் எனது மகன் பிறப்பதற்கு முன்னர் எனது தலைவன், அழகிய வளைவுகளைக் கொண்ட வளையல்களை அணிந்த பரத்தையரது சேரிக்குச் சென்றானா என்று சொல்வாயாக. அவனது வாழ்க்கைத் துணையான எனது வீட்டின் வாயிலைத் தாண்டிச் சென்றானா அவன்? சொல்வாயாக என்று தலைவி பாணனிடம் வினவினாள் (125). எனக்குப் பின்னவளாகிய பரத்தையோடு தலைவன் இயல்பாகக் கூடி மகிழ்ச்சியுடன் கிளர்ச்சியடைந்து வாழ்கின்றான். அவ்வாறே, தனது சின்னஞ்சிறு கைகளை அசைத்தும், மழலை பேசியும் பொருள் புரியாத வகையில் இங்கே குழறும் மொழியுடன் ஓடிவிளையாடி நன்கு வளரும் எனது மகனுடன் நானும் நலமாகவே வாழ்கிறேன். ஆதலால், எனக்கொரு குறையும் இல்லை. தலைவன் வருகையைக் கூற வந்த பாணனே, என் மகனோடு மகிழ்ச்சியுடன் நான் வாழும் வாழ்க்கையே எனக்குப் போதும் (136) என்று என்று தலைவி பாணனிடம் கூறி அவனை அனுப்பிவிடுகிறாள்.*

*தலைவியையும் குழந்தையையும் காண வருகை தரும் உறவினரும், பெரியவர்களும் பிரிந்திருக்கும் இருவரையும் இணைத்து வைக்க தங்களால் இயன்றதைச் செய்ய முடிவெடுக்கின்றனர். இருவரிடம் ஒருவர் குறித்து மற்றவர் பெருமையைப் பேசி தலைவன் தலைவி இருவரது மனங்களையும் மாற்ற முயல்கின்றனர். தலைவனே! இம்மண்ணில் வாழ்பவர்களில் சான்றோர்களும் சிறிது நாட்களிலேயே தலைவியின் பெருமை உணர்ந்து அவளைப் பாராட்டி அவளுக்குத் தொண்டு செய்யும் வண்ணம், பெண்ணின் மேன்மையை வெளிப்படுத்தும் வகையில் மார்பில் முத்துமாலைகளைத் தவழ விட்டுள்ள தலைவி மிகவும் எளிமை இனிமை அன்பின் உறைவிடமாக இல்லறம் நடத்தி வருகிறாள் என்று தலைவியின் இல்லத்தில் நுழைந்து பழகி அவள் இல்லறம்*

*நடத்தும் பாங்கினை கண்ணுற்ற ஒருவன் தலைவனிடம் சென்று, தலைவி இல்லறத்தினை ஊரார் மெச்சும் வண்ணம் மாண்புடன் நடத்துவதை அவனுக்குத் தெரிவிக்கிறான் (146). மற்றும் சிலர் தலைவியிடம் வந்து தலைவன் கூறும் விளக்கங்களைக் கூறி தலைவனின் பிழையைப் பொறுக்கும் படியும், அவன் அவளுடன் இணைய விரும்புவதாகவும் கூறுகிறார்கள். உண்மையான போக்கினைக் கொண்டிராத தலைவனின் பொய்மையான மாய மொழிகளைக் கேட்டது போதும். தலைவனின் செயல்களே அவன் புகழைக் காட்டுகிறது. என்னிடம் காதல் கொண்டு தலைவன் செய்யும் செயல்களே கூடல் கருதி நிற்கும் அவனின் விருப்பத்தைக் காட்டுகிறது, ஆகவே மேலும் பொய் உரைக்காமல் போய்ச் சேருங்கள் என்று தலைவி வாயில் தேடி வந்து தலைவனைப் புகழ்பவர்களுக்கு மறுமொழி கூறி அனுப்பிவிடுகிறாள் (130).*

*தலைவனின் தோழர்களும், தலைவியின் தோழியரும் பிரிந்திருக்கும் தலைவனையும் தலைவியையும் இணைக்கும் முயற்சியில் அடுத்து களம் இறங்குகிறார்கள். தலைவியின் தோழியர்களில் ஒருத்திக்கு செம்பட்டினை உடுத்து வித்து, அவள் அணிந்துள்ள அணிகலன்கள் எல்லாம் நிறம் மாறும்படி செஞ்சாந்தைப் பூசு வித்து, மிகுந்த அக்கறையோடு சிவந்தகுவளை மலர்களையும் சூட்டி அவளைத் தலைவனே நீ வாழும் பரத்தையர் வீடு நோக்கி அனுப்புகிறாள் தோழி. தன்னைப் பிரிவதற்காகப் பரத்தை உன்மீது என்னதான் வசைபாடினாலும், பரத்தைக்கு மறுமொழி எதுவும் கூறாது வீடு திரும்புக, உன் குலம் தழைக்க தலைவியுடன் நீ இணைய வேண்டும் என்ற அறிவுரையையும் கூறச் சொல்லி தோழி ஒருத்தியை அனுப்பியுள்ளாள் தலைவனே. ஆகவே, தோழி தரும் குறிப்பறிந்து நடப்பாயாக என்று தலைவனிடம் அவனது பாங்கர்கள் கூறுகின்றார்கள் (144). விறலியைத் தலைவன் தலைவியின் மனதை மாற்ற அனுப்பிவிட்டு, தலைவனும் வீடு திரும்புகிறான். விறலி தலைவியைப் பாராட்டிப் பேசி தலைவன் இனி தவறிழைக்காமல் இருப்பான் என்று கூறுகிறாள். தலைவி விறலியின் கூற்றை ஆராய்ந்து மனம் மாறுகிறாள். தலைவனை ஏற்றுக் கொள்கிறாள். தலைவன் அனுப்பிய பல தூதுகளை மறுத்து விட்ட தலைவி விறலியின் தூதினை மதித்து ஏற்று, தலைவனோடு மீண்டும் மகிழ்ந்திருப்பதைக் கண்டு மனம் நெகிழ்ந்த விறலி, அருகே இருந்த தோழியினிடத்தே தனக்குக் கிடைத்த நல்வாய்ப்பிற்கு நன்றி பாராட்டிக் கூறுகின்றாள். தலைவிக்கு யாவரையும் தனது உறவு என்று பாராட்டும் பெருந்தன்மையான குணம் குறையாது இருப்பதாலோ; அல்லது பழமையானவை மக்களுக்குப் பலவகையில் பயன் தருவதை உணர்ந்திருக்கும் நிலையினாலோ; உரிமையுடன் தக்க குலத் தலைவர்கள் பலகுடிமக்களையும் உறவாக ஏற்றுக் கொள்ளும் முறையில் தலைவியும் நாய் போன்று மிகவும் தாழ்மையுள்ள என்னையும் ஏற்றுக் கொண்டுள்ளாள். தலைவியின் அருள் கிடைக்கப் பெற்றேன் நான் என்கிறாள் விறலி (134).*

*தோழியும் தனது பங்கிற்குத் தலைவனைப் புகழ்ந்து அவன் மனதை மாற்றுகிறாள். குளிர்ந்த குளத்தினிடத்திலே மலர்ந்துள்ள தாமரைப்பூவிலேயுள்ள, பெரிய ஆண் அன்னப் பறவையினை கீழ்ப்படியும் பெண் அன்னப்பறவையானது நீரிலிருந்து விரும்பும் படியான கழனிகள் சூழப் பெற்ற மருத நிலத்து ஊர்த் தலைவனே! வளம்*

*மிக்க குளத்தினைப் போன்ற உனது பரந்த மார்பானது, புளியம்பழத்தினை மேலும் மேலும் சுவைக்க ஏற்படும் விருப்பம்போல் விரும்பும் சிறப்பைக் கொண்ட ஒன்றாகும். உன்னுடன் கூடி வாழும் தலைவி உன் மீது கொண்ட மாறாத மயக்கத்திற்கு அதுவே நோய் நீக்கும் மருந்து, என்று தோழி தலைவனைப் புகழ்ந்து அவனிடம் கூறுகின்றாள் (142). பிரிந்தவர் கூடினர். தலைவன் களிப்புடன் தனது மகனுடன் விளையாடுகிறான். தலைவியின் மீது அன்பைப் பொழிகிறான். இதனால் தலைவியும் மனம் மாறிவிடுகிறாள். மருதமரங்களுடன் காஞ்சி மரங்களும் இணைந்து உயர்ந்து வளர்ந்துள்ளதால் அவை பரப்பும் நிழலின் கீழே, காளைகளுடன் உழவில் ஈடுபட்டுள்ள உழவர்கள் எழுப்பும் ஒலியுடன், கழனியில் நாரைகளும் வாத்துக்களும் எழுப்பும் ஒலியும் சென்று கலந்திருக்க; குளிர்ந்த அழகிய வயல்கள் நிறைந்தது; அமர்ந்து பயணிக்க முடியாத சிறிய பொம்மைத் தேரினை உருட்டும் எனது மகனின் தந்தையாகிய எனது தலைவனின் மருத நிலத்தின் ஊர் ஒரு சிறந்த வாழிடம் என்று ஊடலைக் கைவிட்டு, தான் தலைவனுடன் மீண்டும் இணையக் காரணமாக இருந்த மகனையும் தன் தலைவனையும், அவர்கள் வாழும் ஊரின் சிறப்பையும் புகழ்ந்து தலைவி தோழியிடம் கூறுகிறாள் (138, 139).*

*தலைவியின் இல்லத்தில் மகிழ்ச்சி பொங்கினாலும், தலைவனின் காமக்கிழத்தி தன்னைப் பிரிந்து சென்றுவிட்ட தலைவன் மீது ஆத்திரம் கொள்கிறாள். தலைவன் தலைவியிடம் சென்றவுடன் தன்னை மறந்து எப்படி மாறிவிட்டான்? தலைவி ஆட்டுவிக்கும்படி எல்லாம் ஆடுகிறானே என்று மனம் குமைகிறாள். தோழியே! என்ன இது!!! இந்த மண்ணிலும் விண்ணிலும் இதற்கு முன்னர் கேட்டதும், கண்டதும் இல்லை, அதனால் அது குறித்து ஒரு முடிவும் அறியேன் நான். நம்மை விட்டு நீங்கிய தலைவன், மனைவியின் பின் சென்று, அவள் கூறுவதைக் கேட்டு, அணங்குபோன்ற தலைவி ஆட்டுவிக்கும் படி நடந்து அவள் கட்டளைகளைத் தட்ட விரும்பாமல், அவன் அணிந்துள்ள அணிகலன்கள் குலைந்தாடும் வண்ணம், மிகவும் பணிவுடன் தலைவியின் ஏவல்களை நிறைவேற்றுகிறானே!!! என்று காமக்கிழத்தி தன் தோழியிடம் கூறுகின்றாள்(135). பாணனை தலைவன் வீட்டிற்குத் தூது அனுப்புகிறாள் காமக்கிழத்தி. அவனைத் தலைவனைச் சந்திக்க விடாமல் தலைவாயிலேயே தடுத்து நிறுத்தும் தலைவி பாணனை விரட்டி அனுப்புகிறாள்.*

*பரத்தையர் வீட்டில் இருக்கும் பாணனே! நான் வாழும் இந்த இல்லத்தை நீ அத்தகைய பிற பெண்கள் வாழும் வீடு என்று தவறாகக் கருதி விட்டாய் போலிருக்கிறது. அது போன்ற பெண்கள் வாழும் வீடு இது என்று தவறாக எண்ணாமல், இங்கிருந்து கிளம்பு. என் பின்னவர்களாகிய பரத்தையரின் வீட்டில் மாலைப் பொழுது மறையும் நேரம் மணவிழாத் தொடங்கப் போகும் நேரத்திற்குள் பரத்தையர் மனைக்குச் சென்றுவிடு (132). சேற்றில் விளையாடுகையில் கிண்கிணி என ஒலிக்கும் கால் சலங்கை அணிந்த என் மகனின், செம்மையான பொன்னில் செய்யப்பட்ட நெற்றிச் சுட்டியில் புழுதி படர, இந்த வீட்டின் முன் முற்றத்தில் தன் மகனுடன் விளையாடும் என் தலைவன், பண்பால் வேறுபட்ட பெண்களான பரத்தையரின் வீடு சென்று விளையாட விரும்புவானோ? (விரும்பமாட்டான்) ஆகவே, அழகிய கோலுடன் அமைந்த*

*யாழைக் கொண்ட பாணனே, நீ வீணே காலந்தாழ்த்தாது எனக்குப் பின்னவர்களான பரத்தையர் இல்லம் நோக்கிச் சென்றுவிடுவாயாக (151). முன்னர் தலைவனுக்கு மாலை நேரத்தில் இசைக்கவேண்டிய பண்ணினைப் பாடி அவனுக்கு நீ பணி செய்ததில்லையோ; காலைவேளைக்குரிய பண்ணினைப் பாடவேண்டிய நிலையினை அறியாதவனாக விளங்கினாய் அப்பொழுது. உனது நோக்கமும், நீ எப்படிப்பட்டவன் என்பதையும் நான் நன்கே அறிவேன். குறைவறாது நீ கூறும் பொய்களுக்கு மயங்குபவர் இடம் தேடிச் சென்றுவிடு (133). நற்பண்பு சிறிதும் அற்ற பாணனே! தலைவனது கடந்த காலச் செய்திகளை, கொடிய சொற்களால் விவரித்துக் கிண்டலாக என்னிடம் நினைவூட்டும் வகையில் சொல்லி, ஊடல் விலகி எனக்கும் தலைவனுக்கும் இடையே மீண்டும் தொடங்கப் பெற்றுள்ள உறவினை உனது சொற்களால் துண்டிக்க வேண்டாம். தலைவனின் கடந்த கால வாழ்வு குறித்து புரிந்தது புரியாதது, தெரிந்தது தெரியாதது அனைத்தும் நான் நன்கு அறிவேன் (131) என்று தலைவி பாணனிடம் கூறி அவனை வீட்டிலிருந்து வெளியேற்றுகிறாள்.*

*தனது முயற்சி பலிக்காது சோர்ந்து திரும்பும் பாணனை வழியில் சந்தித்து விவரம் அறிகிறான் தலைவன். பல பண்களையும் கலந்து யாழில் இசைக்க வல்ல பாணனே! ஆராய்ந்து பார்த்தால் தலைவியைப் போலச் சிறந்த ஒரு பெண்ணை எங்கும் காண இயலாது. எண்ணிப் பார்த்தாலும் இன்று என் தலைவிக்கு நிகரான பெண்ணொருத்தி கடல் சூழ்ந்த இந்த மண்ணுலகில் இல்லை. மறைந்து நடுகல்லாய் சமைந்துவிட்ட முன்னோர்களிலும் அத்தகைய பெண் இருந்ததில்லை. சிறப்பான விண்ணுலகில் யாரேனும் இவளுக்கு இணையான சிறப்பு கொண்டவராய் இருக்கக் கூடும் (150) என்று ஊடலைக் கைவிட்டு, மன்னித்து தன்னை ஏற்றுக் கொண்டு தனக்கு வாழ்வளித்த தலைவியைப் புகழ்ந்து கூறும் தலைவன், பாணனிடம் தன்னைத் தொடர்வது இனி பயனளிக்கப் போவதில்லை என்று உணர்த்துகிறான். தலைவனும் தலைவியும் தங்கள் மகனுக்கு ஐம்படைப் பூட்டி, பெயர் சூட்டும் விழா நடத்துகிறார்கள். மகிழ்ச்சியுடன் அவர்கள் ஒருசேர இருப்பதைக் காண்கிறாள் தோழி. பாடல்களின் ஒலியும், இன்னிசைக் கருவிகள் எழுப்பிய பண் ஒலியும், வளையாது நேராக அமைந்த புல்லாங்குழலினது இசையும் என வகை வகையான பல இசைகளும் கூடி ஒலிக்கும் வேளையில்; வளைந்த நச்சுப்பற்களைக் கொண்டிருந்த பாம்பினை கயிறாகக் கொண்டு பாற்கடலைக் கடைந்த மந்திரமலை போன்ற சிறப்பு அடைந்த தலைவன் தனது மகனைச் சுமந்து கொண்டு மருத நிலத் தெய்வமாகிய இந்திரனைப் போல தலைவியின் இடப்பக்கம் வந்து நிற்கின்றான் (145) என்பதைத் தலைவியின் மகனுக்கு ஐம்படை பூட்டி பெயரிடும் விழாவில் காணும் தோழி மனம் மகிழ்கிறாள்.*

***குறிப்பு – கதையாகக் கோர்க்கப்பட்ட பாடல்களின் வரிசை, பாடல் எண்களுடன் கொடுக்கப்பட்டுள்ளது:***

*140. தனது கணவனின் தோற்றம் சிறக்கும் வண்ணம் அவன் மேல் காதல் கொண்ட தலைவி அவனுக்கு அழகிய மலர்மாலை தொடுக்கிறாள் செவிலித்தாயே!*

*143. தலைவனும் தலைவியும் கொண்டிருக்கும் அன்பின் நெருக்கத்தால் விடியும் வரையும் ஒருவரை விட்டு ஒருவர் பிரிவதில்லை செவிலித்தாயே!*

*126. தேவையற்ற செய்திகளை என்னிடம் கூறாது சென்றுவிடு, பரத்தையரிடம் சென்று தலைவன் அங்கு வந்து கொண்டிருக்கிறான் என்று சொல் பாணனே!*

*127. மனைவியைக் கூடி மகிழ்வதைவிட பரத்தையரே தலைவனுக்கு விருப்பம் என்று அந்தப் பரத்தையரிடம் போய்க் கூறு பாணனே!*

*129. தலைவன் தலைவியைப் பிரிந்து சென்று பரத்தையுடன் புனலாடும் செய்தி கேட்ட தலைவி மனம் வருந்தி பரத்தையர் கூடும் தலைவனின் மார்பைத் தான் இனி அணைப்பது நல்லதல்ல என்று எண்ணுகிறாள்.*

*128. ஆற்று நீரில் பாய்ந்து ஆடும் பரத்தையர் மனம் போலச் செயல்படும் தலைவனை விலகி, அவன் இல்லாது துயர் நிறைந்த வாழ்க்கையை வாழ்வதே நல்லது என்று தலைவி எண்ணுகிறாள்.*

*137. தலைவன் வயலில் புகுந்து பல்வேறு மலர்களைத் தின்னும் எருமை போல பற்பல பெண்களுடன் உறவாடிக் கொண்டிருக்கிறான் தோழி!*

*147. புறத்து ஒழுக்கம் மேற்கொண்டு தலைவன் பரத்தையருடன் திரிகிறான் தோழியே!*

*148. புறத்து ஒழுக்கம் மேற்கொண்ட தலைவன் பரத்தையர் உறவுக்குப் பின்னர் தனது மகனை நினைத்துக் கொண்டு வீடு திரும்புவான் தோழியே!*

*153. துயர் தரும் மனப் பிரிவினை பொதுவான ஊடல் நிலை என்று எண்ணிப் பேசாதே தோழி! நான் எப்பொழுதுமே தலைவனைக் காண விரும்ப மாட்டேன்.*

*152. உன் மார்பில் நீ அணிந்துள்ள மாலையினை என் முலைப்பால் சிதைக்கும், ஆகவே என்னைத் தழுவ வேண்டாம் தலைவனே!*

*149. தலைவியின் ஊடல் கண்டு விலகும் தலைவனிடம், தலைவி அவனிடம் கொண்டுள்ள உண்மை அன்பை எடுத்துக் கூறி தலைவனைச் சேர்ந்து வாழும்படி நல்வழியில் நடத்தும் பெரியோர் இடித்துரைக்கிறார்கள்.*

*141. எனக்குப் பரத்தையர் தொடர்பு உள்ளது என்று என்னுடன் பிணக்கு கொண்டுள்ளாள் எனது தலைவி பாணனே !*

*124. எனது மகன் பிறக்கும் முன்னர் என்னுடன் கூடி மகிழ்ந்திருந்த என் தலைவன் இப்பொழுது பரத்தையர்களை விரும்பி அவர்களைக் கூடி மகிழ்கிறான் பாணனே.*

*125. பாணனே, என் மகன் பிறப்பதற்கு முன்னர் எனது தலைவன் இந்த வீட்டின் வாயிலைத் தாண்டி பரத்தையர் இல்லம் சென்றதுண்டோ? சொல்வாயாக!*

*136. தலைவன் வருகையைக் கூற வந்த பாணனே, என் மகனோடு மகிழ்ச்சியுடன் நான் வாழும் வாழ்க்கையே எனக்குப் போதும்.*

*146. தலைவி தனது பண்பின் மேன்மையால் சான்றோர் மெச்சும்படி இல்லறம் நடத்துகிறாள்.*

*130. தலைவனின் செயல்களே அவன் புகழைக் காட்டுகிறது, மேலும் பொய் உரைக்காமல் செல்லுங்கள் மக்களே என்கிறாள் தலைவி.*

*144. தலைவனே! தோழியின் குறிப்பை அறிந்து, பரத்தை என்ன வசை கூறினாலும் அதற்கு மறுமொழி ஒன்றும் கூறாது, உன் குலம் தழைக்க தலைவியுடன் கூட நீ இல்லம் திரும்புக என்று பாங்கர்கள் கூறுகின்றார்கள்.*
*134. தலைவியின் பெருந்தன்மையால் அவள் என்னை ஏற்றுக் கொண்டது நான் அடைந்த பேறு என்று விறலி தோழியிடம் கூறுகிறாள்.*
*142. தலைவனே! உன் மீது மயக்கம் கொண்ட தலைவிக்கு உன் சிறந்த மார்பைச் சேர்வதே அவளது காதல் நோயைத் தீர்க்கும் மருந்தாக அமையும்.*
*138. எனது மகனும் அவனின் தந்தையாகிய எனது தலைவனும் வாழும் இந்த மருத நிலத்தின் ஊர் சிறப்பான இடம் தோழி!*
*139. எனது மகனும் அவனின் தந்தையாகிய எனது தலைவனும் வாழும் இந்த மருத நிலத்தின் ஊர் சிறப்பான இடம் தோழி!*
*135. தோழியே! தலைவன் தனது மனைவி ஆட்டுவித்தபடி அவள் ஏவிய பணிகளைச் செய்து கொண்டிருக்கிறான் என்கிறாள் காமக்கிழத்தி.*
*132. பரத்தையர் வீட்டில் வாழும் பாணனே, இந்த வீடு அத்தகைய பெண்கள் வாழும் வீடல்ல, பரத்தையர் வீடுகளுக்கேச் சென்றுவிடு.*
*151. பாணனே! தலைவன் தன் மகனுடன்தான் விளையாட விரும்புவான், பரத்தையர்களுடன் அன்று.*
*133. பாணனே! நீ சொல்லும் பொய்களுக்கு மயங்குபவர் உள்ள இடம் தேடிச் சென்றுவிடு என்று தலைவி கூறுகிறாள்.*
*131. தலைவனின் கடந்த கால நடத்தை குறித்து நான் நன்கே அறிவேன், எங்களுக்குள் கலகம் மூட்டும் முயற்சியைக் கைவிடுக பாணனே!*
*150. என் குற்றத்தை மன்னித்து என்னை ஏற்றுக் கொண்ட என் தலைவியைப் போல சிறந்த பெண்ணொருத்தி இவ்வுலகில் கிடையாது பாணனே!*
*145. தலைவன் தனது மகனைச் சுமந்து கொண்டு தலைவியின் இடப்பக்கம் நின்று விழாவில் பங்கேற்றான்.*

# *1. குறிஞ்சி: மூலமும் – உரையும்*

***பாடல்கள் [1-31]***

1. *தலைமகளுந் தோழியும் ஒருங்கிருந்தவழிச்சென்று தலைமகன் தோழியை மதியுடம்படுத்தது*

*நறைபடர் சாந்த மறவெறிந்துநாளா*
*லுறையெதிர்ந்து வித்தியவூ ழேனற்-பிறையெதிர்ந்த*
*தாமரைபோல் வாண்முகத்துத் தாழ்குழலீர்! காணீரோ*
*வேமரை போந்தன வீண்டு.*

*சொற்பிரிப்பு:*
*நறை படர் சாந்தம் அற எறிந்து நாளால்*
*உறை எதிர்ந்து வித்திய ஊழ் ஏனல் பிறை எதிர்ந்த*
*தாமரை போல் வாள் முகத்து தாழ்குழலீர் காணீரோ*
*ஏ மரை போந்தன ஈண்டு*

*பெண்களே நான் வேட்டையாடிய மான்கள் அம்புகளுடன் இப்பக்கம் வந்ததைப் பார்த்தீர்களா?*
*மணமிக்க பூங்கொடிகள் படர்ந்துயர்ந்த சந்தனமரங்களை வேரோடு வெட்டி, நல்லநாளில் மழை பெய்யுங் காலத்தில் விதைத்ததனால் நன்கு வளர்ந்து முதிர்ந்த தினைப்புனத்தினைக் காவல் செய்யும் பிறை மதி போன்றும், தாமரை மலரினைப் போன்றும் ஒளி வீசும் முகத்தினையும், நீண்ட கூந்தலையுடைய பெண்மணிகளே! இவ்விடத்தை நோக்கி வந்த எனது வில்லினின்று புறப்பட்ட அம்பினைக் கொண்ட மான்களைக் கண்டீரோ? (என்று தலைமகளுந் தோழியும் ஒருங்கிருந்த வழிச்சென்று தலைவன் வினாவினான்.)*

*நறைக் கொடி படர்ந்துயர்ந்தசந்தனங்களை அற வெட்டி நல்ல நாளால் மழை பெய்யுங்காலத்தையேற்றுக்கொண்டு வித்தி முதிர்ந்த ஏனலின் கண்,பிறையை யேற்றுக்கொண்டதொரு தாமரை மலரைப்போலும் வாண்முகத்தையும், தாழ்ந்த குழலையு முடையீர்!கண்டிலீரோ? ஏவுண்ட மறை போந்தனவற்றை இவ்விடத்து. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"மணம் மிக்க பூங்கொடிகள் படர்ந்த சந்தன மரத்தை வேரோடு வெட்டி நல்ல நாளில் மழையை எதிர்பார்த்து விதைத்ததனால் முதிர்ந்த தினைப்புனத்தைக் காவல் செய்த தாமரைப் போன்ற முகத்தையும், நீண்ட கூந்தலையும் உடைய பெண்களே! இந்த இடத்தில் என் அம்புகள் பாய்ந்து தாக்குதற்கு வந்த மான்களை நீங்கள் பார்த்ததுண்டோ?" எனத் தலைவன் தலைவியையும் தோழியையும் பார்த்துக் கேட்டாள். (பால சங்கரன் உரை)*

*2. தோழி செவிலிக்கு அறத்தொடுநின்றது*

*சுள்ளி சுனைநீலஞ் சோபா லிகைசெயலை*
*யள்ளி யளகத்தின் மேலாய்ந்து-தெள்ளி*
*யிதணாற் கடியொடுங்கா வீர்ங்கடா யானை*
*யுதணாற் கடிந்தா னுளன்.*

*சொற்பிரிப்பு:*
*சுள்ளி சுனை நீலம் சோபாலிகை செயலை*
*அள்ளி அளகத்தின் மேல் ஆய்ந்து தெள்ளி*
*இதணால் கடி ஒடுங்கா ஈர்ம் கடா யானை*
*உதணால் கடிந்தான் உளன்*

*தலைவியின் நெஞ்சத்தைக் கவர்ந்தவன் ஒருவன் உள்ளான் செவிலித்தாயே! உயிரைக் காப்பது பேரறமென்று தெளிந்து துணிந்து, பரணினாலே காத்துக் கொள்ளுதற்கு இயலாத நிலையில், குளிர்ந்த மதநீரையுடைய யானை ஒன்று தலைவியைத்தாக்க வந்த வேளையில் மொட்டம்பினாலே அவ் யானையை விலக்கித் தலைவியைக் காப்பாற்றினான் ஒருவன். அவன் அனிச்ச மலரையும், சுனையில் பூத்த நீலோற்பலப் பூக்களையும், ஒளியினையுடைய அசோக மலரையும் கொய்து எடுத்து வந்து தலைவியின் கூந்தலில் மிக அழகாகப் புனைந்தவன். அக் கட்டழகன் தலைவியின் அகத்தே தனிச் சிறப்புற்று விளங்குகின்றனன் (என்று தோழி செவிலியிடம் கூறி தோழி செவிலிக்கு அறத்தொடு கூறி நின்றாள்.)*

*நறவ மலரையுஞ் சுனை நீலமலரையும் அசோக மலரையும் கொய்துமுடித்து நின்மகள்குழலின் மேலே ஆராய்ந்து புனைவதுஞ் செய்து பின்னொருநாட்டுணிந்துபரணாற் காவலமையாத ஈர்ங்கடா யானையை மொட்டம்பாற்கடிந்து காத்தும் இப்பெற்றி யுதவி செய்தான்ஒருவனுளன். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"பரணில் இருந்த தலைவியைக் குளிர்ந்த மதத்தை உடைய ஆண் யானை தாக்கிய போது ஒருவன் மொட்டம்பினால் அந்த யானையைத் துரத்தித் தலைவியைக் காப்பாற்றி, அனிச்ச மலரையும், நீல மலரையும், அசோகமலரையும் பறித்துத் தலைவியின் கூந்தலில் அணிவித்தான். அவன் தலைவியின் உள்ளத்தே விளங்குகிறான்" என்று தோழி செவிலிக்குக் கூறினாள். (பால சங்கரன் உரை)*

*3. பகற்குறிக்கண் வந்த தலைமகனைக் கண்டுதோழி செறிப்பறிவுறீஇயது*

*சாந்த மெறிந்துழுத சாரற் சிறுதினைச்*
*சாந்த மெறிந்த விதண்மிசைச்-சாந்தங்*
*கமழக் கிளிகடியுங் கார்மயி லன்னா*
*ளிமிழக் கிளியெழா வார்த்து.*

*சொற்பிரிப்பு:*
*சாந்தம் எறிந்து உழுத சாரல் சிறு தினை*
*சாந்தம் எறிந்த இதண் மிசை சாந்தம்*
*கமழ கிளி கடியும் கார் மயில் அன்னாள்*
*இமிழ கிளி எழா ஆர்த்து*

*தலைவனே உன் உறவால் தலைவியின் இயல்பு மாறியதைக் கண்டு இனி அவளைத் தினைப்புனம் காக்க அனுப்பாமல் வீட்டில் இருத்திவிடுவார்கள். சந்தன மரங்களை வெட்டி உழப்பட்ட மலைப் பக்கத்தினிடத்தே, பயிர்செய்யப்பட்ட இளமையான தினைப்புனத்தின் கண் சந்தன மரக்கட்டைகளைக் கால்களாக ஊன்றி அமைத்த பரணின் மீதிலே அமர்ந்து உடல் மணக்கும்படி சந்தனக் குழம்பைப் பூசிக்கொண்டு கிளிகளை விரட்டுவதில் ஈடுபட்டிருக்கும் கார்காலத்திலே தோகையை விரித்தாடும் மயிலைப் போன்ற தலைவி, வாய்திறந்து ஆலோலம் பாடி விரட்டுகையில் அவளது குரல் கிளியின் குரல் போலவே இருப்பதால், தினை உண்ணும் பறவைகள் அஞ்சி எழுந்து பறப்பதில்லை. (ஆகவே காதல் உணர்வால் குரல் மாறிவிட்ட இவள் பறவை விரட்டும் தொழிலுக்கு ஏற்றவள் இல்லை என இனி அவளை வீட்டிலேயே நிறுத்திவிடுவர் என்று தோழி தலைவனிடங் கூறினாள் -பகற்குறிக்கண் வந்த தலைமகனைக் கண்டு தோழி செறிப்பறிவுறீஇயது)*

*சந்தனங்களை வெட்டியுழுத சாரலின்கண்,வித்திய ஏனலின்கட் படிந்த கிளிகளை, சந்தனங்களைக்காலாக எறிந்து செய்த, பரண்மிசை யிருந்து, பூசியசாந்தம் எங்கும் பரந்து கமழ உலாவி, கடிகின்றகார்மயி லன்னாள் தான் வாய்திறந்து 'ஆயோ' என்றியம்புதலாற் றம்மின மென்று கிளிகள்ஆர்த்துப்போகா. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"சந்தன மரக்கட்டைகளைக் கால்களாக அமைத்துப் பரண் செய்து கார்கால மயிலைப் போன்ற தலைவி "ஆலோ" என்று கூவியும் கிளிக்கூட்டம் செல்வதில்லை. எனவே அவளை வீட்டிற்கு அழைத்துச் செல்லப் போகின்றனர்" என்று தலைவனிடம் தோழி கூறியது. (பால சங்கரன் உரை)*

*4. தலைமகள் இற்செறிந்த காலத்துப்புனத்தின்கண் வந்த தலைமகன் றலைமகளைக் காணாது ஆற்றாது பெயர்கின்றான் சொல்லியது*

*கோடாப் புகழ்மாறன் கூட லனையாளை*
*யாடா வடகினுங் காணேன்போர்-வாடாக்*
*கருங்கொல்வேன் மன்னர் கலம்புக்க கொல்லோ*
*மருங்குல்கொம் பன்னாண் மயிர்.*

*சொற்பிரிப்பு:*
*கோடாப் புகழ் மாறன் கூடல் அனையாளை*
*ஆடா அடகினும் காணேன்; போர் வாடாக்*
*கருங் கொல் வேல் மன்னர் கலம் புக்க கொல்லோ,*
*மருங்குல் கொம்பு அன்னாள் மயிர்?*

*அழகிய என் தலைவியை என்னால் எங்கும் காண இயலவில்லையே மாறாதப் புகழுடைய பாண்டியனின் மதுரை மாநகரைப் போன்ற தலைவியினை விளையாட்டுப் பண்ணையிலும் காணமுடியவில்லையே. போரில் இடைவிடாது கொல்லும் செயலைச் செய்யும் இரும்பு வேல் ஏந்திய மன்னர் அணியும் முடியில் ஒன்று கூடி இணைந்து விட்டதோ கொம்பு போன்ற இடை கொண்ட தலைவியின் கூந்தல் (என்று தலைவி இற்செறிந்த காலத்துப்புனம் வந்த தலைவன் அவளைக் காண இயலாத வருத்தத்துடன் தனக்குள் சொல்லிக் கொள்கிறான்).*

*கோடாத புகழையுடைய மாறன்மதுரை யனையாளை அடாத பண்ணையுளுங் காண்கின்றிலேன்;போரின்கண் வாடாத கருங்கொற் றொழிலையுடைய வேல்மன்னர் அணிகலமாகிய முடிகூடின கொல்லோ! இடை யாற்கொம்பையனையாள் மயிர்கள். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*தலைவியை விளையாட்டுப் பண்ணையிலும் கண்டேனில்லை. போர்க்களத்தில் பின் வாங்காத வேற்படையேந்திய மன்னர் அணியும் முதன்மை அணியாகவுள்ள முடியாக ஒன்றுகூடி வளர்ந்து அவள் முதுக்குறைவினைக் காட்டினவோ என்று தலைவன் தனக்குள் சொல்லுதல். (தலைவியை இச்செறித்தனர்) (பால சங்கரன் உரை)*

5. *தலைமகன் சிறைப்புறத்தானாகத்தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி செறிப்பறிவுறீஇயது*

*வினைவிளையச் செல்வம் விளைவதுபோ னீடாப்*
*பனைவிளைவு நாமெண்ணப் பாத்தித்-தினைவிளைய*
*மையார் தடங்கண் மயிலன்னாய்! தீத்தீண்டு*
*கையார் பிரிவித்தல் காண்.*

*சொற்பிரிப்பு:*
*வினை விளைய செல்வம் விளைவது போல் நீடா*
*பனை விளைவு நாம் எண்ண பாத்தி தினை விளைய*
*மை ஆர் தடம் கண் மயில் அன்னாய் தீ தீண்டு*
*கையார் பிரிவித்தல் காண்*

*தலைவியே அறுவடை நெருங்கும் அளவு பயிர் வளர்ந்துவிட்டது, இனி தலைவனைப் பார்க்க இங்கு வரும் வாய்ப்பு இல்லாது போகும் எனத் தோழி தலைவியிடம் கூறுகிறாள்*
*மைத்தீட்டப்பெற்ற பெரிய கண்களையுடைய மயிலையொத்த தலைவியே! நல்வினையால் ஒருவருக்குச் செல்வம் பெருகுவது போல நம்மை விட்டு அகலாத பனை போன்ற வளர்ந்த இன்பத்தை நாம் எதிர்நோக்கியிருக்க, அதற்கு மாறாகப் பாத்தியில் விளையும் சிறு தினையாக அது மாறிவிடுமாறு, அறுவடைக் காலத்தின் அறிகுறியாக வேங்கை மரம் பூத்து நம்மை இற்செறிக்கையால் தலைவனிடம் இருந்து பிரியச்செய்தலைக் காண்பாயாக (என்று தோழி தலைவியிடங் கூறினாள்).*

*கெடாத பனை யென்னுமளவு போன்ற அளவினையுடைய இன்ப விளைவினை நாமெண்ணியிருப்ப அதற்கிடையூறாக, நல்வினை விளையச் செல்வம்விளைவது போலப், பாத்தியின்கட் டினைவிளைதலான்,மையார் தடங்கண் மயிலன்னாய்! தினைகொய்ய நாட்சொல்லிவேங்கையார் நம்மை இங்குநின்றும் பிரிவித்தலைப்பாராய். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"மை போன்ற பெரிய கண்களை உடையவளே! நாம் களவுப்புணர்ச்சியின் கண் எதிர்பார்த்துக் கொண்டிருக்க, அதற்கு இடையூறு செய்வதுபோல செல்வம் ஒருவனுக்குப் பெருகுவது போல பயிரானது விளைந்து, கொய்ய வேண்டிய நாள் வந்துவிட்டதென்று நம்மவர்க்கு அறிவித்து, நம்மைத் தலைவனிடம் இருந்து பிரியச் செய்தலைக் காண்பாயாக" என்று தலைவியிடம் தோழி கூறினாள். (பால சங்கரன் உரை)*

6. *இரவுக்குறி வேண்டிய தலைமகற்குத் தோழி மறுத்துச் சொல்லியது*

*மானீல மாண்ட துகிலுமிழ்வ தொத்தருவி*
*மானீல மால்வரை நாட! கேண் - மாநீலங்*
*காயும்வேற் கண்ணாள் கனையிருளி னீவர*
*வாயுமோ மன்றநீ யாய்.*

*சொற்பிரிப்பு:*
*மால் நீலம் மாண்ட துகில் உமிழ்வது ஒத்து அருவி*
*மால் நீல மால் வரை நாட கேள் மா நீலம்*
*காயும் வேல்கண்ணாள் கனை இருளில் நீ வர*
*ஆயுமோ மன்ற நீ ஆய்*

*தலைவனே இரவில் வருவதால் உனக்கு ஏற்படக்கூடிய இடையூற்றுக்குத் தலைவி வருந்துவாள் என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்*
*பெரிய நீலமணிவரை நேர்த்தியான வெள்ளாடையினை வெளிவிடுவதனை போன்று, அருவி மயங்கிக் கலந்து காணப்படும்படியான, நீலநிறத்தோடு கூடிய பெரிய மலைநாட்டிற்குரிய தலைவனே! கேட்பாயாக. கரிய நீலோற்பல மலர்களை வெறுத்து ஒதுக்குதற்குக் காரணமான வேலினைப் போன்ற கண்களையுடைய தலைவி, மிகுந்த இருள் நிரம்பிய நள்ளிரவிலே, நீ வந்தாயானல் ஆராய்ந்து கண்டு அதனால் உனக்கு இடையூறு நேரும் எனக் கலங்குவாள் அல்லவா? அதனை நீ எண்ணிப் பார்ப்பாயாக (என்று தோழி தலைவனிடம் கூறினாள்.)*

*மிக்க நீலமணிவரைமாட்சிமைப்பட்ட வெண்டுகிலை யுமிழ்வதுபோல,அருவிகள் மயங்காநின்ற நீல மால்வரை நாடனே!கேளாய்; கரிய நீல மலர்களை வெகுளா நின்ற வேல்போன்றகண்ணாள், செறிந்த இருளின்கண் நீவர, நினக் கிடையூறில்லாமைஆராய வல்லளோ? உண்மையாகப் பாராய். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"நீல மணிகள் பாயும்படியான அருவியை உடைய மலைநாட்டுத் தலைவனே! நீல மலர்களை வெறுத்து ஒதுக்கும்படியான நிலையில் இருக்கும் வேல் போன்ற கண்களை உடைய தலைவி இருளின்கண் நீ வர, உனக்கு ஏற்படும் துன்பத்தை ஆராயும் மனப்பக்குவம் உடையவளா என்பதனை நீ எண்ணிப் பார்ப்பாயாக" என தோழி தலைவனிடம் கூறினாள். (பால சங்கரன் உரை)*

7. *இரவுக்குறி வேண்டிய தலைமகற்குத் தோழி மறுத்துச் சொல்லியது*

*கறிவளர்பூஞ் சாரற் கைந்நாகம் பார்த்து*
*நெறிவளர் நீள்வேங்கை கொட்கு - முறிவளர்*
*நன்மலை நாட! இரவரின் வாழாளா*
*னன்மலை நாடன் மகள்.*

*சொற்பிரிப்பு:*
*கறி வளர் பூம் சாரல் கைந்நாகம் பார்த்து*
*நெறி வளர் நீள் வேங்கை கொட்கும் முறி வளர்*
*நல் மலை நாட இர வரின் வாழாளால்*
*நல் மலை நாடன் மகள்*

*தலைவனே நீ இரவில் நீ வருவதை என் தலைவியால் தாங்கிக் கொள்ள இயலாது என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்.*
*மிளகு கொடிகள் படருகின்ற அழகிய மலைப் பக்கத்தினிடத்தே, துதிக்கையினையுடைய யானைகளை எதிர்பார்த்துக்கொண்டு வழியில் வளர்ந்து நீண்ட பெரும் புலிகள் திரியும், பலவகையான தளிர்கள் வளரும் நல்ல மலைநாட்டிற்குரிய தலைவனே! இரவில் நீ வருவாயானால், அதைத் தாங்கிக் கொள்ள இயலாதவள் நல்ல மலைநாட்டிற்குரிய தலைவனின் மகளாகிய என் தலைவி (என்று தோழி தலைவனிடங் கூறினாள்)*

*மிளகு படர்கின்றபூஞ்சாரலின்கட் கையையுடைய நாகங்களைப் பார்த்துவழயின்கண் வளர்கின்ற பெரும்புலிகள் திரிதரும்இரவின்கண் நீ வரின், தளிர் வளர்கின்ற நன்மலைநாட! நன்மலைநாடன் மகள் வாழாள். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"மலை நாட்டுத் தலைவனே! மிளகு படர்கின்ற அழகியச் சாரலின் கண் தும்பிக்கையை உடைய யானைகளை எதிர்பார்த்து வளர்கின்ற வேங்கைப் புலிகள் திரியும் இரவின்கண் நீ வரின் நன்மலை நாடன்மகள் பொறுக்கமாட்டாள்" என்று தோழி தலைவனிடம் கூறினாள். (பால சங்கரன் உரை)*

*8. பின்னிலை முனியாது நின்ற தலைமகன்றோழியை மதியுடம்படுத்தது*

*அவட்காயி னைவனங் காவ லமைந்த*
*திவட்காயிற் செந்தினைகா ரேன - லிவட்காயி*
*னெண்ணுளவாலைந்திரண் டீத்தான்கொ லென்னாங்கொல்*
*கண்ணுளவாற் காமன் கணை.*

*சொற்பிரிப்பு:*
*அவட்குஆயின் ஐவனம் காவல் அமைந்தது*
*இவட்குஆயின் செம் தினை கார் ஏனல் இவட்குஆயின்*
*எண் உளவால் ஐந்து இரண்டு ஈத்தான்கொல் என் ஆம்கொல்*
*கண் உளவால் காமன் கணை*

*தலைவன் தோழியிடம் நயமாகப் பேசி தனக்கு ஆதரவாக மனமாற்றம் கொண்டுவர விரும்புதல்*
*நான் அங்கு வந்தால் மலை நெற்குவியலுக்குப் பாதுகாப்பு இருக்கும். இங்கேயே நான் இருப்பேன் என்றால் சிவந்த தினையினையும் கருந்தினையினையும் கொண்ட தினைப்புனக்காவலாக இருக்கும் (ஆனால்,உனக்கோ இவற்றில் உடன்பாடில்லை) இந்த தலைவியிடத்திலோ என்னவென்றால் காமனின் ஐந்து அம்புகளில் இரண்டினை காமன் இவளுக்குக் கொடுத்துவிட்டான் போலும். என்னாகும் என் நிலை, அவற்றைத் தலைவி கண்களாகக் கொண்டுள்ளாள் (என்று தலைவன் தோழியிடங் கூறினான்.)*

*அவ்விடத்து வருவேனாயின்நினக்கு ஐவனங்காவ லமைந்தது; இவ்விடத்தின்கண்வருவேனாயிற் செந்தினையுஞ் செறிந்த பசுந்தினையும்காத்தலே அமைந்தது; ஆதலான் எனக்கொரு மறுமாற்றந்தருகின்றிலை; நின்றோழியாகிய இவட்காயில், காமன்அம்பு ஐந்தெண்ணுளவால்; அவற்றுள் இரண்டம்பினைக்கண்ணாகக் கொடுத்தான் கொல்லோ! நின்றோழிக்குக் கண்கள் காமன்கணை யுளவால்; என்னுயிர்க்குஎன்னாங் கொல்லோ? (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"தலைவியிடம் காமனின் அம்பான ஐந்தும் உள்ளன. அவற்றுள் இரண்டு அம்புகளை விழிகளில் உள்ளனவாய்க் காமன் அவளுக்குக் (தலைவி) கொடுத்தானோ! எனவே என் உயிருக்கு யாது நிகழுமோ?" எனத் தலைவன் கூறியது. (பால சங்கரன் உரை)*

*9. பாங்கற்குத் தலைமகன் றலைமகளைக்கண்டவகை கூறித் தன் னாற்றாமை மிகுதி சொல்லியது*

*வஞ்சமே யென்னும் வகைத்தாலோர் மாவினாய்த்*
*தஞ்சந் தமியனாய்ச் சென்றேனென்-னெஞ்சை*
*நலங்கொண்டார் பூங்குழலா ணன்றாயத் தன்றென்*
*வலங்கொண்டாள் கொண்டா ளிடம்.*

*சொற்பிரிப்பு:*
*வஞ்சமே என்னும் வகைத்தால் ஓர் மா வினாய்*
*தஞ்சம் தமியனாய் சென்றேன் என் நெஞ்சை*
*நலம் கொண்டு ஆர் பூம் குழலாள் நன்று ஆயத்து அன்று என்*
*வலம் கொண்டாள் கொண்டாள் இடம்*

*வேட்டையாடிய விலங்கைக் கண்டீர்களா என்று கேட்கச் சென்ற இடத்தில் தலைவி என் உள்ளத்தைக் கவர்ந்து கொண்டுவிட்டாள்.*
*எனக்குத் துணை நானே என்று, வேட்டையினின்று தப்பிய விலங்கினைக் கண்டீர்களா எனக் கேட்கத் தனியாக அங்குச் சென்றேன். இது மாயமோ என்று தோன்றும் வகையில், நறுமணம் வீசும் பூக்களைச் சூடிய கூந்தலையுடையவள் எனது மனத்தை நன்றாக, அன்று என்னுடைய வெற்றித் திறமைகளையெல்லாம் கைப்பற்றியவளாய் தனது இடமாக்கிக் கொண்டாள் ! (என்று தலைவன் தோழனிடங் கூறினான்.)*

*மாயமே யென்று சொல்லப்படுந்தன்மைத்தால்! ஒரு மாவினை வினாவி யான் நினைவினைநீங்கித் தனியே எளியேனாய்ச் சென்றேன்:*
*சென்றவிடத்துநலங்கொண்டு நிறைந்த பூங்குழலை யுடையாள்*
*மிகவுந்தன்னாயத்தின்கண் அன்று என் வென்றியை*
*யெல்லாங்கொண்டுஎன்னேஞ்சத்தைத் தனக்கிடமாய்க் கொண்டாள். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"தப்பி வந்த மான் ஒன்றைக் கண்டதுண்டோ?' என வினவி தனியனாய் தினைப் புனத்தை நாடிப் போனேன். மங்கையர் நடுவில் மணம் வீசும் பூக்களை அணிந்தவள் என் வெற்றித் திறனைக் கைக்கொண்டவளாய் என் உள்ளத்தைத் தனக்கு இடமாகக் கொண்டு விட்டாள். இது மாயமோ" எனத் தலைவன் தோழனிடம் கூறினான். (பால சங்கரன் உரை)*

*10. தோழி நெறி விலக்கியது*

*கருவிறற் செம்முக வெண்பற்சூன் மந்தி*
*பருவிரலாற் பைஞ்சுனைநீர் தூஉய்ப்-பெருவரைமேற்*
*றேன்றேவர்க் கொக்கு மலைநாட! வாரலோ*
*வான்றேவர் கொட்கும் வழி.*

*சொற்பிரிப்பு:*
*கரு விரல் செம் முக வெண் பல் சூல் மந்தி*
*பரு விரலால் பைம் சுனை நீர் தூஉய் பெரு வரை மேல்*
*தேன் தேவர்க்கு ஓக்கும் மலை நாட வாரலோ*
*வான் தேவர் கொட்கும் வழி*

*தலைவனே தேவர்கள் உலாவும் இடங்கள் வழியாகத் தலைவியைக் காண வருவதைக் கைவிடுங்கள்*
*கரிய விரல்களையும் சிவந்த முகத்தினையும் வெண்மையான பற்களையும் கொண்ட கருவுண்ட பெண் குரங்கானது, தன் பெரிய விரல்களாலே பாசி படர்ந்த சுனையின் நீரினைப் படையல் செய்து, பெரிய மலையுச்சியிலே உள்ள தேன் கூடுகளை எடுத்து தேவர்களுக்குப் படைத்து வழிபடும் மலைநாட்டிற்குரிய தலைவனே! தெய்வத்தன்மை பொருந்திய தேவர்கள் நடமாடும் வழியாகத் தலைவியை நாடி வராதீர்கள் (என்று தோழி தலைவனிடங் கூறினாள்.)*

*கருவிரலினையுஞ்செம்முகத்தினையும் வெண்பல்லினையுமுடைய சூன்மந்திதன் பெரிய விரலானே பைஞ்சுனையினீரைத் தூவி,பெருவரையின் மேலே வைத்த தேன்பொதிகளைத் தேவர்கட்குக்கொடுக்கும் மலைநாடனே! வாரா தொழிவாயாக; தேவர்கள்திரிதரும் வழியாம். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"கருமையான விரல்கள், சிவந்த முகம், வெண்மையான பற்களை உடைய சூல் கொண்ட பெண் குரங்கு தன் பெரிய விரலால் அணை நீரை தேவர்களுக்குத் தூவி வழிபடும் மலைநாட்டை உடையவனே! தேவர்கள் உலவுகின்ற மலையின் வழியே நீ தலைவியை நாடி வருவதைக் கைவிடுவாயாக" என்று தோழி தலைவனிடம் கூறினாள். (பால சங்கரன் உரை)*

*11. தோழி நெறி விலக்கியது*

*கரவில் வளமலைக் கல்லருவி நாட!*
*உரவில் வலியா யொருநீ-யிரவின்*
*வழிகடாஞ் சால வரவரிய வார*
*லிழிகடா யானை யெதிர்.*

*சொற்பிரிப்பு:*
*கரவு இல் வள மலை கல் அருவி நாட*
*உர வில் வலியாய் ஒரு நீ இரவின்*
*வழிகள்தாம் சால வர அரிய வாரல்*
*இழி கடா யானை எதிர்*

*இரவில் மதம் கொண்ட யானைகள் உலாவும் வழியாகத் தலைவியைக் காண வரவேண்டாம்.*
*குற்றமில்லாத நல்ல வளங்களையுடைய மலைகளையும், ஒலிக்கும் நீர் வீழ்ச்சிகளையுங் கொண்ட மலை நாட்டிற்குரிய தலைவனே! வலிய வில்லினை மட்டுமே துணையாகக் கொண்டு, ஒப்பற்ற நீ இரவில் வருகின்ற வழிகள் மிகவும் வருவதற்கு ஏற்ற வழிகள் அல்ல. வழியிலே நிற்கும் மதநீர் பெருகும் யானைகள் குறுக்கிடக் கூடிய அவ்வழியாக வாராதிருப்பாயாக (என்று தோழி தலைவனிடங் கூறினாள்.)*

*பழுதில்லாத வளங்களையுடையகல்லருவி நாடனே! வலிய வில்லே நினக்கு வலியாய்ஒருநீ இரவின் கண்ணாகத் துணையின்றி வழிகள் தாம்மிகவும் வரவரிய; இழியாநின்ற கடாத்தையுடைய யானைகளின்எதிர்வாரல். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"மலைகளையும், அருவிகளையும் உடைய தலைவனே! நீ இரவில் வலிய வில்லையே துணையாய்க் கொண்டு வரும் மலைவழிகள் துணை இல்லாமல் வருவதற்கு உரியன இல்லை. மதநீரைச் சொரியும் யானைகளின் முன் வராமல் இருப்பாயாக" எனத் தோழி தலைவனிடம் கூறியது. (பால சங்கரன் உரை)*

*12. வெறிவிலக்கித் தோழி செவிலிக்குஅறத்தொடு நின்றது*

*வேலனார் போக மறிவிடுக்க வேரியும்*
*பாலனார்க் கீக பழியிலாள்-பாலாற்*
*கடும்புனலி னீந்திக் கரைவைத்தாற் கல்லா*
*னெடும்பணைபோ றோணேரா ணின்று.*

*சொற்பிரிப்பு:*
*வேலனார் போக மறி விடுக்க வேரியும்*
*பாலனார்க்கு ஈக பழியிலாள்பாலால்*
*கடும் புனலின் நீந்தி கரை வைத்தாற்கு அல்லால்*
*நெடும் பணை போல் தோள் நேராள் நின்று*

*செவிலியிடம் வெறியாடலைத் தவிர்க்கும்படியும், தலைவி அவளது காதலனை மணக்க விரும்புகிறாள் என்றும் தோழி அறிவுறுத்துகிறாள்.*
*வெறியாட்டும் பொருட்டு வரவழைத்த வேல் கைக்கொண்ட பூசாரி சென்றுவிடட்டும். பலியிடக் கொண்டுவந்துள்ள ஆட்டுக் குட்டியினையும் விடுவிக்கவும், கடவுளுக்குப் படைக்கக் கொண்டு வந்துள்ள கள்ளினையும் அதனையுண்ணக் காத்திருக்கும் மக்களுக்குக் கொடுத்துவிடவும். குற்றமில்லாத என் தலைவிக்கு நலக்குறைவு எதுவும் இல்லை. ஊழ்வினை வலியால், கடும் விசையோடு செல்லும் ஆற்று நீரில் அடித்துச் செல்லப்பட்ட பொழுது, பாய்ந்து சென்று காப்பாற்றிக் கரை சேர்த்த அவளது காதலனைத் தவிர்த்து, நீண்ட மூங்கிலைப் போன்ற தோள்களை உடையவள், வேறு எவரையும் உறுதியாகத் தன் வாழ்க்கைத் துணையாக ஏற்க மாட்டாள். (செவிலியிடம் தோழி அறிவுறுத்துகிறாள்.)*

*வெறியைவிட்டு வேலனார்போக; மறியையும் விடுக்க; கள்ளையும் அக்கள்ளினைநுகர்வார்க் கீக; இப்பழியிலாதாள் ஊழ்வலியாற்கடும்புனலுட் பாய்ந்து நீந்தித் தன்னை யெடுத்துக்கரையின்கண் வைத்தாற் கல்லது நெடிய வேய் போன்றதோளை நல்காள் இறந்து நின்று. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"வெறியாடுவதற்கு வந்த பூசாரி அதனைச் செய்ய வேண்டாம். தலைவி விரைவாகச் செல்லும் நீரில் ஆடிட, நீர் அவளை அடித்துச் செல்ல தலைவன் அவளைக் கரை சேர்த்தான். அத்தலைவனைத் தவிர வேறு எவரையும் மணம் செய்ய மாட்டாள். அவள் மயக்கத்துக்கு அதுவே காரணம்" எனத் தோழி செவிலிக்கு அறத்தோடு நிற்றல். (பால சங்கரன் உரை)*

*13. நெறியினதருமை கூறித் தோழிஇரவுக்குறி மறுத்தது*

*ஒருவரைபோ லெங்கும் பல்வரையுஞ் சூழ்ந்த*
*வருவரை யுள்ளதாஞ் சீறூர் - வருவரையு*
*ளைவாய நாகம் புறமெல்லா மாயுங்காற்*
*கைவாய நாகஞ்சேர் காடு.*

*சொற்பிரிப்பு:*
*ஒரு வரை போல் எங்கும் பல வரையும் சூழ்ந்த*
*அரு வரை உள்ளதாம் சீறூர் வரு வரையுள்*
*ஐ வாய நாகம் புறம் எல்லாம் ஆயுங்கால்*
*கை வாய நாகம் சேர் காடு*

*பாம்புகளும் யானைகளும் நிறைந்த காட்டு வழியின் வழியே இரவில் தலைவிக் காண வரவேண்டாம் என்று தோழி கூறுகிறாள்.*
*ஒருமலையினைப் போலவே எல்லாப் பக்கங்களிலும் பல மலைகளும், நெருக்கமாகச் சூழ்ந்துள்ள நிலையில் கடந்து செல்லக் கடினமான எல்லையினுள்ளே எமது சிற்றூர் உள்ளது. நீ கடந்து வரவேண்டிய அவ்வெல்லைக்குள் வரும் ஐந்து வாயில்களையும் நாகப்பாம்புகள் நிறைந்துள்ளன. நன்கு ஆராய்ந்து நோக்கினால் அந்த எல்லைக்கு வெளியில் நாகம் போன்ற துதிக்கை கொண்ட யானைகள் நிறைந்த காடுகள் உள்ளன (என்று தோழி தலைவனிடங் கூறினாள்.)*

*ஒரு மலைபோல எல்லாமலையும் தம்முள் அளவொக்க உயர்ந்து சூழ்ந்த அரியஎல்லையுள் உள்ள தாம் எங்கள் சீறூர்; நீ வரும் அவ்வெல்லையுள்உள்ளகத்தின்கண் உள்ளன ஐந்துவாயையுடைய நாகங்கள்;புறத்துள்ளன ஆராயுங்காற் கையொடுசேர்ந்த வாயையுடையயானைகள் சேர்ந்த காடுகள். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"எல்லா மலைகளும் உயர்ந்து கடப்பதற்கு அரிய எல்லையுள் எம் சிறிய ஊர் உள்ளது. ஐந்து வாய்களை உடைய பாம்புகள் நிறைந்து உள்ளன. யானைகள் நிறைந்த காடுகள் உள்ளன. துன்பம் நிறைந்த வழியில் நீ வர வேண்டாம்" என தோழி இரவுக்குறி வேண்டும் என்று கூறிய தலைவனிடம் கூறியது. (பால சங்கரன் உரை)*

*14. செவிலிக்குத் தோழி அறத்தொடு நின்றது*

*வருக்கை வளமலையுண் மாதரும் யானு*
*மிருக்கை யிதண்மேலே மாகப்-பருக்கைக்*
*கடா அமால் யானை கடிந்தானை யல்லாற்*
*றொடா அவா லென்றோழி தோள்.*

*சொற்பிரிப்பு:*
*வருக்கை வள மலையுள் மாதரும் யானும்*
*இருக்கை இதண் மேலேம் ஆக பரு கை*
*கடாஅம் மால் யானை கடிந்தானை அல்லால்*
*தொடாஅவால் என் தோழி தோள்*

*தினைப்புனம் காக்கையில் மதங்கொண்ட யானையிடம் இருந்து காப்பாற்றிய தலைவனைத்தான் தலைவி மணப்பாள் என்று தோழி செவிலிக்குக் கூறுகிறாள் பலா மரங்கள் மிகுந்த வளப்பம் நிறைந்த மலையினிடத்திலே, என் தலைவியும் நானும், தினைப்புனத்தில் அமைத்துள்ள பரணின் மேலாக இருக்கும் பொழுது எங்களைத் தாக்க முற்பட்ட, பருத்த துதிக்கையினையும், மதம் பிடித்து மிக்க வெறியும் கொண்டிருந்த யானையிடம் இருந்து எங்களைக் காப்பாற்றிய அக் காளை போன்ற இளைஞனை அன்றி வேறு எவரையும் என்னுடைய தலைவியின் தோள்கள் சேராது (என்று தோழி செவிலியிடங் கூறினாள்.)*

*வருக்கைப் பலாவினையுடையவளமலையின் கண் மாதரும் யானும் எமக்கிருக்கையாகிய பரண்மேலேயிருந்தேமாக, பெரிய கையினையுங் கடாத்தையும்பெருமையையும் உடைய யானையைத் துரந்து கடிந்தானை யன்றித்தீண்டாவால், என்றோழியுடைய தோள்கள். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"பலா மரங்கள் நிறைந்த மலையிடத்தில் நானும் தலைவியும் பரண் மீது தினைப்புனத்தைக் காத்தோம். அப்போது மதயானையிடம் இருந்து காப்பாற்றிய காளையைப் போன்றவனைத் தவிர எவரையும் என் தலைவியின் தோள்கள் தொடமாட்டா" என்று தோழி செவிலிக்கு அறத்தோடு நிற்றல். (பால சங்கரன் உரை)*

*15. தலைமகன் சான்றோரை வரைவு வேண்டி விடுத்த விடத்துத் தலைமகளின் தந்தைக்குந் தனையன்மார்க்கும் நற்றாய் அறத்தொடு நின்றது*

*வாடாத சன்றோர் வரவெதிர் கொண்டிராய்க்*
*கோடாது நீர்கொடுப்பி னல்லது-கோடா*
*வெழிலு முலையு மிரண்டிற்கு முந்நீர்ப்*
*பொழிலும் விலையாமோ போந்து.*

*சொற்பிரிப்பு:*
*வாடாத சான்றோர் வரவு எதிர்கொண்டிராய்*
*கோடாது நீர் கொடுப்பின் அல்லது கோடா*
*எழிலும் முலையும் இரண்டிற்கும் முந்நீர்*
*பொழிலும் விலை ஆமோ போந்து*

*தலைவனின் கோரிக்கையை ஏற்றுத் தலைவியை அவனுக்கு மணமுடிக்குமாறு நற்றாய் தலைவியின் தந்தைக்கும் தமையனுக்கும் அறிவுறுத்துகிறாள். தலைவன் மன்றல் விரும்பி அனுப்பிய, குறையேதும் கூறவியலாத சான்றோர்களினது வருகையினை ஏற்றுக் கொண்டவர்களாக, மறுக்காது நீர் வார்த்துக் கொடுத்தலாகிய மண முறையில் மகளை மணம் செய்து கொடுத்தல் நல்லது. அல்லாமல், மகளின் தளர்ச்சியுறாத எழிலும் முலைகளுமாகிய இரண்டினுக்கும், கடலாற் சூழப்பட்ட இந்த உலகைக் கொடுப்பினும் பொருத்தமான விலையாகுமோ? (காதலினையே மதிக்கவேண்டும் என்று நற்றாய் கூறினாள்.)*

*தள்ளாத சான்றாண்மையையுடையார் வரவை எதிர்கொண்டிராய்க் கோடாது உடம்பட்டுநீர் கொடுப்பினன்றித் தளராத அழகும் முலையும் என்னும்இரண்டிற்கும் முந்நீராற் சூழப்பட்ட வுலகும் விலையாமோநிரம்பி. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"தலைவன் அனுப்பிய சான்றோரின் வருகையை ஏற்று நீர் வார்த்து மணமுறையில் மகளைத் தந்தால் அல்லது நம் மகளின் தளர்ச்சி இல்லாத கட்டழகும், கொங்கைகள் என்ற இரண்டிற்கும் கடலால் சூழப்பட்ட இவ்வுலகும் பொருந்தியதாய் நின்று காணிக்கையாகக் கொள்ளத் தக்கது ஆகுமோ? காதலை மதிக்க வேண்டும்" என்று நற்றாய், தந்தை, தமையன் ஆகியோருக்கு அறத்தோடு நின்றாள். (பால சங்கரன் உரை)*

*16. தோழி சேட்படுத்த இடத்து, தலைமகன் தனது ஆற்றாமையால் சொல்லியது*

*நாணாக நாறு நனைகுழலா ணல்கித்தன்*
*பூணாக நேர்வளவும் போகாது - பூணாக*
*மென்றே னிரண்டாவ துண்டோ மடன் மாமே*
*னின்றேன் மறுகிடையே நேர்ந்து.*

*சொற்பிரிப்பு:*
*நாள் நாகம் நாறும் நனை குழலாள் நல்கி தன்*
*பூண் ஆகம் நேர்வு அளவும் போகாது பூண் ஆகம்*
*என்றேன் இரண்டாவது உண்டோ மடல்மா மேல்*
*நின்றேன் மறுகிடையே நேர்ந்து*

*தலைவியை அடைய முடியாத ஆற்றாமையால் மடல் ஊரத் துணிந்த தலைவன் அதைத் தோழிக்குத் தெரிவிக்கிறான்.*
*அன்று பூத்த மணக்கும் சுரபுன்னை மலர்களைச் சூடி, அதன் தேனால் நனையப்பட்ட கூந்தலையுடைய தலைவி, அணிகலனோடு கூடிய தன்னுடைய மார்பினை எனக்குக் கொடுத்து, என்னோடு சேரும் காலம் வரைக்கும், மடலேற அணிந்த எலும்பாற் செய்த அணிகலன் என் மார்பிலிருந்து நீங்கப் போவதில்லை என்று உனக்குச் சொல்கிறேன். அதற்கு மாறாக வேறு சொல் கூறமாட்டேன். பனைமடலால் செய்யப்பட்ட குதிரையின் மீதே அமர்ந்து தலைவியின் தெரு வழியே மடல் ஊருதற்குத்துணிந்து விட்டேன் (என்று தலைவன் தோழியிடம் கூறுகிறான்)*

*நாக நாண்மலர் நாறும்தேனால் நனையப்பட்ட குழலாள் எனக்கு நல்கித் தன்னுடையபூண்மார்பினை நேருமளவும் என் மார்பினின்றும் அவ்வெலும்பாற்செய்த பூண் போகா தென்று நினக்குச் சொல்லினேன்; இனி இரண்டாவது வேறொரு சொல்லுண்டோ? பனை மடலாற்செய்யப்பட்ட மாவினை யூரத் துணிந்து நின்றேன்,தெருவினடுவே யுடன்பட்டு. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"மலர்களை அணிந்த தலைவி அணிகளுடன் கூடிய மார்பை எனக்கு அளித்து என்னுடன் புணரும் வரைக்கும் எலும்பால் ஆன அணிகலன் என் மார்பினின்று நீங்காது. இனி இதற்கு மாறாக வேறொரு சொல் உண்டோ? பனை மடலால் செய்யப் பட்ட குதிரையின் மீது ஏறி ஊரத் துணிந்து விட்டேன்" எனத் தலைவன் தோழியிடம் கூறினான். (பால சங்கரன் உரை)*

17. *நின்னால்  சொல்லப்பட்டவளை அறியேனாலோஎன்ற தோழிக்குத் தலைமகன் அறிய வுரைத்தது*

*அறிகவளை யைய விடைமடவாய்! ஆயச்*
*சிறிதவள்செல் லாளிறுமென் றஞ்சிச்-சிறிதவ*
*ணல்கும்வாய் காணாது நைந்துருகி யென்னெஞ்ச*
*மொல்குவா யொல்க லுறும்.*

*சொற்பிரிப்பு:*
*அறிகு அவளை ஐய இடை மடவாய் ஆய*
*சிறிது அவள் செல்லாள் இறும் என்று அஞ்சி சிறிது அவள்*
*நல்கும்வாய் காணாது நைந்து உருகி என் நெஞ்சம்*
*ஒல்கும்வாய் ஒல்கல் உறும்*

*நான் தலைவியைக் குறித்து நன்கே அறிவேன் என்று தலைவன் கூறுவது*
*நான்  தலைவியை  நன்கு அறிவேன், உண்டோ இலையோ என்று  ஐயம் கொள்வதற்கு இடமான இடை கொண்ட  இளமை நிரம்பியவள்.  அவளது  இடை வருந்தும்படியாக அவள் சிறிது தொலைவு செல்வதற்கு முன்னரே என் நெஞ்சம் அவளது இடை இற்று விழுந்து விடுமே என்று அஞ்சும், அவள் சிறிதும் என்பால் அன்புகாட்டுவதைக் காணாது நைந்து  உருகி என் நெஞ்சம் வருந்தும். அவள் பின் சென்று தளர்ந்து விடும் (என்று தலைவன் தோழியிடங் கூறினான்.)*

*அறிவேன் யான்அவளை; தன்னுடைய மெல்லிய இடை வருந்த, மடவாய்!சிறிது மவள் நடவாளாக இறும் இறும் என்றஞ்சி அவள்எனக்குச் சிறிதும் அருளு நெறி காணாது தளர்ந்துருகிஎன்னெஞ்சம் அவளொல்கி நடக்குந்தோறும் பின்சென்று தளர்தலுறும். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"தலைவியை நான் நன்றாக அறிவேன். அவள் உண்டா இல்லையா என்று ஐயப்படும்படி உள்ள இடையானது வருந்துமாறு அவள் சிறிது தொலைவு செல்வதற்கு முன்பே என் உள்ளம் அவள் இடை ஒடிந்து விடும் என்று அஞ்சி அவள் நடக்குந் தோறும் அவள் பின் போய்த் தளர்ந்து வருந்தும்" என்று தலைவன் தோழியிடம் கூறியது. (பால சங்கரன் உரை)*

18. *பகற்குறிக்கட் டலைமகன் சிறைப்புறத்தானாகத்தோழி செறிப் பறிவுறீஇ வரைவு கடாயது*

*என்னாங்கொ லீடி லிளவேங்கை நாளுரைப்பப்*
*பொன்னாம்போர் வேலவர் தாம்புரிந்த - தென்னே*
*மருவீயா மாலை மலைநாடன் கேண்மை*
*யிருவியா மேன லினி.*

*சொற்பிரிப்பு:*
*என் ஆம்கொல் ஈடு இல் இள வேங்கை நாள் உரைப்ப*
*பொன் ஆம் போர் வேலவர்தாம் புரிந்தது என்னே*
*மருவி ஆம் மாலை மலை நாடன் கேண்மை*
*இருவியாம் ஏனல் இனி*

*பகலில் தலைவியை நாடி வந்த தலைவனைக் கண்டு தலைவியை விரைவில் மணம் புரிந்து கொள்ளச் சொல்வது.*
*என்ன ஆகப்போகிறதோ! பெருந்தன்மை இல்லாத இந்த இள வேங்கை மரமானது பூ பூத்து தினைக் கதிர் அறுவடை செய்ய வேண்டிய நாள் வருவதைத் தெரிவிக்கிறது. பொன்னாலாகிய அணிகலன் முதலியவற்றைப் பரிசமாக எதிர்பார்க்கும் போர் விருப்பமிக்க வேலினையுடையவர் எந்தையும் என்னையன் மாரும். என்ன கொடுமை. இனிமேல் பழகுவதால் பயின்று வருகின்ற தன்மையுடைய மலைநாட்டிற்குரிய தலைவனது நட்பானது கதிர் அறுக்கப்பட்ட புனம் போல வறண்டு விடும் ( என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்)*

*தகுதியில்லாத இளவேங்கைநாட்சொல்ல, இனிக் குரலொழிந்து இருவியாய்க் கழியுந்திணையெல்லாம்; எந்தையும் என்னையன்மாருமாகியபோர் வேலவர் இவட்குப் பரிசமாக மிகவிரும்புகின்றது பொன்னாம்; ஆதலாற் பயிலப் பழகிவருந்தன்மையையுடைய மலைநாடன் கேண்மை யினி யென்னாய்விளையுங் கொல்லோ! என்னே! (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"வேங்கை மரம் தினைக்கதிரைக் கொய்ய வேண்டியதை பூத்து தெரிவித்தது. கதிர்கள் பறிக்கப்பட்டு வெற்றுத் தினைத் தாளை உடையதாய் விளங்கும். தந்தையும் தமையனும் தலைவிக்குப் பரிசமாக விரும்பியது பொன்னாலான அணிகலன் ஆகும். நட்புடன் பழகி வரும் மலைநாட்டுத் தலைவனின் நட்பு என்ன ஆகுமோ?" (தோழி வரைவு கடாயது) (பால சங்கரன் உரை)*

*19. பின்னின்ற தலைமகன் தோழி குறை மறாமல் தனது ஆற்றாமை மிகுதி சொல்லியது*

*பாலொத்த வெள்ளருவி பாய்ந்தாடிப் பல்பூப்பெய்*
*தாலொத்த வைவனங் காப்பாள்கண் - வேலொத்தென்*
*னெஞ்சம்வாய்ப் புக்கொழிவு காண்பானோ காண்கொடா*
*வஞ்சாயற் கேநோவல் யான்.*

*சொற்பிரிப்பு:*
*பால் ஒத்த வெள் அருவி பாய்ந்து ஆடி பல் பூ பெய்தால்*
*ஒத்த ஐவனம் காப்பாள் கண் வேல் ஒத்து என்*
*நெஞ்சம் வாய் புக்கு ஒழிவு காண்பானோ காண் கொடா*
*அம் சாயற்கே நோவல் யான்*

*தலைவியைக் காண்பதே தன்னை வாட்டுவதாகத் தனது ஆற்றாமையைத் தோழியிடம் தலைவன் உரைத்தல்*
*பால்போன்ற வெண்மையான அருவியில் குதித்து நீராடி, பல்வகையான பூக்களைப் பரப்பிவைத்தாற் போன்ற மலைநெல் விளையும் புனத்தினையைக் காவல் செய்யும் தலைவியின் கண்கள் வேற்படையினைப் போன்றது. என் நெஞ்சினுள் தாவிப் புகுந்து என் உயிரினை ஒழிப்பதைக் காண விருப்பமா? நான் தலைவியைக் காணுவதால் அவளது அழகிய மேனியினைக் காண்பதுவே என்னை வாட்டுகிறது (என்று தலைவன் தோழியினிடங் கூறினான்.)*

*பால் போன்ற வெள்ளருவியைப்பாய்ந்தாடி, பல பூக்களையும் பெய்து பரப்பினாற்போலப்பூங்கொடிகள் பரந்து ஐவனப்புனத்தைக் காப்பாள் கண்கள்,வேல் போன்று எனது நெஞ்சத்தின்கண் வாவிப்புக்குஎன்னுயிரை ஒழிவு காண வேண்டியோ புறம் போகாது உள்ளே அடங்கின;இத்துணை வேண்டுமோ? அவளுடைய அழகிய மேனிக்கேநோவாநின்றேன் யான். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"பால் போன்ற நீர்வீழ்ச்சியில் பாய்ந்து நீராடுதலைச் செய்து பலவகையான மலர்களைப் பரப்பினாற் போல் இருக்கின்ற புனத்தைக் காவல் செய்யும் தலைவியின் கண்கள் வேலினைப் போல் என் உள்ளத்தில் தாவிப்புகுந்தன. காரணம் என் உயிரின் ஒழிவைக் காண வேண்டும் என்பதோ! அவ்வளவு முயற்சி தேவையில்லை. ஏனெனில் நான் தலைவியைக் காண்பதைக் கொண்டு அவளது மேனிக்கே வருந்துகின்றேன்" எனத் தலைவன் தோழிக்குச் சொன்னது. (பால சங்கரன் உரை)*

*20. கையுறை மறை*

*நாள்வேங்கை பொன்விளையு நன்மலை நன்னாட!*
*கோள்வேங்கை போற்கொடியா ரென்னையன்மார் - கோள்வேங்கை*
*யன்னையா னீயு மருந்தழையா மேலாமைக்*
*கென்னையோ நாளை யெளிது.*

*சொற்பிரிப்பு:*
*நாள் வேங்கை பொன் விளையும் நல் மலை நல் நாட*
*கோள் வேங்கை போல் கொடியார் என் ஐயன்மார் கோள் வேங்கை*
*அன்னையால் நீயும் அரும் தழை யாம் ஏலாமைக்கு*
*என்னையோ நாளை எளிது*

*தலைவன் தரும் அன்பளிப்பை ஏற்க இயலாமல் மறுக்க வேண்டிய சூழ்நிலையை தோழி விளக்குகிறாள்*
*அன்று பூத்த வேங்கைப் பூக்கள் பொன்போன்ற தாதுக்களைப் பரப்பும் நல்ல மலைகளையுடைய நல்ல நாட்டிற்குரிய தலைவனே! வலிமைமிக்க பெரும் புலியினைப் போன்று கொடுமை மிக்கவர் என்தமையன் மார்கள். நீயும் வலிமை மிக்க பெரும்புலியினைப் போன்றுள்ளாய். ஆதலால் இருவருக்கும் இடையில் மோதலைத் தவிர்க்க விரும்புவதால் நாங்கள் நீ கொணர்ந்த அருமையான இத்தழையினை ஏற்க இயலாத சூழ்நிலை இன்று. ஆதலால் நீ இத்தழையினை நாளைக் கொண்டுவந்தால் நாங்கள் ஏற்றுக் கொள்ள இயலும் (என்கிறாள் தோழி தலைவனிடம்.)*

*வேங்கை நாண்மலர்பொன்விளைக்கும் நன் மலை நாடனே! கோள் வேங்கைபோற்கொடியார் என் ஐயன்மார்; நீயுங் கோள் வேங்கையனையை யாதலான் இன்று நீயும் இங்கே நிற்கின் மிகப்போர் விளையும்; நீ கொணர்ந்த தழையை யாங்கொள்ளாமைக்குவேறு காரண மென்னை? நாளை நீ கொண்டு வந்தால்எளிது. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"பொன் போன்ற வேங்கை மலர்கள் பூத்த மலைநாடனே! என் தமையன்மார்கள் புலியைப் போன்று வீரமானவர்கள். நீயும் புலியைப் போன்று காணப்படுகிறாய்! இங்கு நீ இருந்தால் போர் ஏற்படும். நீ கொண்டு வந்த தழையை நாளை யாம் ஏற்றுக் கொள்வது எளிதாகும்" என்று தோழி தலைவன் கொண்டு வந்த பரிசை ஏற்க மறுத்தாள். (பால சங்கரன் உரை)*

*21. ஆற்றானாய தலைமகனைத் தோழி ஏன்றுகொண்டு கையுறை யெதிர்ந்தது*

*பொன்மெலியு மேனியாள்பூஞ்சுணங்கு மென்முலைக*
*ளென்மெலிய வீங்கினவே பாவமென் - றென்மெலிவிற்*
*கண்கண்ணி வாடாமை யானல்ல வென்றாற்றா*
*னுண்கண்ணி வாடா ளுடன்று.*

*சொற்பிரிப்பு:*
*பொன் மெலியும் மேனியாள் பூம் சுணங்கு மென் முலைகள்*
*என் மெலிய வீங்கினவே பாவம் என்று என் மெலிவிற்கு*
*அண் கண்ணி வாடாமை யான் நல்ல என்றால் தான்*
*உண்கண்ணி வாடாள் உடன்று*

*தலைவன் தலைவிக்குத் தரும் அன்பளிப்பைத் தோழி ஏற்றுக் கொண்டு தலைவியிடம் சேர்ப்பிக்க உதவுகிறாள்.*
*பொன்னைப் போன்று ஒளிவீசும் மேனி கொண்ட தலைவியின், வேங்கைப் பூபோன்ற தேமல்கள் படர்ந்த மென்மையான முலைகள் வருந்தும்படி புடைத்துப் பருத்துக் காண்கின்றனவே, பாவம் என்று சொல்லி, நீ வருந்துதற்கு என்ன காரணம் ? நீ கொண்டு வந்த இக் குறுங் கண்ணிகள் வாடாதவாறு தலையிடம் சேர்த்து, இக்கண்ணிகள் நல்லனவென்று நான் கூறினால், மையுண்ட கண்களையுடைய தலைவி வருந்தாமல் ஏற்றுக் கொள்ள உடன்படுவாள் (என்று தலைவனிடந் தோழி கூறினாள்)*

*பொன்றளரும் மேனியாள்வேங்கைப் பூப் போன்ற சுணங்கினையுடைய மென்முலைகள்எற்றுக்கு யான் மெலியப் புடைத்து வீங்கின, என்னேபாவமென்று சொல்லி நீ மெலிதற்குக் காரணமென்னை?நீ கொணர்ந்த குறுங் கண்ணிகள் வாடாத வகை யான்கொண்டு சென்று இவை நல்ல வென்று காட்டினால், அவ்வுண்கண்ணிதான் மாறுபட்டுத் துன்புறாள் வாங்கும். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"தலைவியின் தேமல் படர்ந்த கொங்கைகள், நான் வருந்துமாறு பருத்துக் காணப்படுகின்றன. தலைவ! நீ வீணாக மெலிகின்றாய்! நீ கொணர்ந்த குறுங்கண்ணிய தழை வீணாக வாடிப் போகாதபடி யான் தலைவியிடம் கொண்டு சேர்த்து இவை நல்லவை எனக் கூறினால், தலைவி துன்பப்படாமல் ஏற்றுக் கொள்வாள்" என்று தோழி தலைவனிடம் கூறினாள். (பால சங்கரன் உரை)*

*22. பகற்குறிக்கட் டலைமகள் குறிப்பன்றிச்சார்கிலாத தலைமகன் றனதாற்றாமை சொல்லியது*

*கொல்யானை வெண்மருப்புங் கொல்வல் புலியாதளு*
*நல்யானை நின்னையர் கூட்டுண்டு - செல்வார்தா*
*மோரம்பி னானெய்து போக்குவர்யான் போகாம*
*லீரம்பி னாலெய்தா யின்று.*

*சொற்பிரிப்பு:*
*கொல் யானை வெண் மருப்பும் கொல் வல் புலி அதளும்*
*நல் யானை நின் ஐயர் கூட்டுண்டு செல்வார்தாம்*
*ஓர் அம்பினான் எய்து போக்குவர் யான் போகாமல்*
*ஈர் அம்பினால் எய்தாய் இன்று*

*வீரம் மிக்க உன் அண்ணன்கள் அம்பினால் மற்றவரைக் கொல்வர், ஆனால் நீ உன் கண்களால் என்னைக் கொல்கிறாய்.*
*கொல்கின்ற யானையின் வெண்மையான தந்தங்களையும், கொல்லும் வலிமைமிக்க புலித்தோல்களையும், நல்ல யானையினைப் போன்ற உன்னுடைய தமையன் மார்கள் திறையாகக் கொண்டு செல்வார். ஓரம்பினாலே தாக்கி அழிப்பர். ஆனால், நீயோ நான் இவ்விடத்தைவிட்டு அகலாமல் இருக்கும்படி இப்பொழுது உன் கண்களாகிய இரண்டு அம்புகளினாலே தாக்கினாய் (என்று தலைவன் தலைவியை நோக்கிச் சொன்னான்.)*

*கொல் யானைகளினுடையவெண்மருப்பையுங் கொலைவல்ல புலித் தோல்களையும்நல்யானை போன்ற நின் ஐயர் திறைகொண் டொழுகுவார்,இப்புனத்தின்கட் பிறர் வருவாரை ஓரம்பினா லெய்துபோக்குவர்; யான் பிழைத்துப் போகாதவகை நின் கண்ணென்னுமிரண்டம்பினால் எய்தாய் இன்று. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"கொல்கின்ற யானையினுடைய வெண்மருப்பையும் கொல்ல வல்ல புலியையும் கொல்கின்ற உன் தமையர் இத்தினைப் புனத்தில் வருகின்றவரை ஓர் அம்பினால் ஒழிப்பர். ஆனால் நீயோ நான் இவ்விடத்தை விட்டு நீங்காதவாறு உன் கண்களாகிய அம்புகளால் தாக்கினாய்" எனத் தலைவன் தலைவியிடம் கூறுதல். (பால சங்கரன் உரை)*

*23. 'நின்னால் குறிக்கப்பட்டாளை யான் அறியேன்' என்ற தோழிக்குத் தலைமகன் கூறியது; பாங்கற்குக் கூறியதூஉம் ஆம்*

*பெரு மலை தாம் நாடி, தேன் துய்த்து, பேணாது*
*அரு மலை மாய்க்குமவர் தங்கை திரு முலைக்கு*
*நாண் அழிந்து, நல்ல நலன் அழிந்து, நைந்து உருகி,*
*ஏண் அழிதற்கு யாம் ஏயினம்.*

*சொற்பிரிப்பு:*
*பெரு மலை தாம் நாடி தேன் துய்த்து பேணாது*
*அரு மலை மாய்க்குமவர் தங்கை திரு முலைக்கு*
*நாண் அழிந்து நல்ல நலன் அழிந்து நைந்து உருகி*
*ஏண் அழிதற்கு யாம் ஏயினம்*

*காதலியின் முலைகள் மேல் கொண்ட விருப்பினால் தன் நலனும் பெருமையும் அழிந்துவிட்டதாகத் தலைவன் கூறுகிறான்.*
*பெரிய மலைப்பக்கங்களெங்கும் தாம் புகுந்துதேடி, கிடைக்கும் தேன் எல்லாம் குடித்து, மனம் நிறைவடையாமல், அரிய மலைகளைப் போன்ற யானைகளைக் கைக்கொள்பவர்களுடைய தங்கையின் சிறப்புமிக்க முலைகளை விரும்பி நாணத்தைத் துறந்து, நல்ல நலமும் அழிந்து, தளர்ந்து வருந்தி, வலிமையும் அழியும் நிலைக்கு, நான் எடுத்துக்காட்டாக அமைந்தேன் (என்று தலைமகன் கூறினான்.)*

*பெருமாலை யெங்கும்தாம் புக்கு நாடித் தேன் வாங்கி நுகர்ந்து மனத்தின்கண்நுடங்கிப் பாதுகாவாது அருமலை போன்றிருந்த யானைகளைப்பிணித்துக் கொள்வாருடைய தங்கையுடையதிருமுலைக்குத் தோற்று நாணழிந்து மிக்க அறிவு முதலாயினகுணங்கள் நான்கு மழிந்து தளர்ந்துருகி வலியழிதற்குயாமமைந்தேம். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"மலைப்போன்ற யானைகளைக் கைப்பற்றும் வீரர்களின் தங்கையாகிய தலைவியின் கொங்கை மீது கொண்ட விருப்பினால் நாணம் இழந்து அரிய பண்புகள் யாவும் கெட்டுத் தளர்ந்து வலிமை கெடும் நிலைக்கு நாம் எடுத்துக் காட்டாய் அமைந்தோம்" என தலைவன் கூறினான். (பால சங்கரன் உரை)*

*24. தோழி குறை மறாமல் தலைமகன் தனது ஆற்றாமை மிகுதி சொல்லியது*

*நறுந்தண் டகரம் வகுள மிவற்றை*
*வெறும்புதல்போல் வேண்டாது வேண்டி - யெறிந்துழுது*
*செந்தினை வித்துவார் தங்கை பிறர் நோய்க்கு*
*நொந்தினைய வல்லளோ நோக்கு.*

*சொற்பிரிப்பு:*
*நறும் தண் தகரம் வகுளம் இவற்றை*
*வெறும் புதல் போல் வேண்டாது வேண்டி எறிந்து உழுது*
*செம் தினை வித்துவார் தங்கை பிறர் நோய்க்கு*
*நொந்து இனைய வல்லளோ நோக்கு*

*பிறர் அருமை அறியாத தனது அண்ணன்களைப் போன்று தலைவிக்கும் எனது வருத்தம் புரியவில்லை என்கிறான் தலைவன்.*
*நறுமண மிக்க, குளிர்ந்த தகரமரம், மகிழமரம் போன்றவற்றை எல்லாம் வெறும் பயனற்ற புதர்களைப் போல் பாவித்து விரும்பாது வேரோடு வெட்டி எறிந்து, பயிர் செய்தலை விரும்பி, உழுது பண்படுத்தி, சிவந்த தினையினை விதைப்பவர்களாகிய மலைநாட்டிற்குரிய தலைவர்களின் தங்கையான தலைவி, பிறர் படுந் துன்பத்தை உணர்ந்து தளர்ந்து வருந்தும் திறன் உள்ளவளா? நீ இதனைச் சற்றே ஆராய்ந்து பார்ப்பாயாக(என்று தலைவன் தோழியிடங் கூறினான்).*

*நறுவிய குளிர்ந்ததகரம், வகுளம் என்னு மிவற்றைப் பயன்படாத வெறும்புதல் போல விரும்பாது வெட்டியுழுது, விரும்பிச் செந்தினையைவித்துவார் தங்கை பிறர் கொண்ட நோய்க்கு நொந்திரங்கவல்லளோ? ஆராய்ந்து பாராய் தோழி! (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"பயனற்ற பயிர்களை வெட்டி சிவந்த தினை விதைப்பவரான மலைநாட்டுத் தலைவரின் தங்கை, மற்றவர்படும் துன்பத்துக்காகத் தளர்ந்து வருந்துவாளா? நீ நன்று ஆராய்வாயாக!" எனத் தலைவன் தோழியிடம் கூறினான். (பால சங்கரன் உரை)*

*25. தோழி தலைமகனை நெறி விலக்கி, வரைவு கடாயது*

*கொல்லியல் வேழங் குயவரி கோட்பிழைத்து*
*நல்லியற் றம்மின நாடுவபோ - னல்லிய*
*னாமவேற் கண்ணா ணடுநடுப்ப வாரலோ*
*வேமவே லேந்தி யிரா.*

*சொற்பிரிப்பு:*
*கொல் இயல் வேழம் குயவரி கோள் பிழைத்து*
*நல் இயல் தம் இனம் நாடுவ போல் நல் இயல்*
*நாம வேல் கண்ணாள் நடுநடுப்ப வாரலோ*
*ஏம வேல் ஏந்தி இரா*

*உங்கள் நலனுக்காக தலைவி வருந்தும்படி அவளை இரவில் காண வரவேண்டாம். கொல்லும் இயல்பினையுடைய யானைகள், புலியினால் தாக்கப் படுவதிலிருந்து தப்பித்து, நல்ல தன்மையினையுடைய தமது கூட்டத்தினை தேடித்திரிவன போல, நல்ல இயல்பு கொண்ட அச்சத்தையுண்டாக்கும் வேலினையொத்த கண்களையுடைய தலைவி உங்களுக்கு நேரும் இடர் கருதி நடு நடுங்கி அஞ்சும்படி, இரவுப்பொழுதில் பாதுகாப்பிற்காகக் கையில் ஒரு வேற்படையினை மட்டும் ஏந்திக்கொண்டு அவளைக் காண வாராதிருப்பாயாக (என்று தோழி தலைவனிடங் கூறினாள்.)*

*கொல்லும் இயல்பினையுடையயானைகள் புலியினாற் கொல்லப்படுதலைத் தப்பிமிக்க இயல்பினையுடைய தங்கூட்டத்தைத் தேடுவதுபோலும்; ஆதலான் மிக்க வியல்பினையுடைய அச்சத்தைச்செய்யா நின்ற வேல்போன்ற கண்ணாள் நடுநடுங்கும்வகைவராதொழி வாயாக, அரணாகிய நின் வேலை யேந்திஇரவின்கண். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"கொல்லும் தன்மையுடைய யானைகள் புலியினால் பற்றப்படுவதனின்றும் தப்பி, நல்ல தன்மையுடைய தம் கூட்டத்தைத் தேடித் திரிவன போன்று இரவில், பாதுகாவலான வேலைக் கையில் கொண்டு, நல்ல இயல்புடன் அச்சம் தரும் வேலைப் போன்ற கண்களையுடைய தலைவி மிகவும் நடுக்கம் கொள்ள வாராதிருக்க வேண்டும்!" என்று தோழி தலைவனிடம் சொன்னாள். (பால சங்கரன் உரை)*

*26. தோழி தலைமகனை நெறி விலக்கி, வரைவு கடாயது*

*கருங்கா லினவேங்கை கான்றபூக் கன்மே*
*லிருங்கால் வயவேங்கை யேய்க்கு-மருங்கான்*
*மழைவளருஞ் சார லிரவரின் வாழா*
*ளிழைவளருஞ் சாய லினி.*

*சொற்பிரிப்பு:*
*கரும் கால் இள வேங்கை கான்ற பூ கல் மேல்*
*இரும் கால் வய வேங்கை ஏய்க்கும் மருங்கால்*
*மழை வளரும் சாரல் இர வரின் வாழாள்*
*இழை வளரும் சாயல் இனி*

*உங்கள் நலனுக்காக தலைவி வருந்தும்படி அவளை இரவில் காண வரவேண்டாம். கரிய அடிப்பாகத்தையுடைய, இளம் வேங்கை மரங்கள் சொரிந்த மலர்கள் பாறைகளின் மீதே படிந்தது போன்று, பெரிய கால்களையுடைய வெற்றி மிக்க பெரும் வேங்கையினை ஒத்திருக்கும்படியான இடங்களோடு, மழை விடாது பெய்யும்படியான மலைப்பக்கத்தின் வழியே இராக் காலத்தே நீ வருவாயாயின் அதைத் தாளாது இனி உயிர் வாழ மாட்டாள் அணிகள் அணிந்து அழகுற விளங்கும் தலைவி (என்று தோழி தலைவனிடம் கூறினாள் தோழி.)*

*கருங்காலினையுடைய இனவேங்கை கன்மேலுகுத்த பூக்கள் பெரியதாளினையுடைய வயப்புலியை யொக்குகின்ற மருங்கான் மழைவளருஞ் சாரலானே இரவின்கண் நீவரின், உயிர்வாழ மாட்டாள்; இழை வளருஞ்சாயலாள். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"அணிகலன்களை அணிந்த தலைவி! வேங்கை மலர்கள் பாறைகள் மீது படிந்து பெரிய கால்களை உடைய புலியைப் போல விளங்கும். அத்தகைய இடங்களில் மழை விடாது பெய்யும். அவ்வழியே இரவில் நீ வருவாயின் (தலைவி) உயிர் தாங்கிக் கொண்டு இருக்க மாட்டாள்!" என்று தோழி தலைவனிடம் சொன்னாள். (பால சங்கரன் உரை)*

*27. தோழி படைத்துமொழி கிளவியான் வரைவு கடாயது*

*பனிவரைநீள் வேங்கைப் பயமலைநன் னாட!*
*இனிவரையா யென்றெண்ணிச் சொல்வேன்-முனிவரையு*
*ணின்றாள் வலியாக நீவர யாய்கண்டா*
*ளொன்றாள்காப் பீயு முடன்று.*

*சொற்பிரிப்பு:*
*பனி வரை நீள் வேங்கை பய மலை நல் நாட*
*இனி வரையாய் என்று எண்ணி சொல்வேன் முனி வரையுள்*
*நின்றான் வலியாக நீ வர யாய் கண்டாள்*
*ஒன்றாள் காப்பு ஈயும் உடன்று*

*தலைவிக்காக நீ வருவதைத் தாய் அறிந்து கொண்டாள், இனி காவல் மிகுதியாகும் எனவே தலைவியை விரைவில் மணம் முடிப்பாயாக.*
*குளிர்ந்த முகடுகளையும் நீண்டுயர்ந்த வேங்கை மரங்களையுங் கொண்ட பல்வகை வளங்கள் நிறைந்த மலைகள் சூழ்ந்த நல்ல நாட்டிற்குத் தலைவனே! இதற்கு முன் எமது தலைவியை மணவாது நாளைக் கழித்தாய், இனிமேலாகிலும், காலம் தாழ்த்தாது மணந்து கொள்வாய் என்று எண்ணி உனக்கு ஒன்று சொல்கின்றேன். இடர் கண்டு வெறுக்கத்தக்க இம்மலை வழியாக உன் கால் வன்மையே துணையாக நீ இங்கு வருவதை எங்கள் அன்னை பார்த்துவிட்டதால் எங்களைச் சினந்தாள். எங்கள் மீது கண்காணிப்பை அதிகப்படுத்துவாள். ஆகலின், தலைவியை விரைவில் மணமுடிப்பாயாக (என்று தோழி தலைவனிடம் கூறினாள்.)*

*குளிர்ந்த குவடுகளையும் நீண்ட வேங்கை மரங்களையும் உடைய பயமலை நாடனே! இதற்கு முன்பு வரைந்திலையாயினும் இனி வரைந்து புகுதாய் என்று நினக்கு ஆராய்ந்து சொல்வேன்; வெறுக்கத்தக்க மலையின் கண் நின்தாளாண்மையே வலியாக இரவின்கண் நீ வர எம் அன்னை கண்டாள்; இனி எங்களோடு பகைத்து வெகுண்டு மிக்க காவலை எமக்குத் தரும். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"குளிர்ந்த மலைகளை உடைய மலை நாடனே! இதுகாறும் நீ தலைவியை மணந்து கொள்ளவில்லை! இனியேனும் மணந்து கொள்ளவேண்டும் என நினைத்து உனக்கு ஒன்றைக் கூறுவேன். இந்த மலையில் நின் கால் வன்மையையே துணையாகக் கொண்டு நீ வருவதை எம் தாய் பார்த்தாள். எம்முடன் சினந்து மாறுபட்டாள். காவலை எமக்கு ஏற்படுத்தினாள். எனவே தலைவியை நீ விரைவில் மணந்து கொண்டு களிப்பாயாக!" எனத் தோழி தலைவனைப் பார்த்துச் சொன்னாள். (பால சங்கரன் உரை)*

*28. தலைமகன் சொன்ன குறிவழியே சென்று, தலைமகளைக் கண்டு, பாங்கன் சொல்லியது*

*மேகந்தோய் சாந்தம் விசைதிமிசு காழகி*
*னாகந்தோய் நாக மெனவிவற்றைப்-போக*
*வெறிந்துழுவார் தங்கை யிருந்தடங்கண் கண்டு*
*மறிந்துழல்வா னேவிம் மலை.*

*சொற்பிரிப்பு:*
*மேகம் தோய் சாந்தம் விசை திமிசு காழ் அகில்*
*நாகம் தோய் நாகம் என இவற்றை போக*
*எறிந்து உழுவார் தங்கை இரும் தடம் கண் கண்டும்*
*மறிந்து உழல்வானோ இ மலை*

*தலைவியைக் கண்ட தோழன் இவளை விட்டு எவ்வாறு தலைவன் பிரிந்து வந்தான்? அது அவனது உள்ளத்தின் உறுதியைக் காட்டுகிறதோ என எண்ணி வியக்கிறான்.*
*முகில்கள் தடவிச் செல்லும் வகையில் உயர்ந்து நிற்கும் சந்தனம், விசை, வேங்கை, உறுதி மிக்க அகில் மரங்களும், விண்ணை முட்டும் சுரபுன்னை மரங்களும் என இவற்றையெல்லாம் ஒழித்து எறிந்து, உழுது தினைப் பயிரிடுவாரின் தங்கையாகிய இத் தலைவியின் பெரிய அகன்ற கண்களைப் பார்த்த பிறகும் கூட அவளைப் பிரிந்து இங்கிருந்து திரும்பிய தலைவனின் உள்ள உறுதி இந்த மலையின் உறுதி போன்றது (என்று தோழன் தலைவியைக் கண்டு தலைவனை வியந்து தனக்குத் தானே கூறிக் கொள்கிறான்.)*

*முகிலைத் தோயாநின்ற சந்தனமும், விசை மரமும், திமிசும், காழகிலும், துறக்கத்தைச் சென்று தோயாநின்ற நாகமரமும் என்று சொல்லப்பட்ட இவையெல்லாம் போக வெட்டிப் புனமுழுவார் தங்கையாகிய இவளுடைய இருந்தடங்கண் கண்டுவைத்தும்,இங்கு நின்றும் மீண்டு அங்குவரவல்ல எம்பெருமான்இத்தோன்றுகின்ற மலைபோல் நிலையுடையன். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"சந்தனம், வேங்கை, அகில், சுரபுன்னை போன்ற மரங்களை வெட்டி உழுது தினைப் பயிர் இடுபவரான மலை நாட்டவரின் தங்கையான தலைவியின் நீண்ட அகன்ற கண்களைப் பார்க்க நேர்ந்தும், இங்கிருந்து மீண்டு அங்கு வருவதற்கு முயன்று வந்த தலைவன், ஆ! இந்த மலையைப் போன்ற நெஞ்சினன் ஆவான்!" என்று பாங்கன் வியந்து உரைத்தான். (பால சங்கரன் உரை)*

*29. பகற்குறிக்கண் இடம் காட்டியது*

*பலாவெழுந்த பால்வருக்கைப் பாத்தி யதனேர்*
*நிலா வெழுந்த வார்மண னீடிச் - சுலாவெழுந்து*
*கான்யாறு கால்சீத்த காந்தளம்பூந் தண்பொதும்பர்*
*தானாறத் தாழ்ந்த விடம்.*

*சொற்பிரிப்பு:*
*பலா எழுந்தபால் வருக்கை பாத்தி அதன் நேர்*
*நிலா எழுந்த வார் மணல் நீடி சுலா எழுந்து*
*கான் யாறு கால் சீத்த காந்தள் அம் பூம் தண் பொதும்பர்*
*தான் நாற தாழ்ந்த இடம்*

*பலாமரக் காட்டருகில், காட்டாறு பாயும் சோலைக்கருகில் உள்ள மணல் வெளியில் நானும் தலைவியும் பகலில் விளையாடுவோம் என்று தோழி தலைவனுக்குக் குறிப்பு கொடுக்கிறாள்.*
*உயர்ந்த பலாமரத்தின் பக்கத்திலே, மரங்களால் பாத்தியாகப் பிரிக்கப்பட்ட தோட்டத்தின் நடுவே, நிலவொளி படர்ந்தது போன்ற மிகுந்த மணல் வட்டமாகப் பரவியுள்ள பகுதியில், காட்டாற்றுப் பெருக்கினாலே சுழலால் அடித்து வரப்பட்ட காந்தளின் அழகிய பூக்கள் மிகுந்து காணும்படியான மணம் வீசும் குளிர்ந்த சோலையே நானும் என் தலைவியும் பகற் பொழுதில் தங்கி விளையாடிய இடமாகும் (என்று தோழி தலைவனிடம் சந்திக்க வேண்டிய இடத்தைக் குறிப்பால் கூறுகிறாள்.)*

*பலா வெழுந்த மருங்கின்கண் வருக்கைப் பலாக்களாற் பாக்கப்பட்டத னடுவே நிலாவொளி மிக்க ஒழுகிய மணலுயர்ந்து வளைந்து தோன்றி, கான்யாறுகள் இடங்களெல்லாஞ் சீத்த காந்தளம்பூந் தண்பொதும்பர் தான் விரை கமழ்ந்து தழைத்தவிடம், யாங்கள்பகலின் கண் விளையாடுமிடம். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"உயர்ந்த பலாமரத்தின் பக்கத்தில் நிலவின் ஒளி பொருந்தியுள்ள மணல் உயர்ந்து வட்டமாய்ப் பரவி விளங்கும் ஆற்றின் பக்கம் காந்தள் மலர்கள் மிகுந்துள்ள சோலை. அச்சோலையே! நானும் தலைவியும் விளையாடும் இடம்" என்று தோழி தலைவனிடம் கூறினாள். (பால சங்கரன் உரை)*

*30. பாங்கற்குத் தலைமகன் கூறியது*

*திங்களுள் வில்லெழுதித் தேராது வேல்விலக்கித்*
*தங்களு ளாளென்னுந் தாழ்வினா - லிங்கட்*
*புனங்காக்க வைத்தார்போற் பூங்குழலைப் போந்தென்*
*மனங்காக்க வைத்தார் மருண்டு.*

*சொற்பிரிப்பு:*
*திங்களுள் வில் எழுதி தேராது வேல் விலக்கி*
*தங்கள் உளாள் என்னும் தாழ்வினால் இங்கண்*
*புனம் காக்க வைத்தார் போல் பூங்குழலை போந்து என்*
*மனம் காக்க வைத்தார் மருண்டு*

*தினைப்புனம் காக்கும் தலைவியின் அழகில் என்மனம் கட்டுண்டு கிடக்கிறது என்று தலைவன் தோழனிடம் கூறுகிறான்.*
*முழுநிலவில்  இரண்டு விற்களைப்  புருவங்களாக வரைந்து வைத்து, பிறர்க்குத் தீங்கு நேருமே  என்பதை  நினைத்தும் பாராது இரு வேல்களாகிய கண்களை அவ்விற்களிடத்திலே மாறுபாடாகப் பொருத்தி வைத்து, தமது குலத்தில் பிறந்தவள் என்ற   எளிதாக அவளை மதிப்பிட்டதால்,  அறிவின்றி இவ்விடத்திலே தினைப்புனத்தைக் காவல் செய்யப் பூக்கள் நிறைந்த கூந்தலையுடைய தலைவியைக் காவலுக்கு வைத்தார்கள் போலிருக்கிறது. அவளை என் மனத்தில் புகுந்து காவல் செய்யும்படி வைத்துவிட்டார்கள் (என்று தலைவன் தோழனிடங் கூறினான்.)*

*ஒரு நிறைமதியின் கண்ணே இரண்டுவில்லை எழுதிப் பிறருயிரை யுண்ணுமென்று ஆராயாது இரண்டு வேலினையழுத்தி, தங்கள் குலத்துள்ளா ளொருத்தி யென்று தாங்கள் கருதப்படுந் தாழ்வு காரணத்தால் இவ்விடத்தின்கட் டினைப்புனத்தைக் காக்க வைத்தார் போலப் பூங்குழலை என் மனத்தைப் போந்து காக்கவைத்தார் அறிவின்றி. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"நிறைந்த சந்திரனில் இரண்டு வில்களை எழுதி காண்பவர்க்குத் தீமை உண்டாகும் எனப் பாராது, இரண்டு வேல்களான கண்களை அந்த வில்லில் மாறுபாடாய்ப் பொருத்தித், தம் குலத்தில் வந்தவள் என எண்ணப்படும் எளிய காரணத்தால், இவ்விடத்தில் மலர்கள் சூடிய கூந்தலை உடைய தலைவியைத் தினைப் புனத்தைக் காவல் செய்ய வைத்துவிட்டார்கள். ஆனால் அவளோ என் உள்ளத்தில் புகுந்து காவல் காக்கின்றாள்" எனத் தலைவன் தன் பாங்கனுக்குச் சொன்னான். (பால சங்கரன் உரை)*

*31. தோழி தலைமகளை மெலிதாகச் சொல்லி, குறை நயப்பக் கூறியது*

*தன்குறையி தென்னான் றழைகொணருந் தண்சிலம்ப*
*னின்குறை யென்னு நினைப்பினனாய்ப் - பொன்குறையு*
*நாள்வேங்கை நீழலு ணண்ணா னெவன்கொலோ*
*கோள்வேங்கை யன்னான் குறிப்பு.*

*சொற்பிரிப்பு:*
*தன் குறை இது என்னான் தழை கொணரும் தண் சிலம்பன்*
*நின் குறை என்னும் நினைப்பினனாய் பொன் குறையும்*
*நாள் வேங்கை நீழலுள் நண்ணான் எவன்கொலோ*
*கோள் வேங்கை அன்னான் குறிப்பு*

*உன்னால் தன் விருப்பம் நிறைவுறும் என்று எண்ணி உனக்கு அன்பளிப்புகளுடன் வருகிறான் தலைவன் என்கிறாள் தோழி.*
*தனக்கு என்ன தேவை என்பதை எனக்கு விளங்கச் சொல்கின்றானில்லை பூந்தழைகளை அன்பளிப்பாகக் கொண்டுவருகின்ற இந்த குளிர்ந்த மலைநாட்டுத் தலைவன். உன்னால் அவன் குறை தீர்க்க இயலும் என்ற எண்ணம் கொண்டவனாய், பொன்னினது நிறத்தையும் மிஞ்சும் இன்று மலர்ந்த மலர்கள் நிரம்பிய வேங்கை மரத்தினது நிழலில் நிலை கொள்ளாது நிற்கின்றான். வலிமை மிக்க பெரும் புலியினை ஒத்தவனாகிய இவனது மனக் கருத்துதான் என்னவோ (என்று தோழி தலைவியை வினவினாள்.)*

*தன் காரியம் இது என்று எனக்கு விளங்கச் சொல்லான், தழையைக் கொண்டு வந்தான், தண் சிலம்பை யுடையான் நின்னான் முடியுங் கருமம் இது என்னுங் கருத்தினனாய்ப் பொன்னிறந் தளரும் நாண்மலர்களையுடைய வேங்கை நிழலின் கண்ணுஞ் சிறிது பொழுதுஞ் சார்ந்திரான், என்னை கொல்லோ! கோள் வேங்கை யன்னானது கருத்து. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"குளிர்ந்த மலை நாடன் தனக்குரிய காரியம் இன்னது என்று உரைக்கவில்லை. பூந்தழைகளை, அடிக்கடி கொண்டு வருகின்றான். தான் நாடி வந்த செயல் உன்னால் முடியத்தக்கது என்ற எண்ணம் கொண்டவனாய்ப் பொன்னின் நிறத்தையும் தோற்கச் செய்யும் புதிய மலர்கள் மலர்ந்த வேங்கை மரத்தின் நிழலிலும் நில்லாதவனாய் உள்ளான். ஆகவே, வன்மை மிக்க புலி போன்ற அவனது மனக்கருத்து யாதோ?" என்று தோழி தலைவியிடம் உரைத்தாள். (பால சங்கரன் உரை)*

# *2. நெய்தல்: மூலமும் – உரையும்*

***பாடல்கள் [32-62]***

*32. பாங்கற்குச் சொல்லியது*

*பானலந் தண்கழிப் பாடறிந்து தன்னைமார்*
*நூனல நுண்வலையா னொண்டெடுத்த - கானற்*
*படுபுலால் காப்பாள் படைநெடுங்கண் ணோக்கங்*
*கடிபொல்லா வென்னையே காப்பு.*

*சொற்பிரிப்பு:*
*பானல் அம் தண் கழிப் பாடு அறிந்து, தன்னைமார்*
*நூல் நல நுண் வலையால் நொண்டு எடுத்த கானல்*
*படு புலால் காப்பாள் படை நெடுங் கண் நோக்கம்*
*கடிபு ஒல்லா; என்னையே காப்பு.*

*கடற்கரையில் மீன் உலர்த்திக் காவல் காக்கும் தலைவியின் கண்கள் என்மீது பாய்ந்து என்னையே வட்டமிட்டு என்னை அவளது காவலுக்குள் வைத்தது என்று தலைவன் தோழனிடம் கூறுகிறான்.*
*நெய்தல் மலர்கள் பூத்துள்ள, அழகிய குளிர்ந்த உப்பங்கழிகளிடத்தே, மீன்கள் பிடிக்கக் கூடிய வழிமுறைகளை நன்கு அறிந்த தனது தமையன் மார்கள், நல்ல நூல்களாற் பின்னப் பெற்ற நுட்பமான வலைகளினாலே முகந்து அள்ளி பிடித்துக் கொண்டு வந்த மீன் வகைகளை, கடற்கரைச் சோலையிலிருந்து கருவாடுகளாக வெய்யிலில் உலர்த்தி, அவற்றைப் பறவைகள் வந்து உண்ணாதவாறு பாதுகாப்பவளாகிய தலைவியின், வேலைப் போன்ற நீண்ட கண்களின் பார்வையானது, கருவாட்டினைக் காவல் காப்பதை மறந்து என்னையே வட்டமிட்டுக் காத்து வந்தது (என்று தலைவன் தோழனிடம் கூறினான்.)*

*நெய்தற் பூக்களையுடைய தண் கழியின் கண் மீன் பாட்டை யறிந்து தன்னைமார் நூலாற் செய்யப்பட்ட நல்ல நுண்ணிய வலையான் முகந்து எடுத்த படு புலாலைக் கானலின்கணிருந்து காப்பாள் படை நெடுங்கண்ணோக்கம் படு புலாலைக் காக்க மாட்டா, என்னையே காக்கும்அத்துணை.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"தன் தமையன் முகந்து பிடித்த மீன்களைக் காயவைத்த கருவாட்டினைக் கடல் துறையில் இருந்து காப்பாளின் பார்வை கருவாட்டில் நிலை கொள்ளாமல் எளியேனையே தன்வயப்படுத்திக் காப்பதில் நிலை கொண்டது" எனத் தோழனிடம் தலைவன் கூறியது. (பால சங்கரன் உரை)*

*33. பாங்கற்குச் சொல்லியது*

*பெருங்கடல் வெண்சங்கு காரணமாப் பேணா*
*திருங்கடன் மூழ்குவார் தங்கை - யிருங்கடலுண்*
*முத்தன்ன வெண்முறுவல் கண்டுருகி நைவார்க்கே*
*யொத்தனம் யாமே யுளம்.*

*சொற்பிரிப்பு:*
*பெருங் கடல் வெண் சங்கு காரணமா, பேணாது*
*இருங் கடல் மூழ்குவார் தங்கை, இருங் கடலுள்*
*முத்து அன்ன, வெண் முறுவல் கண்டு உருகி, நைவார்க்கே*
*ஒத்தனம், யாமே உளம்.*

*தலைவியின் வெண் முத்துப் பற்கள் சிந்தும் புன்முறுவலைக் காணுகையில் மனம் துவண்டு வருந்துகிறேன் நான் என்று தலைவன் தோழனிடம் கூறுகிறான். பெரிய கடலினிடத்தேயுள்ள வெண்மையான சங்குகளை எடுப்பதையே கருத்தாகக் கொண்டு, தமது உயிரையும் பொருட்படுத்தாது, ஆழ்கடலில் அமிழ்ந்து சங்கு எடுப்பவர்களின் தங்கை, அப்பெருங்கடலில் விளையும் முத்துக்களையொத்த வெண்ணிற பற்கள் சிந்தும் புன்முறுவலைக் கண்டு, மனம் துவண்டு வருந்துகின்றவர்களைப் போன்ற நிலையில் நானும் உள்ளேன் (என்று தலைவன் பாங்கனிடம் கூறினான்.)*

*பெருங் கடலுள் வெண் சங்கு பெறுதலே காரணமாகத் தங்களுயிரைப் பாதுகாவாது பெருங் கடலினுள்ளே குளிப்பார் தங்கையுடைய இருங் கடலின் முத்தன்ன வெண் முறுவல் கண்டு உருகி நைவார்க்கே பொருந்தி யாம்மேவியுளம்.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"பெரிய கடலில் முழுகுபவரான பரதவரின் தங்கையாகிய எம் தலைவியின், பெரிய கடலில் விளையும் முத்துகளைப் போன்ற வெண்மையான பற்களின் ஒளியைப் பார்த்து, மனம் தளர்ந்து வருந்தும் மக்களைப் போன்றவராய் நாம் ஆனோம்" எனத் தலைவன் தன் தோழனுக்குக் கூறினான். (பால சங்கரன் உரை)*

*34. புணர்ந்து நீங்கும் தலைமகனைக் கண்ணுற்று நின்ற தோழி வரைவு கடாயது*

*தாமரை தான்முகமாத் தண்ணடையீர் மாநீலங்*
*காமர்கண் ணாகக் கழிதுயிற்றுங் - காமருசீர்த்*
*தண்பரப்ப! பாயிரு ணீவரிற்றாழ் கோதையாள்*
*கண்பரப்பக் காணீர் கசிந்து.*

*சொற்பிரிப்பு:*
*தாமரைதான் முகமா, தண் அடை ஈர் மா நீலம்*
*காமர் கண் ஆக, கழி துயிற்றும் காமரு சீர்த்*
*தண் பரப்ப! பாய் இருள் நீ வரின், தாழ் கோதையாள்*
*கண் பரப்ப, காண், நீர் கசிந்து.*

*தலைவனே இரவில் நீ தலைவியைக் காண வருவாயானால் உன் நினைவால் கலங்கி இருக்கும் அவளது கண்களைக் காண இயலும் என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்.*
*கடற் கழிகள் பகுதியில் கடற்கரைச் சோலைகள் சிறப்புடன் அமைந்திருக்கும் குளிர்ந்த கடற்பகுதியின் தலைவனே! இருள் நிரம்பிய இவ்விரவில் நீ வருவாயாயின்; தாமரைப்பூவே முகமாகவும், குளிர்ந்த அடர்ந்த இலைகளையுடைய ஈரமான, பெரிய நீல மலர்கள் விரும்பத்தக்கக் கண்களாகவுங் கொண்டுள்ள, நீண்ட கூந்தலையுடைய தலைவியின் கண்கள் வருந்தி கண்ணீர் சிந்துவதை நீ காண்பாய் (என்று தோழி தலைவனிடங் கூறினாள்.)*

*தாமரை மலர்கள் தாமே முகமாகக் குளிர்ந்த இலையையுடைய ஈரத்தையுடைய மாநீலமலர்கள் காதலிக்கப்படுங் கண்ணாக, அக்கண்களைக் கழிக்கட்டுயில்வியாநின்ற காமருசீர்த் தண் பரப்பை யுடையானே! பெரிய இருளின் கண் நீ வரிற் றாழ்ந்த கோதையை யுடையாள் இரங்கி அவள் கண்கள் நீர் பரப்பக் காணாய்.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"அழகிய சிறப்பான குளிர்ந்த கடல் பரப்பை உடைய தலைவனே! தாமரையே முகமாகவும், குளிர்ந்த இலைகள் ஈரமான கண்களாகவும் உடைய தலைவியைச் சந்திக்க, கடல் கழிகளை உறங்கச் செய்யும் பரவி நிற்கும் இருளையுடைய இந்த இரவில் நீ வருவாயானால், தலைவி வருந்துவதை நீ காண்பாயாக!" எனத் தோழி தலைவனிடம் கூறியது.(பால சங்கரன் உரை)*

*35. 'இரவும் பகலும் வாரல்' என்று தலைமகனைத் தோழி வரைவு கடாயது*

*புலாலகற்றும் பூம்புன்னைப் பொங்குநீர்ச் சேர்ப்ப*
*நிலாவகற்றும் வெண்மணற்றண் கானற்-சுலாவகற்றிக்*
*கங்குனீ வாரல் பகல்வரின்மாக் கவ்வையா*
*மங்குனீர் வெண்டிரையின் மாட்டு.*

*சொற்பிரிப்பு:*
*புலால் அகற்றும் பூம் புன்னைப் பொங்கு நீர்ச் சேர்ப்ப!*
*நிலா அகற்றும் வெண் மணல் தண் கானல், சுலா அகற்றி,*
*கங்குல் நீ வாரல்; பகல் வரின், மாக் கவ்வை ஆம்,*
*மங்குல் நீர் வெண் திரையின்மாட்டு.*

*தலைவி மீது ஊரார் அலர் தூற்றாதவாறு இருக்க நீ இரவும் பகலும் தலைவியைக் காண விரும்பி இப்பக்கம் வரவேண்டாம் என்று தலைமகனிடம் தோழி கூறுகிறாள்.*
*புலவு நாற்றத்தினை நீக்கவல்ல, மணமிக்கப் பூக்கள் மலர்ந்துள்ள புன்னை மரங்கள் நிறைந்த கடற்பகுதியின் தலைவனே! தலைவியின் அல்லலுறும் மனக்கவலை நீங்க வேண்டுமெனில், நிலவொளியும் நிறத்தில் தோற்கும் வெண்மையான மணற் பரப்பைக் கொண்டிருக்கும் குளிர்ந்த கடற்கரைச் சோலையினிடத்தே இரவில் நீ வாராதிருப்பாயாக. அவ்வாறின்றி, மேகம் போன்ற நீரினையும் வெள்ளிய அலைகளையுடைய கடற்கரையின் பக்கம் பகல் வேளையில் நீ வருவாய் என்றாலும் மிகுதியும் பழிச் சொற்கள் கூறி தூற்றப்படும் நிலை ஏற்படும் (என்று தலைமகனிடம் தோழி கூறுகிறாள்)*

*புலானாற்றத்தை நீக்கும் பூக்களையுடைய புன்னைப் பொங்குநீர்ச் சேர்ப்பனே! நிலாவினதொளியை வென்று நீக்கும் வெண்மணற் றண் கானலின்கட் கங்குலின் கண்ணே வருதலின், இவளாவி வருந்தலைப் பெருக்கி நீ வாராதொழிக; பகல்வருவையாயிற் பிறரால் அலர் தூற்றப் படுங் கவ்வை பெருகும், மங்குல் போன்ற நீரையும் வெண்டிரையையுமுடைய கடன் மருங்கின்.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"புன்னை மரங்கள் நிறைந்து காணப்படும் துறையை உடையவனே! நீ இரவில் வராமல் பகலில் வந்தால் மேகம் போன்ற நீரை உடைய கடற்கரையின் பக்கம் பழிச் சொற்கள் உண்டாகும்" எனத் தோழி தலைவனிடம் கூறியது.(பால சங்கரன் உரை)*

*36. தோழி வரைவு கடாயது*

*முருகுவாய் முட்டாழை நீண்முகைபார்ப் பென்றே*
*குருகுவாய்ப் பெய்திரை கொள்ளா - துருகிமிக*
*வின்னா வெயில்சிற கான்மறைக்குஞ் சேர்ப்ப! நீ*
*மன்னா வரவு மற.*

*சொற்பிரிப்பு:*
*'முருகு வாய் முள் தாழை நீள் முகை பார்ப்பு' என்றே*
*குருகு வாய்ப் பெய்து, இரை கொள்ளாது, உருகி மிக*
*இன்னா வெயில் சிறகால் மறைக்கும் சேர்ப்ப! நீ*
*மன்னா வரவு மற!*

*உன் நாட்டுப் பறவைகளும் குடியும் குடித்தனமுமாக வாழ முற்படுகையில், அது போல நீயும் தலைவியை மணந்து அவளுடன் தங்கிவிடுவாயாக எனத் தோழி தலைவனிடம் கூறுகிறாள்.*
*மணம் பொருந்திய முள்ளையுடைய தாழைமரத்தில் தோன்றியுள்ள நீண்ட மொட்டுக்களை, தம்முடைய குஞ்சுகள் என்று கருதி, நாரைகள் தாம் கொண்டுவந்த இரையினை அந்த மொட்டுக்களின் வாயிலே ஊட்டிவிட்டு தாம் உண்ணாது, மிகவும் மனம் நெகிழ்ந்து, அவற்றின் மீது படும் எரிக்கும் கொடிய வெய்யிலைத் தனது சிறகுகளால் மறைத்துப் பாதுகாக்கும் கடற்கரைப் பகுதியின் தலைவனே, நிலையற்ற வகையில் நீ மீண்டும் மீண்டும் தலைவியைச் சந்திக்க வந்து செல்வதை மறந்துவிடுவாயாக (நீ தலைவியை மணந்து அவளுடன் தங்கிவிடுவாயாக எனத் தோழி தலைவனிடம் கூறுகிறாள்).*

*விரை வாய்த்த முட்டாழையினது நீண் முகையைக் குஞ்சு என்று கருதிக் குருவிகள் அம்முகை வாயிலே இரையைப் பெய்து தாம் அவ்விரையைக் கொள்ளாது உருகி மிக வின்னாத வெயிலைத் தஞ் சிறகால் மறைக்குஞ் சேர்ப்பை யுடையானே! நீ இங்கு வரும்நிலையாத வரவினை மறந்து நிலைக்கும் வரவினைச்செய்வாயாக.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"நாரை, தாழையின் மொட்டுகளைத் தன் குஞ்சுகள் என்று எண்ணி, தாம் கொண்டு வந்த இரையை அவைகளுக்குப் புகட்டும், அவை உண்ணாததைக் கண்டு வருந்தி, அவற்றைச் சூரியன் கதிர்கள் படாதபடி சிறகால் பாதுகாக்கும். இத்தகைய நாட்டை உடையவனே! நீ வந்து போவதை மறப்பாயாக. நிலையான வரவை மேற்கொள்வாயாக!" என்று தோழி வரைவு கடாயது.(பால சங்கரன் உரை)*

*37. தோழி வரைவு கடாயது*

*ஓதநீர் வேலி யுரைகடியாய்ப் பாக்கத்தார்*
*காதனீர் வாராமை கண்ணோக்கி - யோதநீ*
*ரன்றறியு மாதலால் வாரா தலரொழிய*
*மன்றறியக் கொள்ளீர் வரைந்து.*

*சொற்பிரிப்பு:*
*ஓத நீர் வேலி உரை கடியாப் பாக்கத்தார்,*
*காதல், நீர் வாராமை கண் நோக்கி, ஓத நீர்*
*அன்று அறியும்; ஆதலால், வாராது, அலர் ஒழிய,*
*மன்று அறியக் கொள்ளீர், வரைந்து.*

*தலைவிக்குத் துன்பம் நீங்குமாறு நீ அளித்த வாக்குறுதிக்குக் கடல் சான்றாக உள்ளது. அவளை ஊரார் அலர் தூற்றாதவாறு மணம் செய்து கொள்வாயாக என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்.*
*அன்பினால் தலைவியின் கண்களில் கண்ணீர் வராதவாறு, கண்களால் உற்றுநோக்கி முன்னர் நீ அவளிடம் கூறிய உறுதிமொழிகளைக் கடல்நீர் சான்றாக இருந்து நன்கறியும். ஆதலால், அலைகளையுடைய கடலினைப் பாதுகாவலாகக்கொண்ட கடற்கரை ஊரார் அலர் மொழிகளால் கடிந்து சொல்லாமல் இருக்குமாறு , பிறர்த் தூற்ற வாய்ப்பளிக்காது, சுற்றத்தார் அறிந்து கொள்ளும் வகையில் தலைவியை மணம் புரிந்து கொள்வீராக. (என்று தோழி தலைவனிடம் கூறினாள்.)*

*விரை வாய்த்த முட்டாழையினது நீண் முகையைக் குஞ்சு என்று கருதிக் குருவிகள் அம்முகை வாயிலே இரையைப் பெய்து தாம் அவ்விரையைக் கொள்ளாது உருகி மிக வின்னாத வெயிலைத் தஞ் சிறகால் மறைக்குஞ் சேர்ப்பை யுடையானே! நீ இங்கு வரும்நிலையாத வரவினை மறந்து நிலைக்கும் வரவினைச்செய்வாயாக.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*தோழி தலைவனை நோக்கி, "தலைவ! முன்னம் நீ செய்த, உறுதி மொழிகளை அலைகளையுடைய கடல் நீர் அறியும். உம்மேல் உள்ள அன்பால் துன்பம் அடைந்து இவளுடைய கண்கள் நீர் வரப் பெறாமலும் உள்ளதை, உம் கண்களால் இவள் அடைந்த வேறுபாட்டை உற்றுப் பார்த்து இங்ஙனம் வந்து கொண்டிராமல் பழிச் சொற்கள் நீங்குமாறு உறவினரான கூட்டத்தவர் அறிய இவளை மணந்து கொள்வீராக!" என்று உரைத்தான்.(பால சங்கரன் உரை)*

*38. காமம் மிக்க கழிபடர் கிளவி*

*மாக்கடல்சேர் வெண்மணற் றண்கானற் பாய்திரைசேர்*
*மாக்கடல்சேர் தண்பரப்பன் மார்பணங்கா - மாக்கடலே!*
*என்போலத் துஞ்சா யிதுசெய்தார் யாருரையா*
*யென்போலுந் துன்ப நினக்கு.*

*சொற்பிரிப்பு:*
*மாக் கடல் சேர் வெண் மணல் தண் கானல் பாய் திரை சேர்*
*மாக் கடல் சேர் தண் பரப்பன் மார்பு அணங்கா மாக் கடலே!*
*என் போலத் துஞ்சாய்; இது செய்தார் யார்-உரையாய்!-*
*என்போலும் துன்பம் நினக்கு?*

*தலைவனின் நினைவால் உறக்கமின்றித் தவிக்கும் என் நிலையைப் போல உறங்காமல் அலைமோதும் இத்துன்பத்தை உனக்குக் கொடுத்தவர் யார் கடலே? என்று தலைவி கடலினை நோக்கிக் கேட்கிறாள்.*
*பெருங்கடலினை வந்து சேர்ந்த, வெண்மையான மணலினையுடைய குளிர்ந்த கடற்கரைச் சோலையிடத்தே வந்து மோதும் அலைகளோடு கூடிய பெரிய கடலினைச் சார்ந்த குளிர்ந்த இடத்தையுடைய தலைவனது பரந்த மார்பு கண்டு வருத்தமுறாத பெரிய கடலே! என்னைப் போல உறக்கம் வாராது நீ ஏன் அலைமோதுகிறாய். நான் படும் துன்பத்தைப் போன்ற இந்த உறங்கா நிலையாகிய துன்பத்தை உனக்குக் கொடுத்தவர் யாரென்று சொல்வாயாக (என்று தலைவி கடலை நோக்கிக்கூறினாள்.)*

*பெருங்கடலினானே வந்து சேர்ந்த வெண் மணற் றண் கானலின்கண் வந்து பரவாநின்ற திரை சேர்ந்த மாக்கடலைச் சேர்ந்த தண்பரப்பினை யுடையான் மார்பினான் வருத்தப்படாத பெருங்கடலே! என்னைப் போலக் கண்டுஞ்சுகின்றிலை; இக் கண்டுஞ்சாமையைச் செய்கின்ற என்போலுந் துன்பத்தை நினக்குச் செய்தார் யாவர்சொல்லாய்?(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"பெரிய கடலைச் சேர்ந்த துறையையுடைய தலைவனின் மார்பாலே வருத்தம் அடையாத பெருங்கடலே! என்னைப் போன்று நீ உறங்காது இருக்கின்றாய்! என் துன்பத்தைப் போன்ற கொடுமையினை உனக்குச் செய்தவர் யார்? சொல்வாயாக!" எனக் கடலைப் பார்த்து தலைவி வினவினாள்.(பால சங்கரன் உரை)*

*39. நொதுமலர் வரைந்து புகுந்த பருவத்து, தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது*

*தந்தார்க்கே யாமாற் றடமென்றோ ளின்னநாள்*
*வந்தார்க்கே யாமென்பார் வாய்காண்பாம் - வந்தார்க்கே*
*காவா விளமணற் றண்கழிக் கானல்வாய்ப்*
*பூவா விளஞாழற் போது.*

*சொற்பிரிப்பு:*
*தந்தார்க்கே ஆமால், தட மென் தோள்-இன்ன நாள்*
*வந்தார்க்கே ஆம் என்பார் வாய் காண்பாம்;-வந்தார்க்கே*
*காவா இள மணல் தண் கழிக் கானல்வாய்ப்*
*பூவா இள ஞாழல் போது.*

*கடற்கரைச் சோலையில் தலைவிக்கு ஞாழல் பூவினை தந்து சென்ற தலைவனே தலைவியின் மென்தோள்களை அடையத் தகுதி உடையவர், அவளை மணக்க விருப்பம் தெரிவித்து வரும் மற்ற அயலவர் அல்ல என்று தோழி செவிலித் தாயிடம் தலைவியின் காதல் குறித்துத் தெரிவிக்கிறாள்.*
*வந்தவர்க்கு நிழலினைக் கொடுத்துப் பாதுகாக்குமிடமாகிய, நுண்ணிதான மணல் பரவிய, குளிர்ந்த உப்பங்கழிகள் அருகில் உள்ள கடற்கரைச் சோலையிடத்திலே முதன் முதலாகப் பூத்த இளமையான ஞாழல் பூவினைப் பறித்துத் தந்து சென்ற தலைவனுக்கே தலைவியின் பெரிய மெல்லிய தோள்கள் உரியனவாம். இப்பொழுது, அவளை மணமுடிக்க விருப்பம் தெரிவித்து வந்தவர்க்குத்தான் தகுதியுடையன என்று சொல்பவர்களுடைய வாய் மொழியின் உறுதிப்பாடு எத்தகையது என்பதையும் பார்த்துவிடுவோம் (என்று தோழி செவிலியிடம் கூறினாள்.)*

*வந்து சேர்ந்தார்க்கு ஏமமாம் இளமணற் றண்கழிக் கானலிடத்து வந்து, முன்பு பூவாதே பூத்த இள ஞாழற் பூவினை இவட்குத் தந்தவர்க்கே யாமால், இவள் தடமென்றோள்; இந்நாள் வதுவை வரையப் புகுந்தார்க்கா மென்பாருடைய மெய்யுரையைக் காண்போம்.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"உப்பங்கழிகளைப் பக்கத்தில் கொண்ட கடற்கரைச் சோலையில் வந்து, முன்னர்ப் பூவாமல் அப்போதே மலர்ந்த இளைய கோங்கின் மலரை என் கையில் பறித்துத் தந்து போன தலைவர்க்கே தலைவியின் மென்மையான தோள்கள் தக்கவை. இப்போது மணம் பேசி வந்தார்க்குத் தகுதியுடையன என்று சொல்பவரின் வாய்ச் சொல்லின் உறுதியை எத்தகையது என உணர்வோம்!" எனத் தோழி செவிலித்தாயிடம் சொன்னாள்.(பால சங்கரன் உரை)*

*40. வலிதாகச் சொல்லிக் குறை நயப்பித்தது*

*தன்றுணையோ டாடு மலவனையுந் தானோக்கா*
*வின்றுணையோ டாட வியையுமோ - வின்றுணையோ*
*டாடினாய் நீயாயி னந்நோய்க்கென் னொந்தென்று*
*போயினான் சென்றான் புரிந்து.*

*சொற்பிரிப்பு:*
*தன் துணையோடு ஆடும் அலவனையும் தான் நோக்கா,*
*'இன் துணையோடு ஆட இயையுமோ? இன் துணையோடு*
*ஆடினாய் நீ ஆயின், அந் நோய்க்கு என் நொந்து? என்று*
*போயினான் சென்றான், புரிந்து.*

*துணையுடன் கூடிக்களிக்கும் நண்டே, எனது பிரிவுத்துயரை உன்னிடம் சொல்லி என்ன பயன் என மனம் வெதும்புகிறான் தலைவன்.*
*தனது பெண் துணையோடு இன்புற்று விளையாடும் ஆண் நண்டினையும் (என்னையும்) தலைவன் பார்த்து, என் இனிய துணைவியாகிய தலைவியோடு இவ்வாறு கூடிக் களிக்க எனக்கும் வாய்ப்பு கிடைக்குமோ? என்று தனக்குத் தானே பேசிக் கொண்ட தலைவன்; அந்த ஆண் நண்டினை நோக்கி நீ உனது இனிய துணையாகிய பெட்டை நண்டுடன் இன்புற்று விளையாடுதலாகிய ஒன்றையே செய்திருப்பாயானால் பிரிவுத்துன்பம் என்ன என்பதனை அறிந்திருக்கமாட்டாய், என் பிரிவுத்துயரை உன்னிடம் கூறுவதால் என்ன பயன்? என நண்டிடம் பேசுவது போலத் தலைவன் தனது கருத்தைத் தோழியின் கவனத்திற்குச் சொல்லிவிட்டுப் புரிந்து கொண்டவனாய் மனம் வெறுத்துவிலகிச் சென்றுவிட்டான் (என்று தோழி தலைவியிடம் கூறினாள்.)*

*தன் பெடை ஞெண்டொடு இன்புற்று விளையாடும் அலவனையும் என்னையும் பார்த்து, 'என்னுடைய இனிய துணையோடு இப்பெற்றி போல ஆட எனக்குக் கூடுமோ? நின்னுடைய இன்றுணையாகிய பெடை ஞெண்டுடனே விளையாடினாய் நீயாயிற் பிரிவுத் துன்பம் அறியா யாதலான், அப்பெற்றிப்பட்ட நினக்கு என் பிரிவுத்துன்பத்தைச் சொல்லி நொந்து என்னை,' என்று சொல்லிப் போயினவன் பின்னை வந்து மேவித் தோன்றுகின்றிலன், என் செய்தானோ!(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"தலைவன் ஆண் நண்டைப் பார்த்து, 'நீ உன் பெண் நண்டுடன் விளையாடுவது ஒன்றையே செய்திருப்பாயானால், பிரிவுத் துன்பத்தை நீ அறிய மாட்டாய்! எனவே பிரிவுத் துன்பத்தை எடுத்துச் சொல்வதில் என்ன பயன் உண்டு' எனக் கூறி அகன்றுவிட்டான்" என்று தோழி தலைவியிடம் கூறியது.(பால சங்கரன் உரை)*

*41. தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழியால் சொல் எடுக்கப்பட்டு, தலைமகள் தனது ஆற்றாமையால் சொல்லியது*

*உருகுமா லுள்ள மொருநாளு மன்றாற்*
*பெருகுமா னம்மலர் பேணப் - பெருகா*
*வொருங்குவான் மின்னோ டுருமுடைத்தாய்ப் பெய்வா*
*னெருங்குவான் போல நெகிழ்ந்து.*

*சொற்பிரிப்பு:*
*உருகுமால் உள்ளம், ஒரு நாளும் அன்றால்;*
*பெருகுமால், நம் அலர் பேண,-பெருகா*
*ஒருங்கு வால் மின்னோடு, உரும் உடைத்தாய், பெய்வான்,*
*நெருங்கு வான் போல, நெகிழ்ந்து.*

*நம் மீது கூறப்படும் அலர் வளர்ந்து, மழைமேகம் மூளுவது போல எங்கும் சூழ்ந்து மின்னல் இடியுடன் பொழிவது போல, பலநாளாக வருத்துகிறது என்று தலைவி தனது ஆற்றாமையை வெளிப்படுத்துகிறாள்.*
*நம்மீது கூறப்படும் பழிச் சொற்கள் பிறர் விரும்பும் வண்ணம் பெருகி ஒன்றாக வெள்ளிய மின்னல்களுடன் கூடிய இடிகளையும் கொண்டதாக, பெய்தற்கு வேண்டி நாற்புறமும் சூழ்கின்ற மழையினைப் போன்று கசிந்து பொழிகின்றது. ஆதலால், ஒருநாள் என்று இல்லாமல் பல நாட்களும் வருந்துகிறது நம் மனம் (என்று தலைவி தோழியிடம் தனது ஆற்றாமையை வெளிப்படுத்துகிறாள்.)*

*ஒருங்கு பெருகி வாலிய மின்னோடு உருமுடைத்தாகிப் பெய்யவேண்டி நெருங்குகின்ற மழை போலப் பெருகாநின்றது,ஏதிலார் விரும்பும்படி நம் அலரானது; ஆதலான் நம்முள்ளம் ஒருநாளுமன்றியே பலநாளும் நெகிழ்ந்து உருகாநின்றது.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"ஒன்றாய்ப் பெருகி வெண்மையான மின்னலுடன் இடிகளையும் கொண்டு பெய்வதற்கு நான்கு பக்கங்களிலும் சூழ்கின்ற மழையைப் போல அயலவர் விரும்புமாறு கூறப்பட்ட பழிச் சொற்கள் பெருகுகின்றன. எனவே பல நாட்கள் நம் உள்ளம் வருந்துகின்றது" என்று தலைவி கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*42. நயப்பு; கையுறையும் ஆம்*

*கவளக் களிப்பியன்மால் யானைசிற் றாளி*
*தவழத்தா னில்லா ததுபோற் - பவளக்*
*கடிகை யிடைமுத்தங் காண்டொறு நில்லா*
*தொடிகை யிடைமுத்தந் தொக்கு.*

*சொற்பிரிப்பு:*
*கவளக் களிப்பு இயல் மால் யானை, சிற்றாளி*
*தவழ, தான் நில்லாததுபோல், பவளக்*
*கடிகையிடை முத்தம் காண்தொறும், நில்லா-*
*தொடி கையிடை முத்தம் தொக்கு.*

*தலைவியின் செவ்வாயின் முத்துப்பற்கள் முன்னர், அவளது கைவளையில் பதிக்கப்பட்டிருக்கும் உண்மையான முத்துக்கள் போட்டிப் போட இயலாமல் தோற்கும் எனத் தலைவன் தலைவியின் அழகைப் போற்றுகிறான்.*
*உணவு உண்டு மகிழ்ந்திருக்கும் மதம் கொண்ட யானையானது, தளர் நடை பருவத்துச் சிங்கக் குட்டியிடமும் அதன் எதிர் நிற்கத் துணியாது. அதனைப் போன்று, தலைவியின் பவளம் ஒத்த வாய் இதழ்களின் நடுவே அமைந்திருக்கும் முத்துப் பற்களைக் காணும் பொழுதெல்லாம் தலைவியின் அவளது கைகளிலணிந்துள்ள வளைகளில் பதிக்கப்பட்ட முத்துக்கள் ஒன்று கூடி நின்றாலும் ஒப்புமையில் நிற்கவியலாது தோற்றுவிடும் (என்று தலைவன் தோழியிடம் கூறினான்.)*

*கவளத்தையுடைய களிப்பியன்ற மால் யானை, அரிமாவின் குருளைதான் நடைகற்கும் பருவத்தும் அஞ்சி யெதிர் நில்லாதது போல, இவளுடைய அதரமாகிய பவழத்துண்டத்தினிடை யரும்பும் முறுவலாகிய முத்தங்களைக் காணுந்தொறுந் தோற்று நில்லா,இவள் கையிடைத் தொடியின்கண் அழுத்திய முத்தங்கள்திரண்டு.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"உணவை உண்டதால் கிளர்ச்சியான தன்மைகொண்ட மதம் மிக்க யானையானது யாளியின் சிறு குட்டி நடை கற்கும் பருவத்திலும் அதற்கு அஞ்சி எதிர் நிற்காது. அது போன்று பவளத் துண்டமான வாய் இதழ்களின் இடையே தோன்றும் பற்களான முத்துக்களைக் காணும் வேளைகளில் எல்லாம், தலைவியின் கையில் உள்ள வளையல்களில் பதிக்கப்பட்டு உள்ள முத்துக்கள் ஒன்று சேர்ந்தும் ஒப்புமையில் தோற்கும்" எனத் தலைவன் தோழியிடம் கூறியது. (பால சங்கரன் உரை)*

*43. தலைமகனைத் தோழி வரைவு கடாயது*

*கடற்கோ டிருமருப்புக் கால்பாக னாக*
*வடற்கோட் டியானை திரையா - வுடற்றிக்*
*கரைபாய்நீள் சேர்ப்ப! கனையிருள் வாரல்*
*வரைவாய்நீ யாகவே வா.*

*சொற்பிரிப்பு:*
*கடற் கோடு இரு மருப்பு, கால் பாகன் ஆக,*
*அடற் கோட்டு யானை திரையா, உடற்றி,*
*கரை பாய் நீள் சேர்ப்ப! கனை இருள் வாரல்!*
*வரைவாய், நீ, ஆகவே வா!*

*தலைவனே இரவில் தலைவியைத் தேடி வாராதே, வந்ததால் அவளை மணமுடிக்கும் நோக்கில் மட்டும் வருவாயாக (கனை இருள் வாரல்!) என்கிறாள் தோழி.*
*கடலில் விளைந்த சங்குகள் இரு பெரும் தந்தங்களாகவும், வீசுகின்ற காற்றானது யானைப் பாகனாகவும், கடல் அலையானது கொல்லுகின்ற தந்தங்களை உடைய யானையாகவும் கடற்கரையில் பாய்ந்து குத்தி வருத்தும்படியான, பெரிய நீண்ட கடற்கரை நகரின் தலைவனே! மிகுந்த இருளையுடைய இரவுப் பொழுதில் வாராதிருப்பாயாக. அவ்வாறு வர விரும்பினால் தலைவியை மணம் செய்து கொள்ளும் நோக்கில் மட்டும் வருவாயாக (என்று தோழி தலைவனிடம் கூறினாள்.)*

*கடலின்கட் சங்குகளே பெரிய மருப்பாக, காற்றே பாகனாக, திரையே அடற் கோட்டி யானையாக வருத்திக் கரையைக் குத்துகின்ற நீண்ட சேர்ப்பையுடையானே! செறிந்த இருளின்கண் வாராதொழிக; வருதலை வேண்டின், நீ வரைவா யாகவே வா.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"கடல் சங்கு பெரிய மருப்பாகவும், காற்று பாகனாகவும், அலைகள் யானையாகவும் அமைந்து கடற்கரையினைச் சுற்றி வருத்தும்படியான நீண்ட கடற்கரைத் தலைவனே! மிகுந்த இருளை உடைய இரவில் நீ வராதிருக்க வேண்டும். வர விரும்பினால் மணத்துக்குரியனாகவே வருக!" எனத் தோழி தலைவனை வரைவு கடாயது.(பால சங்கரன் உரை)*

*44. பகற்குறியிடம் காட்டியது*

*கடும்புலால் புன்னை கடியுந் துறைவ!*
*படும்புலாற் புட்கடிவான் புக்க - தடம்புலாந்*
*தாழைமா ஞாழற் றதைந்துயர்ந்த தாய்பொழி*
*லேழைமா னோக்கி யிடம்.*

*சொற்பிரிப்பு:*
*கடும் புலால் புன்னை கடியும் துறைவ!*
*படும் புலால் புள் கடிவான் புக்க, தடம் புல் ஆம்*
*தாழை, மா ஞாழல், ததைந்து உயர்ந்த தாழ் பொழில்,*
*ஏழை மான் நோக்கி இடம்.*

*தலைவனே உயர்ந்த தாழை மரங்களும் ஞாழல் மரங்களும் அடர்ந்த சோலை தலைவி விளையாடும் இடம், அங்கு அவளைச் சந்திக்க வாய்ப்புள்ளது எனத் தோழி குறிப்பு கொடுக்கிறாள்.*
*மிகுந்த புலால் நாற்றத்தைப் புன்னை மலர்கள் தமது நறுமணத்தால் நீக்கும் துறைமுகத்திற்குரிய தலைவனே! உலர்த்துவதற்காகக் காயவைத்துள்ள மீன்களைக் கவரவரும் பறவைகளை விரட்டும் பொழுது அவை சென்றடையும், பெரிய புல் இனத்தைச் சார்ந்ததான, தாழை மரங்களும், பெரிய ஞாழல் என்றழைக்கப்படும் கோங்கு மரங்களும், நெருங்கி, உயர்ந்து வளர்ந்து தங்குதற்குரிய பூஞ்சோலையானது வேடுவர்களாற் சூழப்பட்ட மான் போன்ற மருண்ட பார்வையினையுடைய எம் தலைவி எங்களுடன் விளையாடுமிடமாம் (என்று தோழி தலைவனிடம் கூறினாள்.)*

*மிக்க புலானாற்றத்தைப் புன்னைப் பூக்கள் நீக்குந் துறைவனே! புலாலிற் பட்ட புள்ளைக் கடிய வேண்டிப் புக்க ஏழை மானோக்கி விளையாடுமிடம், பெரிய புல்லாகிய தாழையும் ஞாழலும் நெருங்கி யுயர்ந்ததாழ்பொழில்.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"புலால் நாற்றத்தைத் தமது நறுமணத்தால் நீக்கும் புன்னை மலர்கள் நிரம்பிய துறைமுகத்திற்குரிய தலைவனே! தாழையும், கோங்கு மரங்களும் நெருங்கி வளரும் பூஞ்சோலை, மானைப் போன்ற கண்களை உடைய தலைவியின் விளையாடும் இடமாகும்" என்று தோழி தலைவனுக்குப் பகலில் தலைவியுடன் கூடும் இடத்தைக் கூறுதல். (பால சங்கரன் உரை)*

*45. தலைமகன் சொல்லிய குறி வழி அறிந்து, தலைமகளைக் கண்ட பாங்கன் தலைமகனை வியந்து சொல்லியது*

*தாழை தவழ்ந்துலாம் வெண்மணற் றண்கானன்*
*மாழை நுளையர் மடமக - ளேழை*
*யிணைநாடி லில்லா விருந்தடங்கண் கண்டுந்*
*துணைநாடி னன்றோ மிலன்.*

*சொற்பிரிப்பு:*
*தாழை தவழ்ந்து உலாம் வெண் மணல் தண் கானல்,*
*மாழை நுளையர் மட மகள், ஏழை,*
*இணை நாடில் இல்லா, இருந் தடங் கண் கண்டும்,*
*துணை நாடினன்; தோம் இலன்!*

*ஒப்புமை கூற இயலாத இத்தகைய சிறந்த அழகியான தலைவியைக் கண்ட பிறகும் அவளை விட்டு தனது உறவுகளை நாடி தனது இடத்திற்குத் திரும்பிய தலைவன் பண்பில் சிறந்தவன்தான் என்று தோழன் வியக்கிறான்.*
*தாழை மரங்கள் படர்ந்து பரவி நிற்கும், வெண் மணலும் குளிர்ந்த கடற்கரைச் சோலையும் கொண்ட அழகிய நெய்தல் நிலத்தின் தலைவனின் மகளாகிய இந்த இள நங்கை, அவளுக்கு நிகராக ஓர் ஒப்புமை காட்ட இயலாதவள். இணையற்ற அவளது இரு பெரிய கண்களைப் பார்த்த பின்னரும் கூட பிற நட்பைத் தேடி வந்து சேர்ந்தவனாகிய என் தலைவன், சிறிதுங் குற்றங் கூற இயலாப் பண்பாளன் (என்று தோழன் தலைவன் மன உறுதி கண்டு வியந்து கூறுகிறான்)*

*தாழைகள் படர்ந்து பரக்கும் வெண்மணலையுடைய தண்கானலின்கண் வாழும் மாழைமையையுடைய நுளையர் மடமகளாகிய இவ்வேழையுடைய ஒப்புமை நாடிலில்லாத இருந்தடங்கண் கண்டுந் துணையை நாடிய எம்பெருமான் ஒருகுற்றமு மிலன்.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"தாழை மரங்கள் படர்ந்து பரவி நிற்கும் வெண்மணல் நிரம்பிய சோலையில் பரதவரின் இளைய மகளான தலைவியின் பார்வைக்கு ஒப்புமை இல்லை. பெரிய கண்களைப் பார்க்க நேர்ந்தும் தோழனான என்னைத் திரும்பி வந்து சேர்ந்தவனான தலைவன் குற்றம் சிறிதும் இல்லாதவன்" என்று பாங்கன் கூறுதல்.(பால சங்கரன் உரை)*

*46. தோழி நெறி விலக்கி, வரைவு கடாயது*

*தந்தாயல் வேண்டாவோர் நாட்கேட்டுத் தாழாது*
*வந்தானீ யெய்துதல் வாயான்மற் - றெந்தாய்!*
*மறிமகர வார்குழையாள் வாழாணீ வார*
*லெறிமகரங் கொட்கு மிரா.*

*சொற்பிரிப்பு:*
*தந்து, ஆயல் வேண்டா; ஓர் நாள் கேட்டு, தாழாது*
*வந்தால், நீ எய்துதல் வாயால் மற்று; எந்தாய்!*
*மறி மகர வார் குழையாள் வாழாள்; நீ வாரல்,*
*எறி மகரம் கொட்கும் இரா.*

*தலைவியைப் பெண்கேட்டு வந்து விரைவில் மணம் முடிப்பாய் தலைவனே, அதை விட்டு இடர் நிறைந்த இரவில் அவளைக் காண வருவதைத் தவிர்ப்பாயாக என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்.*
*இது குறித்து எண்ணி ஆய்வு செய்து காலத்தை வீணாக்க வேண்டாம், தக்க நாள் ஒன்றைத் தேர்வு செய்து, காலம் தாழத்தாது பெண் கேட்டு வந்தால், நீ தலைவியைத் துணையாக அடையும் வாய்ப்பு உமக்குக் கிட்டும் தலைவனே எம்பெருமானே! சுறாமீனின் குட்டி வடிவில் வார்க்கப்பட்ட மகரக்குழைகளைக் காதணிகளாக அணிந்துள்ள தலைவி உயிர் வாழமாட்டாள் உமக்கு ஒன்று நேருமாயின், இவ்வாறாகக் கரைவழியே செல்பவர்களைத் தாக்கும் சுறா மீன்கள் கழிகளில் சுழன்று திரியும் இரவுப் பொழுதில் நீ இனி அவளைக் காணவிரும்பி வாராதிருப்பாயாக (என்று தலைவனிடம் தோழி கூறினாள்).*

*சிலரைக் கொணர்ந்து ஆராயவேண்டுவதில்லை; நல்லதொரு நாட்கேட்டு நீட்டியாதே நீ வரைதற்கு வந்தால் இவளை எய்துதல் மெய்ம்மையால்: எம்மிறைவனே! எறிசுறாக்கள் கழியெங்குஞ் சுழலு மிராவின்கண் வாரல்; வரின், மறிமகர வார்குழையாள் உயிர் வாழாள்.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"நல்ல நாளை ஆராய்ந்து காலம் தாழ்த்தாது நீ மணம் பேசி வரின், நிச்சயமாய் இவளை நீ அடைதல் கூடும். கரை வழியே செல்பவரைத் தாக்கும் சுறா மீன்கள் திரியும் இரவில் வாராதிருப்பாயாக! நீ மீண்டும் வருவாயானால், சிறிய சுறா மீனைப் போன்று வார்க்கப்பட்ட காதணிகளை உடைய தலைவி உயிர் வாழ மாட்டாள்" எனக் கூறினாள். (தோழி வரைவு கடாயது)(பால சங்கரன் உரை)*

*47. பாங்கன் தலைமகனைக் கண்டு, தலைமகளை வியந்து சொல்லியது*

*பண்ணாது பண்மேற்றே பாடுங் கழிக்கான*
*லெண்ணாது கண்டார்க்கே யேரணங்கா - லெண்ணாது*
*சாவார்சான் றாண்மை சலித்திலா மற்றிவளைக்*
*காவார் கயிறுரீ இவிட் டார்.*

*சொற்பிரிப்பு:*
*பண்ணாது, பண்மேல் தேன் பாடும் கழிக் கானல்,*
*எண்ணாது கண்டார்க்கே ஏர் அணங்கால்; எண்ணாது*
*சாவார் சான்றாண்மை சலித்திலா மற்று இவளைக்*
*காவார், கயிறுரீஇ விட்டார்.*

*அழகிய கடற்கரைச் சோலையினிலே ஓர் அணங்கு போலத் தோற்றமளிக்கும் தலைவியை அவர் குடும்பத்தார் பிறர் துன்புறுவாரே என்ற கருத்தின்றி கட்டவிழ்த்து விட்டுள்ளார்கள் என்று தோழன் தலைவனிடம் தலைவியின் சிறப்பைப் பாராட்டிக் கூறுகிறான்.*
*மீட்டாமலே மேன்மையான இசையை தேன்வண்டுகள் இசைக்கும்படியான கடற்கரைகளையுடைய கடற்கரைச் சோலைதனில், ஒரு பொருட்டாக அக்கறை செலுத்தாதவர்களும் கூட காண நேர்ந்தால் இயற்கையழகு நிறைந்த தெய்வமாகக் காட்சி அளிக்கக் கூடியவள் தலைவி. இவ்வுலக வாழ்க்கையின் அருமையை உணராது மறைந்து விடுபவர்களின் மன உறுதிப்பாட்டின் முன்னும், சளைக்காமல் உறுதியுடன் இருந்த இத்தலைவியைக் காக்கும் எண்ணத்தைக் கைவிட்டு அவளது குடும்பத்தார் அவளைக் கட்டவிழ்த்து விட்டுள்ளார்கள் (என்று பாங்கன் தலைவி குறித்து வியந்து தலைவனிடத்தில் கூறினான்)*

*யாழினைப் பண்ணாது பண்மேற் சேரத் தேன்கள் பாடுங் கழிக்கானலின்கண் ஆராயாதே வந்து கண்டார்க்கே அழகிய தெய்வங்களாம்; ஆதலான், அறிவினா னாராயாது இறந்துபடுவார் சான்றாண்மையின் கண் வேறுபட்டிலா மற்றிவளைக் காவாது கயிறுரீஇ விட்டார்சான்றாண்மையின் வேறு பட்டார்.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"தலைவியின் பெற்றோர் தம் வீட்டில் வைத்துப் பாதுகாக்காமல் சோலையில், கொல்லேற்றினைக் கயிற்றை அறுத்துப் பலருக்குத் தீமை உண்டாக்குமாறு விட்டதுபோல், தலைவியைப் போகவிட்டு விட்டனர்" எனத் தலைவனிடம் பாங்கன் கூறியது. (பால சங்கரன் உரை)*

*48. தலைமகற்கு இரவுக்குறி மறுத்தது*

*திரைமேற்போந் தெஞ்சிய தெண்கழிக் கானல்*
*விரைமேவும் பாக்கம் விளக்காக் - கரைமேல்*
*விடுவாய்ப் பசும்புற விப்பிகான் முத்தம்*
*படுவா யிருளகற்றும் பாத்து.*

*சொற்பிரிப்பு:*
*திரை மேல் போந்து எஞ்சிய தணெ் கழிக் கானல்*
*விரை மேவும் பாக்கம் விளக்கா, கரைமேல்,*
*விடுவாய்ப் பசும் புற இப்பி கால் முத்தம்*
*படு வாய் இருள் அகற்றும், பாத்து.*

*தலைவியினை இரவினில் காணவருவதைப் பிறர் காணநேரிட்டால் அலர் உண்டாகும் என்று தலைவனை இரவில் வர வேண்டாம் என்று தோழி அறிவுறுத்துகிறாள்.*
*தெளிந்த கடற்கழிகளையும் சோலைகளையும் கொண்ட நறுமணம் மிக்க பட்டினத்திற்குக் கரையோரங்களில், அலைகளால் கொணர்ந்து கரையில் ஒதுக்கப்பட்ட விளக்குகளாக அமையும் பிளந்த வாயினையும், பசிய வெளிப்பக்கத்தினையும் கொண்டுள்ள சிப்பிகள் வெளிவிட்ட ஒளிமிக்க நல்முத்துக்கள். அவை இருள்படு இடங்களில் எல்லாம் அவ்விருளைப் பிரித்துச் சிதறடித்து நீக்கும் (ஆதலால் நீ இரவில் வருவது அவ்வெளிச்சம் காரணமாகப் பலரும் அறியக் கூடிய வகையில் அமையும் - என்று தலைவனிடம் தலைவியைக் காண வருவதைக் கைவிடுமாறு தோழி கூறுகிறாள்)*

*திரைமேற் போந்து கரைமே லொழிந்த விடு வாயையும் பசும்புறத்தையுமுடைய இப்பி கான்ற முத்தம், தெண்கழிக்கானலின் விரைமேவும் பாக்கம் ஒளியுண்டாம் வகைஇருள்படுமிட மெல்லாம் அவ்விருளைப் பகுத்தகற்றும்.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"அலைகளுக்கு மேல் வந்து கரைகளில் ஒதுங்கி நின்ற முத்துக்கள் மணம் பொருந்திய பாக்கத்துக்கு விளக்குகளாய் அமைந்து இருளை நீக்கும். எனவே பலரும் நின் வருகையை அறிந்து பழி கூறுவர்" என்று தோழி தலைவனைப் பார்த்துக் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*49. தலைமகற்கு இரவுக்குறி மறுத்தது*

*எங்கு வருதி யிருங்கழித் தண்சேர்ப்ப!*
*பொங்கு திரையுதைப்பப் போந்தொழிந்த - சங்கு*
*நரன்றுயிர்த்த நித்தில நள்ளிருள்கால் சீக்கும்*
*வரன்றுயிர்த்த பாக்கத்து வந்து.*

*சொற்பிரிப்பு:*
*எங்கு வருதி, இருங் கழித் தண் சேர்ப்ப!*
*பொங்கு திரை உதைப்பப் போந்து ஒழிந்த சங்கு*
*நரன்று உயிர்த்த நித்திலம் நள் இருள் கால் சீக்கும்;*
*வரன்று உயிர்த்த பாக்கத்து வந்து?*

*அலர் தவிர்க்க விரும்புவாயானால் இரவிலும் மக்கள் நடமாட்டம் உள்ள பட்டினத்தில் இரவில் தலைவியைக் காண வருதல் ஏற்புடையதல்ல எனத் தோழி தலைமகனிடம் மறுத்துரைக்கிறாள்*
*எது மறைவிடம் என்று எங்கு நீ வருவாய்? பெரிய உப்பங்கழிகளையுடைய குளிர்ந்த கடற்கரைத் தலைவனே! பொங்கி வரும் அலைகள் ஒதுக்கித் தள்ளக் கடற்கரையில் வந்து தங்கிய சங்குகள், ஒலியுடன் ஈன்ற முத்துக்கள் செறிந்த இருளினை விலக்கும். அவற்றை வாரிச் சென்று வாழ்க்கை நடத்தும் மக்கள் நிரம்பிய பட்டினத்திற்குள் நுழைந்து எங்குதான் வருவாய்? (என்று தோழி தலைவன் இரவில் வருவதைத் தவிர்க்கச் சொல்கிறாள்)*

*எவ்விடத்தானே வருவாய் இருங்கழித் தண் சேர்ப்பனே! பொங்கு திரைகளானே யுதைக்கப்பட்டுப் போந்து கரையின்கட்டடங்கிய சங்குகள் கதறிப் பொறையுயிர்த்த முத்தங்கள் செறிந்த இருளை இடங்களினின்றுஞ் சீயாநிற்கும்; திரைகொணர்ந்து போதவிட்டனவற்றைக் கண்டார் வரன்றாநின்றபாக்கத்தின்கண்.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"குளிர்ந்த கடற்கரைத் தலைவ! அலைகள் வெளியே தள்ளக் கரையில் வந்து பொருந்திய சங்குகள் ஒலித்துக் கொண்டு ஈன்ற முத்துகள், இருளைப் போக்கும். தலைவ எவ்விடத்தில் உள்ள மறைவைக் கொண்டு நீ வருவாய்? நின் வருகையை யாவரும் அறிவர். ஆதலால் இரவில் வரவேண்டா!" எனத் தோழி தலைவனுக்கு இரவுக் குறி விலக்கிக் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*50. தோழி வரைவு கடாயது*

*திமில்களி றாகத் திரைபறையாப் பல்புட்*
*டுயில்கெடத் தோன்றும் படையாத் - துயில்போற்*
*குறியா வரவொழிந்து கோலநீர்ச் சேர்ப்ப!*
*நெறியானீ கொள்வது நேர்.*

*சொற்பிரிப்பு:*
*திமில் களிறு ஆக, திரை பறையா, பல் புள்*
*துயில் கெடத் தோன்றும் படையா, துயில்போல்*
*குறியா வரவு ஒழிந்து, கோல நீர்ச் சேர்ப்ப!*
*நெறியால் நீ கொள்வது நேர்.*

*இரவில் வருவதை நிறுத்தி முறைப்படி தலைவியை மணமுடித்து உனது துணையாக்கிக் கொள்வதே உனது தகுதிக்குப் பொருத்தமான செய்கை என்று தோழி தலைவனுக்கு அறிவுறுத்துகிறாள்.*
*தோணியினை யானையாகவும், அலை ஓசையினை பறை ஓசையாகவும் பல கடற் பறவைகளின் உறக்கம் கெட்டு வெளிப்படுவது படையாகவும் கொண்டு; தூக்கக் கலக்கத்தில் கண்ட கனவு போன்று விளங்கிக் கொள்ள முடியாத, வகையில் வருகின்ற உனது வரவை நிறுத்திவிடுவாய், அழகிய கடல்நீரைக் கொண்ட கடற்கரைத் தலைவனே! முறைப்படி தலைவியை மணமுடித்து உனது துணையாக்கிக் கொள்வதே உனது தகுதிக்குப் பொருத்தமான செய்கை (என்று தோழி தலைமகனிடம் கூறினாள்.)*

*திமிலே களிறாகத் திரையே பறையாகத் துயில் கெடத்தோன்றும் படை புட்களாக, கனாக் கண்டாற்போலத் தேறமுடியாத களவின்கட் டனியே வரும் வரவினை யொழிந்து, கோலநீர்ச் சேர்ப்பனே! நெறியானே வரைந்து இவளைக் கொள்வது நினக்குத் தகுதி.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"அழகான கடல் நீரையுடைய துறைத் தலைவனே! தோணியே யானையாகவும், அலைகள் பறையொலியாகவும், கடற் பறவைகளை உறக்கம் கெடும்படியாக வெளிப்படும் படையாகவும் கொண்டு கனாக் கண்டாற் போன்று களவு ஒழுக்கத்தில் தனியாய் வரும் வருகையானது நீங்கப் பெற்று, மணச் சடங்கு முறைப்படி நீ இவளை மணந்து கொள்வது உனக்குத் தகுதியானதாகும்" எனத் தோழி தலைவனைப் பார்த்துக் கூறினாள். (தோழி வரைவு கடாயது)(பால சங்கரன் உரை)*

## *51. தலைமகற்குத் தோழி குறை நேர்ந்து, பகற்குறியிடம் அறியச் சொல்லியது*

*கடும்புலால் வெண்மணற் கானலுறு மீன்கட்*
*படும்புலால் பார்த்தும் பகர்து - மடும்பெலாஞ்*
*சாலிகை போல்வலை சாலப் பலவுணங்கும்*
*பாலிகை பூக்கும் பயின்று.*

*சொற்பிரிப்பு:*
*கடும் புலால் வெண் மணல் கானல் உறு மீன்கண்*
*படும் புலால் பார்த்தும்; பகர்தும்; அடும்பு எலாம்-*
*சாலிகைபோல் வலை சாலப் பல உணங்கும்;-*
*பாலிகை பூக்கும் பயின்று.*

*கடற்கரைக் கானல் அருகில் கருவாடுகளை உலர்த்திக் காயவைத்துக் காவல் காத்துக்கொண்டிருக்கும் தலைவியைப் பகற்பொழுதில் அங்கு காணலாம் எனத் தோழி தலைவனுக்கு குறிப்பு கொடுக்கிறாள்.*
*அதிக புலால் நாற்றத்தைக் கொண்ட வெண்மையான மணல் கொண்ட கடற்கரைச் சோலையினை அடுத்து இருக்கும் இடத்தில், மீன்களைக் கருவாடுகளாகக் காயவைத்து அவற்றைப் பறவைகள் கொத்திச் செல்லாமல் காவல் காத்துக் கொண்டும், அவற்றை விற்பனை செய்து கொண்டும் இருப்போம். அவ்விடத்தில் அடப்பங் கொடிகளெல்லாம் முளைப்பாலிகையினைப் போல ஒன்றாகக் கூடி மலர்ந்திருக்கும், மிகுந்த பல வலைகள் மெய்காக்கும் கவசங்களை விரித்து வைத்தாற் போல அவற்றின்மேல் காயவைக்கப்பட்டிருக்கும். அவ்விடமே பகலில் தலைவி இருக்கக் கூடிய இடம் (என்று தோழி தலைவனுக்குக் குறிப்பாகக் கூறினாள்.)*

*கடும்புலாலையுடைய வெண்மணற் றண்கழிக் கானலின்கண் இருந்து, யாங்கள் ஆங்கடுத்த மீனாகிய படு புலாலின்கட் புட்டிரியாமற் பார்ப்பேம்; அவற்றை விற்பதுஞ் செய்வேம்; அக்கானலின்கண் அடும்பெல்லாம் பாலிகை போலப் பூக்கும்; சாலிகை விரிந்தாற்போல வலைகளுமஉணங்கும்.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"கருவாட்டைப் பறவைகள் கவராமல் பார்த்துக் கொண்டிருப்போம். அங்குப் பக்கத்தில் உள்ள அடப்பம் கொடிகள் எல்லாம், முளைப்பாலிகைகள் போன்று ஒன்றாகக் கூடி பூத்துக் காணப்பெறும். மிகப் பல வலைகள், உடற் கவசங்களை விரித்து வைத்தாற் போன்று அவற்றின் மீது உலர வைக்கப்பட்டிருக்கும். அத்தகைய இடமே பகற்குறியிடமாகும்" என்று தோழி தலைவனை நோக்கிச் சொன்னாள்.(பால சங்கரன் உரை)*

*52. தலைமகனைத் தோழி வரைவு கடாயது*

*திரைபாக னாகத் திமில்களி றாகக்*
*கரைசேர்ந்த கானல் படையா - விரையாது*
*வேந்து கிளர்ந்தன்ன வேலைநீர்ச் சேர்ப்ப! நா*
*ளாய்ந்து வரைத லறம்.*

*சொற்பிரிப்பு:*
*திரை பாகன் ஆக, திமில் களிறு ஆக,*
*கரை சேர்ந்த கானல் படையா, விரையாது-*
*வேந்து கிளர்ந்தன்ன வேலை நீர்ச் சேர்ப்ப!-நாள்*
*ஆய்ந்து, வரைதல் அறம்.*

*நாள் கடத்தாது, தக்க நாள் ஒன்றில் தலைவியை மணமுடித்து இல்லறம் மேற்கொள்வதே உன் தகுதிக்கேற்ற நல்லொழுக்கம் எனத் தோழி தலைவனுக்கு உரைக்கிறாள்.*
*அலைகள் யானைப் பாகனாகவும், தோணிகள் யானைகளாகவும், கடற்கரையினை அடுத்துள்ள சோலையில் ஆர்த்தெழும் பறவைகள் படையாகவும் கொண்டு அரசன் போருக்குப் புறப்பட்டாற் போன்ற கடற்பகுதியின் தலைவனே! களவுப் புணர்ச்சியில் மிகுந்த விருப்பம் கொள்ளாமல் தக்க நாளொன்றினை தேர்வு செய்து தலைவியை மணம் புரிந்து கொள்வதுதான் உனக்கேற்ற நன்னெறியாகும். (என்று தோழி தலைவனிடம் கூறினாள்.)*

*திரையே பாகனாகத் திமிலே களிறாகக் கரை சேர்ந்த கானலின் கண்ணுள்ள பல புட்களே படையாக வேந்து கிளர்ந்தன்ன வேலைநீர்ச் சேர்ப்பனே! விரையாதே நல்லநா ளாராய்ந்து அறிந்து வரைந் திவளைக் கோடல் நினக் கறமாவது.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"அலைகள் யானைப் பாகனாகவும், தோணிகள் ஆண் யானைகளாகவும், சோலைகள் படையாகவும் கொண்டு வேந்தன் புறப்பட்டாற் போன்ற கடல் நீரை உடைய தலைவ! களவுப் புணர்ச்சியில் விருப்பம் கொள்ளாது, நல்ல நாள் ஒன்றைப் பார்த்து இவளை மணந்து கொள்வது நல்லொழுக்கமான நெறியாகும்" என்று தோழி தலைவனை வரைவு கடாயது. (பால சங்கரன் உரை)*

*53. தலைமகனைத் தோழி வரைவு கடாயது*

*பாறு புரவியாப் பல்களிறு நீடிமிலாத்*
*தேறு திரைபறையாப் புட்படையாத் - தேறாத*
*மன்கிளர்ந்த போலுங் கடற்சேர்ப்ப! மற்றெமர்*
*முன்கிளர்ந் தெய்தன் முடி.*

*சொற்பிரிப்பு:*
*பாறு புரவியா, பல் களிறு நீள் திமிலா,*
*தேறு திரை பறையா, புள் படையா, தேறாத*
*மன் கிளர்ந்த போலும் கடல் சேர்ப்ப! மற்று எமர்-*
*முன் கிளர்ந்து எய்தல் முடி!*

*தலைவனே எமது சுற்றத்தாரிடம் சென்று ஒப்புதல் பெற்று தலைவியை மணமுடித்து அவளுடன் வாழ்வாயாக என்று தோழி தலைவனுக்குக் கூறுகிறாள். பறந்து திரியும் பருந்துகள் குதிரைப் படைகளாகவும், பல யானைகள் கொண்ட படைபோல பெரிய தோணிகளும், தெளிவான அலைகள் பறை இசைக்கும் கருவியாகவும், கடற் பறவைகளைப் படைவீரர்கள் போலக் கொண்டு, அமைதியின் அருமையை அறியாத அரசர்கள், ஆரவாரித்துப் படையெடுத்துப் புறப்பட்டது போன்று காணப்படும், கடற்காட்சியினையுடைய கடற்பகுதியின் தலைவனே! எம் சுற்றத்தார்க்கு முன்னே சென்று இவளை மணச்சடங்கின்படி மணமுடிப்பாயாக. (என்று தோழி தலைவனிடம் கூறினாள்.)*

*பாறே குதிரையாக நீண்ட திமிலே பல களிறுகளாகத் தெளிந்த திரையே பறையாகப் புட்களே படையாகத் தேறாத வேந்துகள் படை யெழுந்து கிளர்ந்தன போலுங் கடற் சேர்ப்பனே! எமருடைய முன்னே சென்று இவளை நீயேபுணர்தலை முடிப்பாயாக.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"பருந்துகள் குதிரையாகவும், பெரிய தோள்கள் பல யானைகளாகவும், தெளிவான அலைகள் வாத்தியங்களாகவும் கடற்பறவை சேனையாகவும் கொண்டு அமைதியின் அருமையை உணராத அரசர்கள் போன்ற கடல் துறைவனே! சுற்றத்தவர்க்கு முன் போய் மணச்சடங்கின்படி இவளை மணத்தலை முடித்துக் கொள்வாயாக!" என தோழி தலைவனுக்குக் கூறியது. (பால சங்கரன் உரை)*

*54. தலைமகனைத் தோழி வரைவு கடாயது*

*வாராய் வரினீர்க் கழிக்கான னுண்மணன் மேற்*
*றேரின்மா காலாழுந் தீமைத்தே - யோரிலோர்*
*கோணாடல் வேண்டா குறியறிவார்க் கூஉய்க் கொண்டோர்*
*நாணாடி நல்குத னன்று.*

*சொற்பிரிப்பு:*
*வாராய்; வரின், நீர்க் கழிக் கானல் நுண் மணல்மேல்*
*தேரின் மா கால் ஆழும் தீமைத்தே; ஓர் இலோர்,*
*கோள் நாடல் வேண்டா; குறி அறிவார்க் கூஉய்க் கொண்டு, ஓர்*
*நாள் நாடி, நல்குதல் நன்று.*

*தலைவனே இரவில் வாராதே, இனி வருவாய் என்றால் தலைவியை மணமுடிக்க ஓர் நாள் குறித்து வந்து அவளை மணந்து கொள்ளுதலே நீ அவளுக்குச் செய்யும் நன்மையாக இருக்கும் எனத் தோழி தலைவனிடம் கூறுகிறாள்.*
*தலைவனே! நீ இவ்வாறு இரவில் வராது இருப்பாயாக, அவ்வாறு வர விரும்பினாய் என்றால், நீர் நிறைந்த கடற்கழிகளோடு கூடிய கடற்கரைச் சோலையிலேயுள்ள, நுட்பமான மணலினிடத்தே, உனது தேரில் பூட்டியுள்ள குதிரையின் கால்கள் ஆழ்ந்து புதைந்து, அவற்றின் குளம்புகளின் தடங்கள் காட்டிக் கொடுத்துவிடும் இடர் உள்ளது. ஆகவே மேலும் ஆராய்ந்து கொண்டிராதே, கோள்கள் குறித்து ஆராய்தல் தேவையில்லை. நிமித்தம் அறியும் கணிஞரை வரவழைத்து, ஓர் மண நாளைக் குறித்துக் கொண்டு வந்து, இவளை விரும்பி மணம் புரிந்து கொள்ளுதலே நீ தலைவிக்குச் செய்யும் நன்மையாக அமையும் (என்று தோழி தலைவனிடம் கூறினாள்.)*

*வாராதொழிவாயாக; வருவையாயின், நீர்க்கழிக்கானல்தான் நுண்மணன்மேல் நின்றேர் பூண்ட குதிரை காலாழுந் தீமையுடைத்து; ஆதலான், ஒத்த குலத்தார்க்குத் தொடர்ச்சி கோடலை ஐயுற் றாராய்தல் வேண்டா; நிமித்த மறிவாரை யழைத்து நல்லதொரு நாளை நாடிஇவட்கு நல்குதல் நன்று.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"தலைவனே! இரவில் வரவேண்டாம். வந்தால் தேரின் சக்கரங்கள் நுண்ணிய மணலிடத்தே புதைந்து போகும் தீமைகள் உள்ளது. எனவே நிமித்தங்களை அறிய வல்லவரை அழைத்து நல்ல நாளைப் பார்த்து மணம் கொண்டு இவளுக்கு நீ நன்மை செய்தல் நல்லதாகும்" எனத் தோழி தலைவனிடம் கூறியது. (பால சங்கரன் உரை)*

*55. தலைமகனைத் தோழி வரைவு கடாயது*

*கண்பரப்பக் காணாய் கடும்பனி கால்வறேர்*
*மண்பரக்கு மாயிருண் மேற்கொண்டு - மண்பரக்கு*
*மாறுநீர் வேலைநீ வாரல் வரினாற்றா*
*ளேறுநீர் வேலை யெதிர்.*

*சொற்பிரிப்பு:*
*கண் பரப்ப காணாய், கடும் பனி; கால் வல் தேர்*
*மண் பரக்கும் மா இருள் மேற்கொண்டு, மண் பரக்கு-*
*மாறு, நீர் வேலை! நீ வாரல்! வரின், ஆற்றாள்,*
*ஏறு நீர் வேலை எதிர்.*

*தலைவனே தலைவியைப் பார்க்க வரவேண்டாம், உனது செய்கையால் ஊரில் அலர் மிகுவதால் அவள் மிகுந்த துயருடன் கண்ணீர் சிந்தியவாறு இருப்பதைக் காண்பாயாக. நீ வந்தாயானால் அவள் உயிர் துறப்பாள் என்று தலைவனிடம் இரவு வருகையை நிறுத்தச் சொல்கிறாள் தோழி.*
*மிக்க துன்பத்தால் இவளது கண்கள் கண்ணீர் பரப்புவதைக் காண்பாயாக! காலின் வன்மை மிகுந்த தேரினிடத்தே, உலகமெங்கும் பரவியிருக்கும் மிகுந்த இருளோடு கூடிய இராக் காலத்தில் வருவதால் உலகமெல்லாம் பழிச் சொற்கள் நிரம்பும்படி நேர்கிறது. நீரினை நிறையக்கொண்ட கடலையுடைய நாட்டின் தலைவனே! நீ இரவில் வாராது இருப்பாயாக. வருவாயாயின் இவளால் பொறுக்கவியலாது, எதிர்த்துக் கரையின்மீதே ஏறி வரும் அலைகளையுடைய இக் கடற்கரை பாக்கத்தினிடத்தே இனி இவள் வாழ விரும்ப மாட்டாள் (என்று தோழி தலைவனிடம் கூறினாள்.)*

*இவளுடைய கண்களும் மிக்க நீர் பரப்பக் காணாய்; கால்வலிய தேரில் மண்ணெல்லாம் பரக்கும் பெரிய இருண் மேற்கொண்டு உலகமெல்லாம் நிவந்த அலர் பரக்குமாறு, நீருண்ட வேலையையுடையாய்! வாரல்; வருவையாயின், இவளுயிர் வாழாள்: ஒதமேறாநின்ற நீர்வேலையினெதிரே.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"நீரினையுடைய கடல்துறைவனே! இவள் துன்பத்தால் கண்ணீர் விடுவதைக் காண்பாயாக! மாறாக வருவாய் ஆயின் கடற்பக்கத்திலுள்ள இக்கடற்கரைப் பட்டினத்தில் இவள் உயிர் வாழாள்" என்று தோழி தலைவனிடம் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*56. தலைமகற்கு இரவுக்குறி நேர்ந்த தோழி, இடம் காட்டியது*

*கடற்கானற் சேர்ப்ப! கழியுலா அய் நீண்ட*
*வடற்கானற் புன்னை தாழ்ந் தாற்ற - மடற்கான*
*லன்றி லகவு மணிநெடும் பெண்ணைத்தெம்*
*முன்றி லிளமணன்மேன் மொய்த்து.*

*சொற்பிரிப்பு:*
*கடற் கானல் சேர்ப்ப! கழி உலா அய்நீண்ட*
*அடல் கானல் புன்னை, தாழ்ந்து, ஆற்ற, மடற் கானல்,*
*அன்றில் அகவும் அணி நெடும் பெண்ணைத்து-எம்*
*முன்றில் இள மணல்மேல் மொய்த்து.*

*தலைவனே கடற்கரையில் உள்ள புன்னைமரச் சோலையில், அன்றில் பறவைகள் பாடும் உயர்ந்த பனைமரத்தைக் கொண்ட வீட்டின் முற்றத்தின் மணல் பரப்பில் இரவில் தலைவியைச் சந்திக்கலாம் எனத் தோழி தலைவனிடம் கூறுகிறாள். கடற்கரைச் சோலைகளையுடைய துறை முகத்திற்குரிய தலைவனே! உப்பங்கழிகளால் சூழப்பட்டு, நீண்ட மீன்களைக் காயவைத்துள்ள உப்பளத்தோடு கூடிய கரையின் பக்கம், தழைத்து வளர்ந்திருக்கும் புன்னை மரங்கள் பூத்திருக்கும் கடற்கரைச் சோலையில், அன்றிற் பறவைகள் கூடிப் பாடும் அழகிய உயர்ந்த பனையோடு கூடியது எமது இல்லத்தின் முன்னே, நல்ல மணல்கள் மேலாக நிரம்பியிருக்கும் இடமே நாங்கள் விளையாடுமிடம் (என்று தோழி தலைவனுக்கு இரவுக்குறியிடங் கூறினாள்.)*

*கடற்கானற் சேர்ப்பனே! கழிகள் சூழ்ந்து நீண்ட மீன் கொலைகளையுடைய கானலின்கண் மிகவும் புன்னை தழைக்கப்பட்டு, பூவிதழையுடைய இக்கானலின் கண் உள்ள அன்றில்கள் அழையாநின்ற அழகிய நெடும் பெண்ணையை யுடைத்து;எம் மில்லத்தின்முன் இளமணல்களும் மொய்த்து.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"கடல்துறைவனே! யாம் விளையாடும் இடம் பெரிய மீன்களைக் கொன்று உலர வைத்திருக்கும் உப்பளத்துடன் இருக்கும். புன்னை மரங்கள் மிகவும் தழைக்கப் பெற்றிருக்கும்; பூ இதழ்களை உடைய சோலையில் வாழும் அன்றில் பறவைகள் கூடி அழைக்கின்ற அழகிய உயர்ந்த பனையுடன் கூடியது. இதுவே இரவுக்குறி" என்றாள்.(பால சங்கரன் உரை)*

*57. தோழி வரைவு கடாயது*

*வருதிரை தானுலாம் வார்மணற் கான*
*லொருதிரை யோடா வளமை - யிருதிரை*
*முன்வீழுங் கானன் முழங்கு கடற்சேர்ப்ப!*
*வெண்வீழல் வேண்டா வினி.*

*சொற்பிரிப்பு:*
*வரு திரை தான் உலாம் வார் மணல் கானல்,*
*ஒரு திரை ஓடா அளவை, இரு திரை*
*முன் வீழும் கானல், முழங்கு கடல் சேர்ப்ப!*
*என் வீழல் வேண்டா, இனி.*

*தலைவனே என் உதவியுடன் நீ இனி தலைவியைச் சந்திக்கத் தேவையில்லை, அவளை மணமுடித்து உன்னவள் ஆக்கிக் கொள் என்கிறாள் தோழி. கரையை நோக்கி வந்து கொண்டிருக்கின்ற அலைகள் உலாவுகின்ற அழகிய மணலோடு கூடிய கடற் கழிகளினிடத்தே, ஓர் அலை சென்று சேர்வதற்கு முன்னே இரண்டு அலைகள் வந்து மோதும்படியான வளப்பத்தினையுடைய கடற்கரைச் சோலை கொண்ட ஆரவாரிக்கின்ற கடற்றுறை முகத்திற்குரிய தலைவனே! என்னால் வந்து மேற்கொள்ளும் இக்களவுப் புணர்ச்சியினை விரும்புதல் தேவையில்லை இனிமேல் (தலைவியை மணந்து கொள் என்று தோழி தலைவனிடம் கூறினாள்.)*

*வருதிரைதான் வந்து உலவாநின்ற ஒழுகிய மணற்கானலின்கண் ஒருதிரை வந்து பெயர்வதற்கு முன்னே இரண்டு திரை வந்து வீழாநின்ற கானலின்கண் வந்து முழங்கு கடற்சேர்ப்பனே! என்னால் வந்து இப் புணர்ச்சியை விரும்பல் வேண்டா;இனி வரைந்து கொள்வாய்.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"அலைகள் வந்து உலாவுகின்ற மணற் பரப்பில் ஓர் அலை போய்ச் சேர்வதற்கு முன் இரண்டு அலைகள் வந்து மோதும், இத்தகைய வளப்பம் கொண்ட கடல் துறைவனே! இனி என்னால் வந்து மேற்கொள்ளும் இந்தக் களவொழுக்கத்தை விரும்புதல் வேண்டுவதன்று" என்று தோழியுரைத்தாள்.(பால சங்கரன் உரை)*

*58. தலைமகற்குத் தோழி பகற்குறி நேர்ந்து, இடம் காட்டியது*

*மாயவனுந் தம்முனும் போலே மறிகடலுங்*
*கானலுஞ்சேர் வெண்மணலுங் காணாயோ - கான*
*லிடையெலா ஞாழலுந் தாழையு மார்ந்த*
*புடையெலாம் புன்னை புகன்று.*

*சொற்பிரிப்பு:*
*மாயவனும் தம்முனும் போலே, மறி கடலும்*
*கானலும் சேர் வெண் மணலும் காணாயோ-கானல்*
*இடை எலாம், ஞாழலும் தாழையும்; ஆர்ந்த*
*புடை எலாம், புன்னை;-புகன்று?*

*அலைகடலும் அதனருகே கடற்கரைச் சோலையும், வெண் மணலும் ஞாழலும், தாழையும் புன்னையும் நிரம்பிய இடங்களை விரும்பிப் பார்ப்பாயாக எனத் தோழி தலைவனுக்குப் பகற்குறி சொன்னாள்.*
*கண்ணனும் அவனது தமையனாகிய பலராமனும் போன்று காணப்பெறும், அலைகள் மறிந்துவரப் பெறுகின்ற நீலக் கடலினையும் கடற்கரைச் சோலையினையும், அதனைச் சார்ந்த வெண் மணல் பரப்பையும் காண்பாயாக. அக்கடற்கரைச் சோலை எல்லாம் நிறைந்துள்ள கோங்க மரங்களையும், தாழை மரங்களையும், அச்சோலையின் பக்கங்களிலெல்லாம் நிறைந்துள்ள புன்னை மரங்களையும், விரும்பி பார்ப்பாயாக. (என்று தோழி தலைவனிடத்தில் பகற்குறி சொன்னாள்.)*

*மாயவனும் அவன் முன்னோனும் போல, மறிகடலும் கடற்சோலையும் அச்சோலையைச் சேர்ந்த வெண்மணலும் பாராயோ! அக்கடற் சோலையின் நடுவெல்லாம் ஞாழலுந் தாழையுமாய் இருக்கும்; நிறைந்த மருங்கெல்லாம் புன்னையாயிருக்கும்; இவற்றையும் விரும்பிப் பாராய்.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"கண்ணனும் பலராமனும் போலக் காணப்படும் கடலும் கடற்கரைச் சோலையும் அதனைச் சேர்ந்த வெண் மணலினையும் அந்தச் சோலையின் நடுவெல்லாம் நிறைந்திருக்கும் கோங்கு, தாழை, புன்னை மரங்களையும் விரும்பி நீ பார்ப்பாயாக! அதுவே பகற்குறியிடம்" என்று தோழி தலைவனுக்குச் சொன்னான்.(பால சங்கரன் உரை)*

*59. 'இரு பொழுதும் வாரல்!' என்று, வரைவு கடாயது*

*பகல்வரிற் கவ்வை பலவாம் பரியா*
*திரவரி னேதமு மன்ன - புகவரிய*
*தாழை துவளுந் தரங்கநீர்ச் சேர்ப்பிற்றே*
*யேழை நுழைய ரிடம்.*

*சொற்பிரிப்பு:*
*பகல் வரின், கவ்வை பல ஆம்; பரியாது,*
*இர வரின், ஏதமும் அன்ன; புக அரிய*
*தாழை துவளும் தரங்க நீர்ச் சேர்ப்பிற்றே,*
*ஏழை நுளையர் இடம்.*

*பகல் இரவு என்று இரு பொழுதுகளும் தலைவியைச் சந்திக்க வருதலை விடுத்து விரைவில் அவளை மணமுடித்துக் கொள் என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள். பகற் பொழுதில் நீ வந்தாய் எனில் பழிச் சொற்கள் பல வரும். அப்பழிச்சொற்களைத் தவிர்க்க விரும்பி இரவில் நீ வந்தாய் என்றால் வருவதற்கு இடையூறுகளும் பல உள்ளன. அயலார் எளிதில் நுழைய முடியாதபடி தாழை மரங்கள் நெருங்கிப் படர்ந்து கிடக்கும், அலையோடு கூடிய கடல் நீரினை உடைய கரையைக் கொண்டது எளியவர்களாகிய நுளையர்/ பரதர் மக்களாகிய நாங்கள் வாழும் இந்த இடம். (இருபொழுதும் வருதலை விடுத்து வரைவினை மேற்கொள்வாயாக, என்று தலைவனிடம் தோழி கூறினாள்.)*

*பகல் வருவாயாயின், அலர்பலவு முளவாம்; அவ்வலர்க்கு இரங்காதே இரவு வருவையாயின், ஊறு வரும் ஏதமும் பலவுளவாம்; உள் புகுதற்கரிய தாழையடர்ந்த திரைநீர்ச் சேர்ப்பையுடைத்து, எங்கள் ஏழை நுளையர்வாழுமிடம்.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"தலைவ! நீ பகலில் வந்தால் பழிச் சொற்கள் பலவாய்ப் பெருகும். அத்தகைய பழிச் சொற்களுக்காக நீ இரவில் வருவாயானால் துன்பங்களும் அவை போன்று பலவாகத் தோன்றும். மேலும் எளியவரான எம்முடையவரான பரதவர் வாழும் இடமாவது மற்றவர் புகுவதற்கு அரிய தாழை மரங்கள் நெருங்கிப் படர்ந்து கிடக்கும் அலை பொருந்திய கடல் நீரையுடைய கரையில் உள்ளதாகும். எனவே இரண்டு பொழுதுகளும் வரவேண்டா. அதை விடுத்து மணத்தை மேற்கொள்வாயாக" என்று தோழி தலைவனிடம் சொன்னாள். (பால சங்கரன் உரை)*

*60. பாங்கற்குத் தலைமகன் கூறியது*

*திரையலறிப் பேராத் தெழியாத் திரியாக்*
*கரையலவன் காலினாற் காணாக் - கரையருகே*
*நெய்தன் மலர்கொய்யு நீணெடுங் கண்ணினாண்*
*மைய னுளையர் மகள்.*

*சொற்பிரிப்பு:*
*திரை அலறிப் பேரத் தழியாத் திரியா,*
*கரை அலவன் காலினால் காணா, கரை அருகே*
*நெய்தல் மலர் கொய்யும் நீள் நெடுங் கண்ணினாள்,*
*மையல், நுளையர் மகள்.*

*கடற்கரையில் நண்டு பிடித்தவாறு நெய்தல் பூக்களைக் கொய்து கொண்டிருக்கும் நீண்ட கண்களையுடைய தலைவி எனக்குக் காதல் மயக்கம் தந்தாள் என்று தோழனிடம் கூறுகிறான் தலைவன்.*
*கடல் அலைகள் ஆர்ப்பரித்துத் திரும்பிச் சென்ற வண்ணம் அலைமோதும் கரையினிடத்தே, கரையில் அலையும் நண்டுகளைக் கால்களினாலே கண்டு பிடித்தவாறு, கரை அருகே மலர்ந்துள்ள நெய்தற் பூக்களைக் கொய்தவாறு நிற்கும் மிக நீண்ட கண்களை உடையவள் எனக்குக் காதல் மயக்கத்தை உண்டாக்கியவள் அந்த பரதவரின் மகளாகிய என் தலைவி (என்று தலைவன் தோழனிடம் கூறினான்.)*

*திரைகள் அலறிப் பெயரும் வகை தெழித்துத் திரிந்து கரையின்கண் அலவன்களைத் தன் காலினாலாராய்ந்து, கரையருகே நின்ற நெய்தன் மலர்களைக் கொய்யாநிற்கும் நீளிய நெடுங் கண்ணினாள் நுளையருடையமையன் மகள்.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*தலைவன் தன் பாங்கனிடம் "மயக்கத்தை உண்டாக்கும் தலைவி, கடலிலே நீந்துபவள். கரையிடத்து அலைந்து அங்கிருக்கும் நண்டுகளைக் கால்களால் கண்டு பிடிப்பவள். கரையில் உள்ள நெய்தல் பூக்களைக் கொய்பவள். நீண்ட கண்களை உடையவள்" என்று கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*61. தலைமகற்குத் தோழி இரவுக்குறி மறுத்தது*

*அறிகரிதி யார்க்கு மரவநீர்ச் சேர்ப்ப!*
*நெறிதிரிவா ரின்மையா லில்லை - முறிதிரிந்த*
*கண்டலந்தண் டில்லை கலந்து கழிசூழ்ந்த*
*மிண்டலந்தண் டாழை யிணைந்து.*

*சொற்பிரிப்பு:*
*அறிகு அரிது, யார்க்கும்-அரவ நீர்ச் சேர்ப்ப!*
*நெறி, திரிவார் இன்மையால், இல்லை-முறி திரிந்த*
*கண்டல், அம் தண் தில்லை கலந்து, கழி சூழ்ந்த*
*மிண்டல், அம் தண் தாழை, இணைந்து.*

*இரவில் நீ தலைவியைச் சந்திக்க வரும் வழி இடர்கள் மிக்க வழி, அதன் வழி வருவது துன்பம் தரும், ஆகவே நீ தலைவியைப் பார்க்க வர வேண்டாம் என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்.*
*வழியினைத் தெரிதல் எவருக்கும் இயலாத ஒன்றாகும், அலைகளின் ஆரவாரிப்பினையுடைய கடற்கரை நாட்டின் தலைவனே ! மேலும் அந்த வழிகளில் செல்வோரும் குறைவு என்பதால் புழக்கம் இன்றி நல்லதொரு வழியாகவும் அது இல்லை. தளிர்கள் சுருண்டு நிறைந்திருக்கும் நீர் முள்ளிச் செடிகள், அழகிய குளிர்ந்த தில்லை மரங்களுக்கிடையே கடற் கழிகளும், அவற்றை நெருக்கமாச் சூழ்ந்துள்ள அழகிய குளிர்ந்த தாழை மரங்களுமாக வழி அடைபட்டுள்ளது (ஆகவே நீ இரவில் இடர் நிறைந்த வழியில் வருவது ஏற்புடையதன்று என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்)*

*யார்க்கும் அறிதலரிது; ஓசையையுடைய நீர்ச் சேர்ப்பனே! எங்குந் திரிவா ரில்லாமல் வழியில்லை; தளிர் சுருண்டிருந்த கண்டலும், அழகிய தண் டில்லைகளும். தம்முண் மிடைந்து கழியைச் சூழ்ந்த மிண்டன் மரங்களும்,தாழைகளும் இடைப்பட்டு.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"முள்ளிச் செடிகள் தில்லை மரங்களுக்கிடையே சூழப் பெற்றன. நெருங்கிய தாழை மரங்களும் அவற்றுடன் கூடியுள்ளன. அதனால் எவர்க்கும் வழியை அறிதல் அரிய ஒன்றாகும். ஆகவே நீ இரவுக் குறியில் வருவது துன்பம் தருவதாகும்!" எனத் தோழி தலைவனைப் பார்த்துச் சொன்னாள்.(பால சங்கரன் உரை)*

*62. தலைமகளை ஒருநாள் கோலம் செய்து, அடியிற் கொண்டு முடிகாறும் நோக்கி, 'இவட்குத் தக்கான் யாவனாவன் கொல்லோ?' என்று ஆராய்ந்த செவிலிக்குத் தோழி அறத்தொடு நின்றது*

*வில்லார் விழவினும் வேலாழி சூழுலகி*
*னல்லார் விழவகத்து நாங்காணே - நல்லாய்!*
*உவர்க்கத் தொரோவுதவிச் சேர்ப்பனொப் பாரைச்*
*சுவர்க்கத் துளராயிற் சூழ்.*

*சொற்பிரிப்பு:*
*வில்லார் விழவினும், வேல் ஆழி சூழ் உலகில்*
*நல்லார் விழவகத்தும், நாம் காணேம்;-நல்லாய்!-*
*உவர்க்கத்து ஒரோ உதவிச் சேர்ப்பன் ஒப்பாரைச்*
*சுவர்க்கத்து உளராயின், சூழ்.*

*தலைவிக்கு இவனே பொருத்தமான மணமகன் என்பதால், அவன் போலச் சிறந்தவர் கிடைப்பவர் அரிது என்று செவிலிக்குத் தோழி அறத்தொடு கூறி நின்றாள்.*
*விற்போரில் வல்ல வீரர்கள் கூடி நடத்தும் வில்விழாக் கூட்டத்திலும், கடலினாலே சூழப் பெற்ற இவ்வுலகத்தினிடத்தே நல்லவர் பலர் கூடி நடத்தும் மணவிழாக் கூட்டத்திலும், அன்று கடற்கரையினிடத்து தலைவிக்கு ஒப்பற்ற உதவியினைச் செய்த கடற்றுறை முகத்துக்குரியவனை ஒத்த ஆடவரை நாங்கள் காணவில்லை!! இவரைப் போன்ற அத்தகைய சிறந்தவர் சுவர்க்கத்திலிருந்தாலும் அவரை தலைவிக்குத் தேர்வு செய்து மணமுடிப்பாயாக நல்ல எமது அன்னையே! (தலைவிக்கு இவனே பொருத்தமான மணமகன் என்பதால், அவன் போலச் சிறந்தவர் கிடைப்பவர் அரிது என்று தோழி செவிலியிடம் கூறினாள்.)*

*வில்லுழவர் காரணமாகத் தொடங்கிய விழவகத்தும், நல்லாராகிய வனிதையர் காரணமாகத் தொடங்கிய விழவகத்தும் எல்லா மாந்தருந் திரள் வராதலால், நாங்கள் அங்குக் கண்டறியேம்; எமக்கு ஒரு தவி பண்டொருநாட் செய்த சேர்ப்பனோ டொப்பாரை: மற்றவனே இவட்குத் தக்கான்; அவனைப் போலும் ஆடவர் சுவர்க்கத் துளராயின்ஆராய்வாய்.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"நல்ல தாயே! வில் விழாக் கூட்டத்திலும் மணவிழாவிலும் கடற்கரையில் இவளுக்கு உதவியைச் செய்த கடல் துறைக்கு உரியவனைப் போன்ற ஆடவரை நாம் காணவில்லை! எனவே இவளுக்குத் தக்கவன் அவனே! அவனையல்லாமல் அவனைப் போன்றவர் சுவர்க்கத்தில் இருப்பாராயின் ஆராய்வாயாக!" என்று சொன்னாள். (பால சங்கரன் உரை)*

# *3. பாலை: மூலமும் – உரையும்*

***பாடல்கள் [63-92]***

*63. தலைமகளைத் தோழி பருவம் காட்டி, வற்புறீஇயது*

*எரிநிறநீள் பிண்டி யிணரின மெல்லாம்*
*வரிநிற நீள்வண்டர் பாடப் - புரிநிறநீள்*
*பொன்னணிந்த கோங்கம் புணர்முலையாய்! பூந்தொடித்தோ*
*ளென்னணிந்த வீடில் பசப்பு.*

*சொற்பிரிப்பு:*
*எரி நிற நீள் பிண்டி இணர் இனம் எல்லாம்*
*வரி நிற நீள் வண்டர் பாட, புரி நிற நீள்*
*பொன் அணிந்த, கோங்கம்;-புணர் முலையாய்!-பூந்தொடித் தோள்*
*என் அணிந்த, ஈடு இல் பசப்பு?*

*தலைவியே உனக்குப் பசலை நோய் தோன்றிய காரணம் என்ன என்று தோழி தலைவியை வினவினாள்.*
*எரியும் தீ போன்ற நிறத்தோடு மலர்ந்திருக்கும் நீண்ட அசோக மரத்தின் பூங்கொத்துகளில் எல்லாம் உடலில் கோடுகள் கொண்ட அழகிய நீண்ட வண்டுகள் பாடி மொய்த்துக் கொண்டிருக்க, விரும்பத்தக்க அழகு கொண்ட பெரிய, பொன் போன்ற மலர்கள் கோங்க மரங்களெல்லாம் பூத்துக் குலுங்குகின்றன. சிறந்த இரு முலைகளையுடைய தலைவியே! அழகிய வளையலணிந்த உன் தோள்களில் தகுதியற்ற பசலை (பசலை- தலைவனைப் பிரிந்த தலைவியர் கொள்ளும் மேனி நிற மாற்றம்) நிறம் எதனால் தோன்றியது? (என்று வேனிற்பருவம் என்பதால் தலைவன் வந்துவிடுவான் எனத் தோழி தலைவியிடம் வலியுறுத்துகிறாள்).*

*எரிநிறத்தையுடையன அசோக்கின் பூங்கொத்தினமெல்லாம்; வரிநிறத்தையுடைய வண்டுகள் இளியென்னும் பண்ணைப்பாட விரும்பப்படுகின்ற நீண்ட மிக்க பொன் போன்ற மலர்களை யணிந்தன, கோங்கமெல்லாம்; ஆதலாற் பொருந்திய முலையினை யுடையாய்! நின்னுடைய பூந்தொடித் தோள்கள் யாதின் பொருட்டு அணிந்தன தமக்குத் தகுதியில்லாத பசப்பினை? (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"அசோக மரங்கள் மலர்க் கொண்டுள்ளன. கோங்க மரங்கள் பெரிய பொன் போன்ற மலர்களை உடையன ஆயின. அழகிய வளையலை அணிந்த நின் தோள் மட்டும் தகுதியற்ற பசலை நிறத்தை எதன் பொருட்டாக மேற்கொண்டன?" எனத் தோழியுரைத்தாள்.(பால சங்கரன் உரை)*

*64. தலைமகளைத் தோழி பருவம் காட்டி, வற்புறீஇயது*

*பேணா யிதன் றிறத் தென்றாலும் பேணாதே*
*நாணாய நல்வளையாய்! நாணின்மை - காணா*
*யெரிசிதறி விட்டன்ன வீர்முருக் கீடில்*
*பொரிசிதறி விட்டன்ன புன்கு.*

*சொற்பிரிப்பு:*
*'பேணாய், இதன் திறத்து!' என்றாலும், பேணாதே*
*நாண் ஆய நல் வளையாய்! நாண் இன்மை காணாய்;*
*எரி சிதறி விட்டன்ன, ஈர் முருக்கு; ஈடு இல்*
*பொரி சிதறி விட்டன்ன, புன்கு.*

*வேனில் வந்தது; இனி வேந்தனும் வருவான் கவலையற்க தலைவியே! என்று தோழி தலைவிக்கு ஆறுதல் சொல்கிறாள்.*
*(உன் உணர்வை) வெளிக்காட்டாது காத்துக் கொள்வாய் உன்னை இத்துன்பத்திலிருந்து, என்று சொன்னாலும் எச்சரிக்கை கொள்ளாது வெட்கக் கேடான நிலைக்குக் காரணமான செயலைச் செய்த நல்ல வளைகளை அணிந்த தலைவியே! நாணத்தக்க நிலை மறைந்தது என்பதைக் காண்பாயாக. நெருப்பினை சிதறி விட்டாற் போன்று குளிர்ந்த முருக்கமரங்கள் பூத்தன, கனமில்லாத நெற்பொரியினைச் சிதறி விட்டாற்போன்று புங்கைமரத்தின் பூக்கள் மலர்ந்தன. (தலைவன் வருவேன் என்று சொல்லிச் சென்ற வேனிற் காலம் தொடங்கிய அறிகுறி இது, ஆதலால் கவலை கொள்ளாதே என்று தோழி தலைவியிடம் கூறினாள்.)*

*நீ உறுகின்ற துன்பத்தைப் பாதுகாவாய்,' என்று யான் சொன்னாலும் பாதுகாவாதே நாணத்தகும் ஆற்றாமை செய்த நல்வளையாய்! நீயும் முன்பு நாணின்மை செய்தா யென்பதனை இனி யறிந்து கொள்ளாய்; எரியைச் சிதறிவிட்டாற் போலவிருந்த. ஈர்முருக்குக்கள்;கனமில்லாத பொரி சிதறிவிட்டாற் போலப் பூத்தன, புன்குகள்; ஆதலான் அவர் சொல்லிய பருவம் இதுகாண். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"நல்ல வளையலை அணிந்தவளே! முருக்க மரங்கள் தீயைச் சிதறவிட்டாற் போல் பூத்தன. புங்க மரங்கள் நெற் பொரிகளைச் சிதறியதைப் போல் மலர்களை மலரச் செய்தன. எனவே, உன் முந்தைச் செயல் நாணம் உடையது என்பதையும், தலைவன் குறிப்பிட்டுச் சொல்லிச் சென்ற வேனிற் பருவம் வந்தது என்பதையும் பார்ப்பாயாக!" எனக் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*65. சுரத்திடைச் சென்ற செவிலித்தாய் குரவொடு புலம்பியது*

*தான்றாயாக் கோங்கந் தளர்ந்து முலைகொடுப்ப*
*வீன்றாய்நீ பாவை யிருங்குரவே! - ஈன்றாண்*
*மொழிகாட்டா யாயினு முள்ளெயிற்றாள் சென்ற*
*வழிகாட்டா யீதென்று வந்து.*

*சொற்பிரிப்பு:*
*தான் தாயாக் கோங்கம் தளர்ந்து முலை கொடுப்ப,*
*ஈன்றாய் நீ பாவை, இருங் குரவே! ஈன்றாள்*
*மொழி காட்டாய் ஆயினும், முள் எயிற்றாள் சென்ற*
*வழி காட்டாய், 'ஈது' என்று, வந்து.*

*சுரத்திடை (பாலை நிலவழி) தனது தலைவனுடன் தலைவி சென்ற வழி எது என்று எனக்குக் காட்டுவாயாக எனச் செவிலித்தாய் குரா மரத்தருகில் நின்று புலம்புகிறாள்.*
*ஒரு தாய் போன்று கோங்க மரம் மன நெகிழ்வுற்றுத் தாழ்ந்து முலை போன்ற கோங்க மலர்களைக் கொடுத்துப் பாலூட்ட நீ பொம்மை போன்ற பெண் குழந்தையைப் போன்ற காய்கள் பெற்றெடுத்தாய், அது போலவே தலைவியும் நான் பராமரிக்கும் எனது மகள் தான் பெரிய குராமரமே! அவள் உன்னிடம் சொல்லியவற்றை என்னிடம் சொல்ல முடியாவிட்டாலும் பரவாயில்லை. ஆனாலும், முள் போன்ற கூரிய பற்களைக் கொண்ட என் மகள் தனது தலைவனுடன் சென்ற வழி இதுதான் என்று மனமுவந்து எனக்குக் காண்பிப்பாயாக. (என்று செவிலி குராவோடு கூறினாள்.)*

*கோங்கந்தான் தாயாகத் தாழ்ந்து முலை கொடுத்து வளர்ப்ப நீ பாவையினை யீன்ற இத்துணையே யாதலான், இருங்குரவே! யானீன்றாள் நினக்குச் சொல்லிய சொல்லை யெனக்குச் சொல்லா யாயினும் முள்ளெயிற்றாள் போயின வழியையாயினும் சொல்லிக்காட்டாய் வந்து இதுஎன்று. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"பெருங்குரா மரமே! கோங்க மரம் பூக்களைக் கொடுக்க நீ பொம்மை போன்ற காய்களைப் பெற்றுள்ளாய். அதனால் என்னால் பெற்றெடுத்த என் மகள் உன்னிடம் சொல்லிய பொருளை எனக்கு எடுத்துக் காட்ட வல்லாய் அல்லை! என்றாலும் கூர்மையான பற்களைக் கொண்ட என் மகள் தலைவன் பின் போன வழியை முன் வந்து இது தான் என்று காட்டுவாயாக" என்று செவிலி குரா மரத்துடன் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*66. தோழி பருவம் காட்டி வற்புறுத்தியது*

*வல்வருங் காணாய் வயங்கி முருக்கெல்லாஞ்*
*செல்வர் சிறார்க்குப் பொற் கொல்லர்போ - னல்ல*
*பவளக் கொழுந்தின்மேற் பொற்றாலி பாஅய்த்*
*திகழக்கான் றிட்டன தேர்ந்து.*

*சொற்பிரிப்பு:*
*வல் வரும்; காணாய்-வயங்கி, முருக்கு எல்லாம்,*
*செல்வர் சிறார்க்குப் பொற்கொல்லர்போல், நல்ல*
*பவளக் கொழுந்தின்மேல் பொன்-தாலி பாஅய்த்*
*திகழக் கான்றிட்டன, தேர்ந்து!*

*வேனிற் காலம் துவங்கி விட்டது, முருங்க மரங்கள் பூத்துக் குலுங்குகின்றன, வேனிலில் வருவதாகக் கூறிச் சென்ற தலைவன் வந்துவிடுவான் தலைவியே! வல்லவனாகிய தலைவன் விரைவில் வருவான் தலைவியே. காண்பாயாக. வேனிற் காலத்தின் அறிகுறிகளாக விளக்கத்தோடு கூடியனவாய் முருக்க மரங்களெல்லாம் காட்சி தருகின்றன. செல்வந்தர் வீட்டுச் சிறுவர்களுக்கு அணிவிப்பதற்காகப் பொன் கொல்லர் உயர்ந்த, பவளத் துண்டத்தினை ஐம்படைத்தாலியில் பதித்து வைத்தாற் போலக் காணும்படியாக மலர்ந்த மலர்களுடன் திகழ்வதை ஆராய்ந்து காண்பாயாக (என்று தோழி தலைவியிடங் கூறினாள்.)*

*நங் காதலர் விரைந்து வருவர்: விளங்கி முருக்குக்களெல்லாம், செல்வமுடையார் புதல்வர்க்குப் பொற்கொல்லர் ஐம்படைத்தாலி செய்தாற்போல, மிக்க பவளக் கொழுந்தின் அடியிலே பொற்றாலியைப் பதித்து வைத்தாற்போல் விளங்கக் கான்றன; ஆதலாற் றேர்ந்து பாராய்.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"முருக்க மரங்கள் எல்லாம் பொன்னால் செய்யப்பட்ட கழுத்தணியின் மீது பவளக் கொழுந்தினைப் பொருத்தி வைத்தாற் போன்று ஒளியோடு மலர்ந்தன. ஆகையால் ஆராய்ந்து இது வேனிற் காலம் என்பதை அறிவாயாக! எனவே, நம் தலைவன் விரைவில் வருவான்" எனத் தலைவியிடம் சொன்னாள்.(பால சங்கரன் உரை)*

*67. பருவம் கண்டு ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது*

*வெறுக்கைக்குச் சென்றார் விளங்கிழாய்! தோன்றார்*
*பொறுக்கவென் றாற்பொறுக்க லாமோ - வொறுப்பபோற்*
*பொன்னு ளுறுபவளம் போன்ற புணர்முருக்க*
*மென்னு ளுறுநோய் பெரிது.*

*சொற்பிரிப்பு:*
*வெறுக்கைக்குச் சென்றார், விளங்கிழாய்! தோன்றார்;*
*'பொறுக்க!' என்றால், பொறுக்கலாமோ?-ஒறுப்பபோல்*
*பொன்னுள் உறு பவளம் போன்ற, புணர் முருக்கம்;*
*என் உள் உறு நோய் பெரிது!*

*பொருள் தேடிச் சென்ற தலைவன் சொன்னபடி வேனிலில் வரவில்லை, வருந்தாதே அமைதியாக இரு என்கிறாயே தோழி என்னால் எப்படி வருந்தாமல் இருக்க முடியும் என்று தலைவி தோழியிடம் கேட்கிறாள்.*
*நான் வெறுக்கும்படி பொருள் தேடும் பொருட்டு என் தலைவன் பிரிந்து சென்றுள்ளார், ஒளி மிக்க அணிகலன்களையுடைய தோழியே! வேனிற் பருவமும் வந்து விட்டது, ஆனால் அவர் வருவதைக் காண முடியவில்லை. வந்துவிடுவார் பொறுத்துக் கொள் என்று நீ சொல்வதால் என்னால் பொறுத்துக் கொள்ள முடியுமா? என்னை வருத்துவதற்காகவே பொன்னிடத்திலே பொருந்தியுள்ள பவழத்தினைப் போன்று இந்தப் பூக்கள் அடர்ந்து வளர்ந்துள்ள முருக்க மரங்களில் மலர்ந்துள்ளன. அதைக் காணுகையில் என் நெஞ்சினிலே துன்பம் மிகுந்துள்ளது, என்னால் தாங்க இயலாது (என்று தலைவி தோழியிடங் கூறினாள்.)*

*மிக்க பொருட் பொருட்டுச் சென்றார், விளங்கிழையாய்! வந்து தோன்றுகின்றிலர்; இப் பருவத்தின் கண் நீ என்னை ஆற்று என்றால் எனக்கு ஆற்றலாமோ? என்னை ஒறுப்பனபோலப் பொன்னின் உள்ளூற வைத்த பவளம் போன்ற, பொருத்திய முருக்கம் பூக்கள்; ஆதலால் என்னுள்ளத்துற்ற நோய்பெரிது.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"அணிகளை அணிந்தவளே! முருக்க மரங்கள் என்னை வருத்த வந்தவை போன்று பூத்தன. அவற்றால் என் துன்பம் மிக்கது. பொருள் தேடும் பொருட்டுச் சென்ற தலைவர் வேனிற் பருவம் வந்தும் திரும்பி வரவில்லை! இத்தகைய நிலையில் என்னைப் பார்த்து நீ பொறுத்துக் கொள் என்றால் பொறுத்துக் கொள்ள இயலுமோ?" என்று தலைவி தோழியிடம் சொன்னாள்.(பால சங்கரன் உரை)*

*68. பொருள் வலித்த நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லிச் செலவு அழுங்கியது*

*சென்றக்காற் செல்லும்வா யென்னோ விருஞ்சுரத்து*
*நின்றக்கா னீடி யொளிவிடா - நின்ற*
*விழைக்கமர்ந்த வேயே ரிளமுலையா ளீடில்*
*குழைக்கமர்ந்த நோக்கின் குறிப்பு.*

*சொற்பிரிப்பு:*
*சென்றக்கால், செல்லும் வாய் என்னோ?-இருஞ் சுரத்து*
*நின்றக்கால், நீடி ஒளி விடா,-நின்ற*
*இழைக்கு அமர்ந்த ஏய் ஏர் இளமுலையாள் ஈடு இல்*
*குழைக்கு அமர்ந்த நோக்கின் குறிப்பு!*

*நெஞ்சே, பொருள் தேட எப்படிச் செல்வேன், பாலை வழியிலும் அழகிய என் தலைவியின் நீண்ட கண்களின் ஏக்கப் பார்வை என்னை எதிர் கொண்டு துரத்துகிறதே என்று தலைவன் வருந்துகிறான்.*
*பொருளினை தேட வேண்டு மென்று தீர்மானித்து; தலைவியைப் பிரிந்து போக நினைத்தாலும், போகும் வகை விளங்கவில்லையே ? பெரிய இப்பாலை நில வழியே செல்கையில் எதிர்ப்பட்டு, என்னை நெடுந்தொலைவு தொடர்ந்து முன்னே வந்து ஒளிவிட்டு, நிலைபெற்ற, அழகிய இளமையான முலைகளைக் கொண்ட தலைவியின், அணிகலன்களுக்கு இணையாக அணிசேர்க்கும் வகையில், அவளது காதணிவரை நீண்டிருக்கும் அவளது நீண்ட கண்களின் வழியே அவளது உள்ளக் குறிப்பை உணர்த்தும் ஒப்பில்லாத பார்வை வருத்துகிறதே (நெஞ்சே! - என்று தலைவன் தனக்குத் தானே செல்லுதற்கு வருந்தி எண்ணிக் கொள்கிறான்.)*

*பொருளின் பொருட்டு நாமிவளை நீங்கிப் போயக்காற் போம்வகை யெங்ஙனேயோ? நெஞ்சே! மன்னிய அணிகட்குத் தக்க அழகையுடைய இளமுலையாளுடைய ஒப்பில்லாத குழைக்கமர்ந்த நோக்கின் குறிப்புக்கள் நம் முன்னே வந்து நீடி யொளிவிட்டு இருஞ்சுரத்திடையே தோன்றிநின்றக்கால்.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"காதுவரை நீண்ட தலைவியின் கண்ணின் பார்வை தொலைவு தொடர்ந்து நம்முன்பு வந்து ஒளிவிட்டுப் பெரிய இப்பாலை நில வழியே எதிர்ப்பட்டு விளங்கினால், பொருள்தேடும் பொருட்டு நாம் இவளைப் பிரிந்து செல்லும் போது, போகும் வகை என்னாகும்?" எனத் தலைவன் நெஞ்சிற்குக் கூறினான்.(பால சங்கரன் உரை)*

*69. இடைச் சுரத்துக் கண்டார் செலவு விலக்கியது*

*அத்த நெடிய வழற்கதிரோன் செம்பாக*
*மத்தமறைந் தானிவ் வணியிழையோ - டொத்த*
*தகையினா லெஞ் சீறூர்த் தங்கினிராய் நாளை*
*வகையினிராய்ச் சேறல் வனப்பு.*

*சொற்பிரிப்பு:*
*அத்தம் நெடிய; அழற் கதிரோன் செம்பாகம்*
*அத்தம் மறைந்தான்; இவ் அணியிழையோடு, ஒத்த*
*தகையினால், எம் சீறூர்த் தங்கினிராய், நாளை*
*வகையினிராய்ச் சேறல் வனப்பு.*

*தலைவியை அழைத்துக் கொண்டு பாலை வழிச்செல்லும் தலைவனிடம், பொழுது சாயப் போகிறது எங்கள் சிற்றூரில் இரவு தங்கி நாளை செல்க என்று எதிர்ப்பட்ட வழிப்போக்கர்கள் கூறுகிறார்கள்.*
*நீங்கள் செல்கின்ற இப்பாலை நில வழியும் நீண்டதாக உள்ளது. நெருப்பினைப் போன்ற கதிர்களைக் கொண்ட பகலவனும் பாதியளவு வரை அந்த பெரிய மலையின் பின்னே மறைந்து விட்டான். ஆதலால், அணிகளை அணிந்துள்ள இந்த அழகிய மங்கையுடன் நீங்களும், எங்களில் ஒருவராக உங்களைக் கருதிக் கொண்டு எமது சிறிய ஊரில் இரவில் தங்கி, நாளை அங்கிருந்து செல்வதே நல்லது (என்று தலைவியை உடன்கொண்டு சென்ற தலைவனை நோக்கி பாலைநில வழியிடையே எதிர்ப்பட்ட வழிப்போக்கர்கள் கூறுகிறார்கள்.)*

*வழிகளும் நெடிய; அத்த மலையின் கண்ணே அழற் கதிரோனுஞ் செம்பாகம் மறைந்தான்; இவ்வணியிழையோடு நீரும் எம்மோ டொத்த தகையினால் எஞ்சீறூரிலே இன்று தங்கினீராய் நாளைஎங்களினீங்கிப் போதலழகு.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"நீங்கள் செல்லும் வழி நீண்டது. தீயைப் போன்ற கதிரவன் பாதி மறைந்தனன். எனவே இவளுடன் நீயும் எம் சிறிய ஊரில் தங்கி மறுநாள் செல்க" என்று கண்டவர் தலைவனிடம் கூறினர்.(பால சங்கரன் உரை)*

*70. புணர்ந்து உடன் போய தலைமகன், தலைமகளை ஆற்றுவித்துக் கொண்டு போவான், சொல்லியது*

*நின்னோக்கங் கொண்டமான் றண்குரவ நீழல்காண்*
*பொன்னோக்கங் கொண்ட பூங் கோங்கங்காண் - பொன்னோக்கங்*
*கொண்ட சுணங்கணி மென்முலைக் கொம்பன்னாய்!*
*வண்ட லயர்மணன்மேல் வந்து.*

*சொற்பிரிப்பு:*
*நின் நோக்கம் கொண்ட மான், தண் குரவ நீழல், காண்;*
*பொன் நோக்கம் கொண்ட பூங் கோங்கம் காண்;-பொன்நோக்கம்*
*கொண்ட சுணங்கு அணி மென் முலைக் கொம்பு அன்னாய்!-*
*வண்டல் அயர், மணல்மேல் வந்து!*

*மான் போன்ற பார்வை கொண்ட பெண்ணே இங்கு மணலில் வந்து என்னுடன் விளையாடுவாயாக என்று தலைவன் அழைக்கிறான்.*
*உன்னுடைய பார்வையைப் போன்ற பார்வையைக் கொண்ட மான் குளிர்ந்த குராமரத்தினது நிழலில் நிற்பதைக் காண்பாய். பொன்னால் ஆன பூக்களைப் போன்ற பூக்களை உடைய கோங்க மரங்களைக் கண்டு களிப்பாய், பொன் போன்று தோன்றும் தேமல்களை அணியாகக் கொண்டுள்ள மென்மையான முலைகளையுடைய, பூங்கொம்பினைப் போன்ற பெண்ணே! இவ்வழகிய மணலிடத்தே வந்து விளையாட்டினை மேற்கொள்வாயாக. (என்று தலைவன் தலைவியை நோக்கிக் கூறுகிறான்.)*

*நின்னுடைய நோக்கின் றன்மையைக் கொண்ட மான்களைப் பாராய்; குளிர்ந்த குரவ நீழலைப் பாராய்; பொன்னினது காட்சியைக் கொண்ட பூங்கோங்குகளைப் பாராய்; பொன்னினது காட்சியைக் கொண்ட சுணங் கணிந்த மென்முலையையுடைய கொம்பன்னாய்! மணன்மேல் வந்து விளையாட்டை விரும்பாய்.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*தலைவன் தலைவியை நோக்கி, "மான்களையும், குராமரத்தின் நிழலின் தன்மையையும் பாராய். கோங்க மரங்களைக் காண்பாய். இந்த அழகிய மணலிடத்தில் விளையாடுவாயாக!" என்று கூறினான்.(பால சங்கரன் உரை)*

71. சுரத்திடைச் சென்ற செவிலிக்குத் தலைமகனையும் தலைமகளையும் கண்டார் சொல்லிய வார்த்தையைத் தாங்கள் கேட்டார்க்குச் சொல்லி ஆற்றுவித்தது

*அஞ்சுடர்நீள் வாண்முகத் தாயிழையு மாறிலா*
*வெஞ்சுடர்நீள் வேலானும் போதரக்கண் - டஞ்சி*
*யொருசுடரு மின்றி யுலகுபா ழாக*
*இருசுடரும் போந்தனவென் றார்.*

*சொற்பிரிப்பு:*
*அம் சுடர் நீள் வாள் முகத்து ஆயிழையும், மாறு இலா*
*வெஞ் சுடர் நீள் வேலானும், போதரக் கண்டு, அஞ்சி,*
*'ஒரு சுடரும் இன்றி உலகு பாழாக,*
*இரு சுடரும் போந்தன!' என்றார்.*

*நிலவையும் கதிரையும் ஒத்திருந்த தலைவியும் தலைவனும் அந்தப் பாலை நிலத்தின் வழி சென்றதைக் கண்டதாக வழிப்போக்கர்கள் செவிலித்தாயிடம் கூறுகிறார்கள்.*
*அழகிய நிலவு போன்ற, மிகுந்த ஒளிமிக்க முகம் கொண்ட, அணிகலன்களை அணிந்திருந்த தலைவியும், ஒப்பிடவியலா வெம்மை கொண்ட ஒளியினையும், நீட்சியினையுங் கொண்ட வேலினையுடைய தலைவனும், இப்பாலையின் வழியே செல்வதைக் கண்டு; அச்சமுற்று, இரு சுடர்களில் ஒன்றும் இல்லாமல், உலகமெல்லாம் கெடும்படி அவ்விரண்டு சுடர்களும் இந்தச் சுரத்தின் வழியே போகின்றன என்றார்கள் (தலைவனும் தலைவியும் பாலை வழியே சென்றதைக் கண்ட வழிப்போக்கர்கள் இவ்வாறு செவிலித்தாயிடம் கூறுகிறார்கள்.)*

*அழகிய மதிபோன்ற நீண்ட ஒளியையுடைய முகத்தாயிழையும் எதிரில்லாத வெஞ்சுடர்நீள் வேலானும் இச்சுரத்தின்கண்ணே போதரக்கண்டு அஞ்சி, இரு சுடருள் ஒருசுடருமின்றியே உதயம் பழாம் வகை இரு சுடரும் அச்சுரத்தே போந்தன என்று கண்டார் சிலர்சொன்னார்.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"அழகிய சந்திரனைப் போன்ற முகத்தை உடைய தலைவியும், ஒப்பில்லாத ஒளியையும் வேலையும் கொண்ட தலைவனும், இந்தப் பாலை வழியில் செல்ல, அவர்களைப் பார்த்து அஞ்சி இரண்டு சுடர்களுள் ஒன்றும் இல்லாது உலகம் முழுவதும் கெடுமாறு இரண்டு சுடர்களும் மறைந்து சென்றன" என்று கண்டோர் செவிலியிடம் கூறினர்.(பால சங்கரன் உரை)*

*72. சுரத்திடைச் சென்ற செவிலியைத் தலைமகளைக் கண்டார் சொல்லி ஆற்றுவித்தது*

*முகந் தாமரைமுறுவ லாம்பல்கண் ணீல*
*மிகந்தார் விரல்காந்த ளென்றென் - றுகந்தியைந்த*
*மாழைமா வண்டிற்கா நீழல் வருந்தாதே*
*யேழைதான் செல்லு மினிது.*

*சொற்பிரிப்பு:*
*''முகம் தாமரை; முறுவல் ஆம்பல்; கண் நீலம்;*
*இகந்து ஆர் விரல் காந்தள்'' என்று என்று, உகந்து இயைந்த*
*மாழை மா வண்டிற்கு ஆம் நீழல், வருந்தாதே,*
*ஏழைதான் செல்லும், இனிது.*

*செவிலித்தாயே, அழகிய தலைவி துன்பம் ஏதுமின்றித்தான் பாலைநில வழியே சென்றாள், எனவே கவலையற்க என வழிப்போக்கர் செவிலித்தாய்க்கு ஆறுதல் கூறினர்.*
*தலைவியின் முகத்தினை தாமரை மலர் எனக் கருதியும், புன்னகைக்கும் பற்களை ஆம்பல் மலர் எனக் கருதியும், கண்களை நீலோற்பல மலர் எனக் கருதியும், ஒப்பிட முடியாத வகையில் அமைந்துள்ள கை விரல்களைக் காந்தள் மலரின் அரும்பு எனக் கருதியும், அவ்வுறுப்புகளை விரும்பி தலைவியோடு நெருங்கி மொய்க்கும் வண்டுக்குத் தக்க வகையில் நிழல் கொடுத்தவாறு வருத்தமின்றி உனது மகள் நன்றாகச் சென்றாள் (ஆகவே, நீ அவள் நிலை குறித்து வீணே கவலை கொள்ளத் தேவையில்லை என்று செவிலித் தாய்க்கு எதிர்ப்பட்ட வழிப்போக்கர் ஆறுதல் கூறினர்.)*

*இவள் முகம் தாமரை மலர், இவள் முறுவலையுடைய வாய் ஆம்பல் மலர், இவள் கண் நீல மலர், ஒன்றை யொன்றொவ்வாது கடந் தார்ந்த விரல்கள் காந்தளரும்பு என்று கருதிக் காதலித்துப் பொருந்திய மாழைமா வண்டிற்குத் தக்க நீழலிலே வருத்தமின்றி நின்னுடைய ஏழைசெல்லாநின்றாள் இனிதாக.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"தாமரை மலர் போன்ற முகம், ஆம்பல் போன்ற பற்கள், குவளை போன்ற கண்கள், காந்தள் போன்ற விரல்கள் என எண்ணி, அவ் உறுப்புகளை விரும்பித் தலைவியுடன் நெருங்கி வண்டுகள் வாழும். அத்தகைய வண்டுகளுக்கு தக்கதான சோலையில் துன்புற்று தன் தலைவியுடன் இன்று சென்றாள்" என செவிலிக்குக் கண்டவர் கூறினர்.(பால சங்கரன் உரை)*

*73. முன்னை ஞான்று, உடன்போக்கு வலித்து, தலைமகனையும் தலைமகளையும் உடன்படுவித்து, பின்னை அறத்தொடு நிலை மாட்சிமைப்பட்டமையால் தலைமகளைக் கண்டு, தோழி உடன்போக்கு அழுங்குவித்தது*

*செவ்வாய்க் கரியகட் சீரினாற் கேளாதுங்*
*கவ்வையாற் காணாது மாற்றாது - மவ்வாயந்*
*தார்த்தத்தை வாய்மொழியுந் தண்கயத்து நீலமு*
*மோர்த்தொழிந்தா ளென்பேதை யூர்ந்து.*

*சொற்பிரிப்பு:*
*செவ் வாய், கரிய கண், சீரினால் கேளாதும்,*
*கவ்வையால் காணாதும், ஆற்றாதும், அவ் ஆயம்,*
*தார்த் தத்தை வாய் மொழியும், தண் கயத்து நீலமும்,*
*ஓர்த்து ஒழிந்தாள்-என் பேதை ஊர்ந்து.*

*முன்னர் தலைவனுடன் உடன் போக்கை மேற்கொள்ள விருந்த தலைவி, பின்னர் அச்செய்கையால் ஏற்படக் கூடிய துயரை எண்ணிக் கைவிட்டாள் என்று தோழி தலைவனிடம் கூறினாள்.*
*கழுத்தில் சிவந்த மாலை அணிந்தது போன்ற கிளியின் சிவந்த வாயினின்றும் வெளிப்படும் கிள்ளை மொழியைக் கேட்க இயலாமல் போகும், குளிர்ந்த குளத்தில் மலர்ந்திருக்கும் கருமையான கண்களையொத்த நீல மலர்களைக் காண இயலாமல் போகும், சிறப்பு மிக்க உறவினரும் சுற்றமும் அலரால் தோன்றக் கூடிய பழிச்சொல் கேட்டு துயர் கொள்வார் என்பனவற்றைக் கருதி வருந்தியதாலும் முன்னர் பேதையாகிய என் தலைவி உடன் போக்கு எண்ணத்தைக் கைவிட்டாள் (என்று தலைவனிடம் தோழி கூறினாள்.)*

*செவ்வாயின்கட் டார்த்தத்தை வாய் மொழியைக் கேளாதும், கரிய கண்ணின்கட் டண்கயத்து நீலங்களின் றன்மைகளைக் காணாதும், அவ்வாயம் ஆற்றாதொழிவதனை யோர்த்துப் பின்பு உடன்போக்கை யொழிந்தாள்;என் பேதை அலர் காரணத்தான் முன்பு உடன்போக்கை மேற்கொண்டு.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"அலரால் முன்பு உடன்போக்கைக் கொண்டாள். ஆனால் கிளியின் பேச்சினைக் கேட்க முடியாததாலும், குளிர்ந்த குளத்தில் உள்ள நீல மலர்களைப் பார்க்க இயலாததாலும் தோழியர் வருந்துவதாலும் உடன்போக்கைக் கைவிட்டாள்" என்று தோழி தலைவனிடம் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*74. காமம் மிக்க கழிபடர் கிளவி; நிலத்தான் பாலை; ஒழுக்கத்தான் நெய்தல்*

*புன்புறவே சேவலோ டூடல் பொருளன்றா*
*லன்புற வேயுடையா ராயினும் - வன்புற்*
*றதுகா ணகன்ற வழிநோக்கிப் பொன்போர்த்*
*திதுகாணென் வண்ண மினி.*

*சொற்பிரிப்பு:*
*புன் புறவே! சேவலோடு ஊடல் பொருள் அன்றால்;*
*அன்பு உறவே உடையார் ஆயினும், வன்புற்-*
*றது காண்! அகன்ற வழி நோக்கி, பொன் போர்த்து,*
*இது காண், என் வண்ணம், இனி!*

*புறாவே ஊடல் கொள்வதால் பயனில்லை, என்னைவிட்டு நீங்கிய தலைவன் சென்ற சுவட்டைக் கண்டு எனது மேனியில் பசலை பூத்தது, அன்பு கொண்டவராயினும் கடின நெஞ்சம் கொண்டு பிரிந்துவிடுவார் என்று தன்னிலைக்கு இரங்கிப் புலம்புகிறாள் தலைவி.*
*சிறிய பெட்டைப் புறாவே! உனது துணையாகிய ஆண்புறாவோடு ஊடல் கொள்வதால் பயன் ஒன்றும் இல்லை. ஏனெனில், அன்பு கொண்ட உறவு மனநிலையில் உள்ளவரே என்றாலும், கடினமான இதயம் கொண்டவராக எனது தலைவன் போலப் பிரிந்து சென்று விடுவதைப் பார்ப்பாயாக. தலைவன் தேரோடு வந்து சென்ற சுவடு கொண்ட அகன்ற வழியினைப் பார்த்து, பொன்னிறம் போர்த்தியது போன்ற பசலை நோய் மேனியெல்லாம் கொண்டு நிற்பது இனி என் நிலையாக இருப்பதைப் பார்ப்பாயாக. (இப்பாடலில் நெய்தலின் இரங்கல் ஒழுக்கமும் இருத்தலைக் காட்டி திணை மயக்கம் காட்டப்படுகிறது.)*

*புல்லிய நிறத்தையுடைய பேடைப்புறாவே! நின்சேவலோடூடல் நினக்குக் காரிய மன்றால்; எங்காதலர் எமக் கன்பு மிகவுடையாராயினும், அவர் மனநெகிழாது வலியரான தன்மையைப் பாராய்; அவர் தேரோடும் வந்து நீங்கிய வழிச் சுவடு நோக்கிப் பொன்னிறம் போர்க்க வந்த வண்ணமிதனைப் பாராய்.இப்பொழுது.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"பெண் புறாவே! நீ ஊடுதலை நீக்குவாயாக! ஏனெனில் எம் காதலர் அன்புடன் இருந்தவர். இப்போது பிரிந்து உள்ளம் நெகிழாது வலியவர் ஆனார். தேரின் அடிச்சுவட்டைப் பார்த்து, உடலில் பசலை பரவி காணப்படும் என் நிலையைக் காண்பாயாக!" எனத் தலைவி கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*75. மகட் போக்கிய தாய் சொல்லியது*

*எரிந்து சுடுமிரவி யீடில் கதிரான்*
*விரிந்து விடுகூந்தல் வெஃகாப் - புரிந்து*
*விடுகயிற்றின் மாசுணம் வீயுநீ ளத்த*
*மடுதிறலான் பின்சென்ற வாறு.*

*சொற்பிரிப்பு:*
*எரிந்து சுடும் இரவி ஈடு இல் கதிரான்,*
*விரிந்து விடு கூந்தல் வெஃகா, புரிந்து*
*விடு கயிற்றின் மாசுணம் வீயும் நீள் அத்தம்,*
*அடு திறலான் பின் சென்ற ஆறு.*

*கொடிய பாலை நில வழியே தனது தலைவனைப் பின்தொடர்ந்து சென்றுவிட்டாளே என் மகள், அந்த வழி அவளுக்கு அச்சம் தருவதாக இருக்குமோ என்று துயர் கொள்கிறாள் தாய்.*
*எரியும் தழல் போலச் சுடுகின்ற பகலவனின் ஒப்பில்லாத கதிர்களால் வெம்மை சூழ்ந்த பாலை நிலத்தில், விரித்து விட்ட கூந்தலையுடைய என்மகள் விருப்பத்தோடு செல்லும் வழியில், முறுக்கி விட்ட கயிற்றினைப் போன்று மலைப்பாம்புகள் புரண்டு இறந்து கிடக்கும் நீண்ட கடத்தற்கரிய பாலை நில வழியாமே போர்வன்மை மிக்க தனது தலைவனின் பின்னர் அவள் சென்றுள்ள வழியானது (அத்தகைய கொடிய வழி மகளுக்கு அச்சம் தருமோ என அன்னை தனக்குள் கேட்டு கவலை கொள்கிறாள்.)*

*அழன்று சுடாநின்ற பகலோனது ஒப்பில்லாக் கதிரான் மாசுணங்கள் முறுக்கிவிட்ட கயிறுபோலப் புரண்டழியும் அத்தம், விரிந்துவிட்ட கூந்தலையுடையாள் அடுதிறலான் பின் விரும்பிச்சென்ற வழி.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"என் மகள் தலைவனுடன் சென்ற வழி சூரியனின் வெப்பத்தால் மலைப்பாம்புகள் மாண்டு கிடக்கின்ற பாலை வழியாகும். அத்தகைய வழியில் செல்வாளோ!" என நற்றாய் தனக்குள் கூறி வருந்தினாள்.(பால சங்கரன் உரை)*

*76. பொருள் வலித்த நெஞ்சிற்குச் சொல்லித் தலைமகன் செலவு அழுங்கியது*

*நெஞ்ச நினைப்பினு நெற்பொரியு நீளத்த
மஞ்ச லெனவாற்றி னஞ்சிற்றா - லஞ்சிப்
புடைநெடுங் காதுறப் போழ்ந்தகன்று நீண்ட
படைநெடுங்கண் கொண்ட பனி.*

*சொற்பிரிப்பு:
நெஞ்சம்! நினைப்பினும், நெல் பொரியும் நீள் அத்தம்,
'அஞ்சல்!' என ஆற்றின், அஞ்சிற்றால்; அஞ்சி,
புடை நெடுங் காது உறப் போழ்ந்து அகன்று நீண்ட
படை நெடுங் கண் கொண்ட, பனி.*

*என் நெஞ்சே! பொருள் ஈட்ட நான் பாலை வழி செல்ல இருப்பதை எண்ணி அஞ்சாதே என்று நான் தலைவியை ஆற்றுவிக்கும் முன் அவளது பிரிவை எண்ணி நான் அஞ்சுவதை உணர்ந்து கொண்ட தலைவியும் அஞ்சி கண்கலங்கினாள், அவளை எவ்வாறு பிரிவது எனத் தலைவன் கலங்குகிறான்.
என் நெஞ்சே! சொல்ல நினைத்தாலும், பகலவனின் கொடிய வெப்பத்தால் நெல்லும் பொரியாகப் பொரிந்துவிடக் கூடிய பாலை நிலத்தின் நெடிய வழியில் நான் பொருள் ஈட்டச் செல்ல விருப்பது குறித்து நீ அஞ்சாதே என்று எனது தலைவிக்கு ஆறுதலாகச் சில சொற்கள் சொல்வதற்குள், அவளைப் பிரிவதை எண்ணி என் மனம் அச்சமுற்றது. அதனால் எனது முக மாறுதலைக் கண்டு அஞ்சிற்று அடுத்துள்ள செவிகள் வரை நீண்டு அகண்ட வேலினைப் போன்று தோற்றமளிக்கும் அவளது பெரிய நீள் விழிகள், அவற்றில் கண்ணீர் துளிர்த்தது. (அதனால், அவளை நான் பிரிந்து செல்வது இயலாத ஒன்று என்று தலைவன் தனக்குள் சொல்லிக் கொள்கிறான்.)*

*என்னெஞ்சமே! இவளை ஆற்றுவிக்குஞ் சில சொற்களைச் சொல்ல நினைக்கின்றாயாயின், இவணோ தான் நெற்பொரியும் நீளத்தத்தைச் சொல்ல நினைப்பதற்கு முன்னே பிரிவினை யஞ்சிற்றால்; புடைநெடுங் காதுறப் போழ்ந்தகன்று நீண்ட படை நெடுங்கண்களும் பிரிவினை யஞ்சிப் பனி கொண்டன: ஆதலான் நமக் கிவளைப் பிரியமுடியாது.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"என் உள்ளம் இவளை அஞ்ச வேண்டாம் எனக் கூற எண்ணினாலும், பிரிவை நினைத்து அச்சம் கொண்டதை முகக்குறிப்பால் உணர்ந்த தலைவியின் கண்கள் நீரைக் கொண்டன. ஆதலால் இவளை நான் பிரிந்து செல்வது இயலாத ஒன்று" எனத் தலைவன் கூறினான்.(பால சங்கரன் உரை)*

*77. வினை முற்றிய தலைமகன் தலைமகளை நினைந்த இடத்து, தலைமகள் வடிவு தன் முன் நின்றாற் போல வந்து தோன்ற, அவ் வடிவை நோக்கிச் சொல்லி, ஆற்றுவிக்கின்றது*

*வந்தாற்றான் செல்லாமோ வாரிடையாய்! வார்கதிரால்*
*வெந்தாற்போற் றோன்றுநீள் வேயத்தந் - தந்தார்*
*தகரக் குழல்புரளத் தாழ்துகில்கை யேந்தி*
*மகரக் குழைமறித்த நோக்கு.*

*சொற்பிரிப்பு:*
*வந்தால்தான், செல்லாமோ-ஆர் இடையாய்!-வார் கதிரால்,*
*வெந்தால்போல் தோன்றும் நீள் வேய் அத்தம், தந்து ஆர்*
*தகரக் குழல் புரள, தாழ் துகில் கை ஏந்தி,*
*மகரக் குழை மறித்த நோக்கு?*

*பெண்ணே என் எதிரே என்னைச் செல்லவிடாமல் தடுக்கும் உனது பார்வையுடன் நீ நின்றாய் என்றால், என்னால் உன்னை விட்டுச் செல்ல முடியுமா? என்று தன் மனக்கண்ணில் தோன்றிய தலைவியின் உருவத்துடன் வேலை நிறைவேறிய பின்னர் மீண்டும் வாழிடம் திரும்ப எண்ணும் தலைவன் கூறுகிறான்.*
*என் எதிரே நீ வந்தால் மீண்டும் செல்ல மனம் வருமா? அழகிய இடையைக் கொண்டவளே!! நீண்ட கதிர்கள் கொண்ட பகலவனால் வெந்துவிட்டது போலக் காணப்படும் நீண்ட மூங்கில்கள் வளர்ந்திருக்கும் பாலை நிலம் வழியே, தகரப் பொடி நிறைந்த சாந்தினால் மணம் ஊட்டப்பட்ட உனது நீண்ட கூந்தல் அவிழ்ந்து புரள, தாழ்ந்து தொங்கும் ஆடையைக் கையில் ஏந்திக் கொண்டு, மகரக் குழையைக் காதில் அணிந்த நீ என்னைச் செல்ல விடாமல் தடுக்கும் உன் பார்வையைக் கண்ட பிறகு? ( என்று மனக்கண் முன் தோன்றிய தலைவியின் உருவம் கண்டு அவளைப் பிரியா முடியாத நிலையை அவளிடம் தலைவன் சொல்கிறான்.)*

*கொண்டணிந்து நிறையப்பட்ட தகரத்தையுடைய குழல்கள் அசையத் தாழ்ந்து துகிலைக் கையானே ஏந்தி மகரக்குழை மறித்த நோக்குடனே நீ வந்தால் யாம் போகோமோ? அரிய இடையினை யுடையாய்! நீஇரங்க வேண்டா.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"சிறிய இடையையும், மணமிக்க கூந்தல் அவிழ்ந்து தொங்க, நெகிழ்ந்த ஆடையை வலக்கையால் பற்றிக் கொண்டு, காதில் மகரக் குழையாட மருண்ட பார்வையுடன் தோன்றும் உன் தோற்றத்தைப் பார்த்தத் தலைவன், வெப்பம் மிகுந்த பாலை வழியில் திரும்பி உன்னிடம் செல்லும் செலவை ஒழிப்போமா? ஒழியோம். உன்னுடன் வருவோம். எனவே நீ இரங்க வேண்டாம்" எனக் கூறினான்.(பால சங்கரன் உரை)*

*78.  'ஆற்றாள்!' எனக் கவன்ற தோழிக்கு, 'ஆற்றுவல்' என்பதுபடச் சொல்லியது*

*ஒருவகை யிருமருப்பின் மும்மதமால் யானை*
*பருகுநீர் பைஞ்சுனையிற் காணா - தருகல்*
*வழிவிலங்கி வீழும் வரையத்தஞ் சென்றா*
*ரழிவில ராக வவர்.*

*சொற்பிரிப்பு:*
*ஒரு கை, இரு மருப்பின், மும் மத, மால், யானை*
*பருகு நீர் பைஞ் சுனையில் காணாது, அருகல்,*
*வழி விலங்கி வீழும் வரை அத்தம் சென்றார்,*
*அழிவிலர் ஆக, அவர்!*

*தலைவன் பிரிவைத்  தாங்க மாட்டாளே  தலைவி எனக் கவலையுறும் தோழிக்கு, அவர் நல்ல வகையில் திரும்புவார் என்று கூறி தலைவி தனது உறுதியை உணர்த்துகிறாள்.*
*துதிக்கையொன்றையும், இரண்டு தந்தங்களையும்,  மூன்று மதங்களையுங் கொண்ட பெரிய யானைகள்,  தாகத்திற்குத்  தண்ணீர் குடிக்க விரும்பி சுனைகளிடம் சென்று, அங்கு நீர்   கிடைக்கப் பெறாது, மேலும் நடக்க இயலாமல் அந்த சுனை அருகிலேயே துவண்டு விழுந்து  கிடக்கக்  கூடிய மலைகளையுடைய பாலை நிலம் வழியே சென்றுள்ளார் தலைவன்.  அவர் அங்கு எந்த இடரையும் எதிர் கொள்ளாது நல்லவிதமாகத் திரும்பட்டும் (என்று தலைவி தோழியிடம் கூறுகிறாள்.)*

*ஒரு கையினையும் இருகோட்டினையும் மூன்று மதத்தினையும் உடைய மால் யானைகள் பருகு நீரைப் பைஞ்சுனையின்கட் காணாவாய் மருங்கே வழிவிலங்கித் தளர்ந்துவீழும் வரைகளையுடைய அத்தத்தைச் சென்ற அவர் அவ்வழிஇடையூறின்றி அழிவிலராக.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"பெரிய யானை தண்ணீர் இல்லாமல், அந்தச் சுனையை விட்டு அகலாமல் விழுந்து கிடக்கும் பாலை வழியில் சென்ற நம் தலைவர் எத்தகைய துன்பமும் இல்லாமல் திரும்புவாராக" எனத் தலைவி தோழிக்குக் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*79. பருவம் காட்டி, தலைமகளைத் தோழி வற்புறுத்தியது*

*சென்றார் வருதல் செறிதொடி! சேய்த்தன்றா*
*னின்றார்சொற் றேறாதாய்! நீடின்றி - வென்றா*
*ரெடுத்த கொடியி னிலங்கருவி தோன்றுங்*
*கடுத்த மலைநாடு காண்.*

*சொற்பிரிப்பு:*
*சென்றார் வருதல், செறிதொடி! சேய்த்துஅன்றால்;*
*நின்றார் சொல் தேறாதாய், நீடு இன்றி, வென்றார்*
*எடுத்த கொடியின் இலங்கு அருவி தோன்றும்*
*கடுத்த மலை நாடு காண்!*

*தலைவன் விரைவில் வருவேன் என்று சொன்ன சொல்லின் உறுதியை அறியாமல் துயர் கொள்ளும் தலைவியே, தலைவன் வரும் நாள் வெகு தொலைவில் இல்லை, அவர் வருவேன் என்று சொன்ன பருவகாலம் துவங்கிவிட்டது. வரப்போகும் அவரைக் கண்டு களிப்பாயாக என்று தோழி தலைவியிடம் கூறுகிறாள். பொருள் ஈட்டும் பொருட்டு நம்மைப் பிரிந்து சென்ற தலைவர் மீண்டும் திரும்பி வரும் நாள், கைகள் நிறைய வளையணிந்த தலைவியே, அருகில்தான் உள்ளது. அல்லாமல் உன்னிடம் அன்பு செலுத்திய தலைவரின் சொல்லின் உறுதியை அறியாமல் இருக்கின்றாயே !!! காலம் தாழ்த்தமாட்டார். போரில் வெற்றி பெற்றவர் உயர்த்திப் பிடிக்கும் கொடி அசைவது போன்று அருவி விழும் வேனிலால் வறண்ட இம்மலை நாட்டிற்கு வரும் தலைவரைக் கண்டு மகிழ்வாயாக (என்று தோழி தலைவியிடம் சொன்னாள்.)*

*நம்மைப் பிரிந்து போயினார் வருதல் செறி தொடி! சேய்த்தன்றால்; நின்மாட்டு நின்றொழுகுகின்றாருடைய சொற்களைத் தெரியாதாய்! போரின்கண் வென்றாரெடுத்த கொடிகள் போலத் தெளிந்திலங்கருவி தோன்றா நின்றது மிக்க மலை நாடு; ஆதலால், நீடின்றி இன்றே இரவின்கட் காண்பாயாக.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"பல வளையலை அணிந்தவளே! வேனிலால் வறண்ட இம்மலை நாடு கார்கால மழையால் நீர் வீழ்ச்சி பெருகிக் காணப்படுகிறது. பொருளுக்காகப் பிரிந்த தலைவர் திரும்பி நம்மிடம் வருதல் தொலைவில் இல்லை. இன்று இரவில் தலைவனைக் கண்டு மகிழ்வாயாக" எனத் தோழி தலைவியிடம் கூறியது.(பால சங்கரன் உரை)*

*80. பருவம் காட்டி, தலைமகளைத் தோழி வற்புறுத்தியது*

*உருவவேற் கண்ணாய்! ஒருகாற்றேர்ச் செல்வன்*
*வெருவிவீந் துக்கநீ ளத்தம் - வருவர்*
*சிறந்து பொருடருவான் சேட்சென்றா ரின்றே*
*யிறந்துகண் ணாடு மிடம்.*

*சொற்பிரிப்பு:*
*உருவ வேல் கண்ணாய்! ஒரு கால் தேர்ச் செல்வன்*
*வெருவ, வீந்து உக்க நீள் அத்தம், வருவர்,*
*சிறந்து பொருள் தருவான் சேட் சென்றார் இன்றே;*
*இறந்து கண், ஆடும் இடம்.*

*தலைவியே பொருள் தேடச் சென்ற தலைவன் விரைவில் வருவார். துடிக்கும் எனது இடது கண் அந்த நல்ல செய்திக்கு அறிகுறியாகும், கவலை வேண்டாம் எனத் தோழி தலைவியிடம் கூறுகிறாள்.*
*அழகிய வேலினையொத்த கண்களையுடைய தலைவியே!  ஒற்றை சக்கரம் கொண்ட தேரில் செல்லும் கதிரவனால், அச்சமூட்டும் வகையில் மிக அவிந்துபோன நீண்ட பாலைநில வழியாகத் தலைவன் விரைவில் வந்து சேர்வார். தனது முயற்சியின் மேன்மையால் பொருள் தேடும் பொருட்டு நெடுந் தொலை சென்ற தலைவர் இன்றே வருவார்.  இந்த நல்ல செய்தியை உணர்ந்து மிகவும் துடிக்கிறது எனது இடது கண் (ஆதலால், கவலை கொள்ளாதே தலைவி, தலைவன் விரைவில் வருவார் என்று தோழி தலைவிக்கு ஆறுதல் சொல்கிறாள்.)*

*அஞ்சத் தக்கவேல் போன்ற கண்களை யுடையாய்! ஒரு காலையுடைய தேர்ச் செல்வனாற் பிறர் கண்டார் வெருவும் வகை வீந்தவிந்த கானத்தானே முயற்சியாற் சிறந்து பொருடருவான் வேண்டிச் சென்றவர் இன்றே வருவர்; மிக்குக் கண் இடமாடா நின்றது.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"வேலைப் போன்ற கண்களை உடையவளே! என் இடது கண் துடிக்கிறது. அச்சத்தைத் தரும் பாலை வழியில் பொருளைத் தேடிச் சென்ற தலைவர் இன்றே வருவார். ஆதலால் நீ துன்பம் உறாது இருப்பாயாக" எனத் தோழி தலைவியிடம் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

81. *தலைமகள் இற்செறிப்புக் கண்ட பின்னை, அவள் நீங்கிய புனம் கண்டு, ஆற்றானாய் மீள்கின்ற தலைமகன் சொல்லியது; சுரத்திடைச் சென்ற செவிலித்தாய் சொல்லியதூஉம் ஆம்*

*கொன்றாய்! குருந்தே! கொடிமுல்லாய்! வாடினீர்*
*நின்றே னறிந்தே னெடுங்கண்ணாள் - சென்றாளுக்*
*கென்னுரைத்தீர்க் கென்னுரைத்தாட் கென்னுரைத்தீர்க் கென்னுரைத்தாண்*
*மின்னிரைத்த பூண்மிளிர விட்டு.*

*சொற்பிரிப்பு:*
*கொன்றாய்! குருந்தே! கொடி முல்லாய்! வாடினீர்;*
*நின்றேன் அறிந்தேன்; நெடுங்கண்ணாள் சென்றாளுக்கு*
*என் உரைத்தீர்க்கு, என் உரைத்தாட்கு, என் உரைத்தீர்க்கு, என் உரைத்தாள்-*
*மின் நிரைத்த பூண் மிளிர விட்டு?*

*இற்செறிப்புக் காரணமாக சென்றுவிட்ட தலைவியைத் தேடிச் சென்ற தலைவன் தனது ஆற்றாமையால் மரம் செடி கொடிகளிடம் கூறிப் புலம்பியது. கொன்றைமரமே! குருந்தமரமே! கொடிகளாகப் படர்ந்துள்ள முல்லைச் செடியே! நீங்கள் மிகவும் வாட்டமுற்றுக் காணப் படுகின்றீர்களே! உங்கள் எதிரில் நிற்கும் நான், உங்கள் துயரின் காரணம் தலைவியுடன் நீங்கள் கொண்ட உரையாடல் என்று அறிந்து கொண்டேன். நீண்ட கண்களையுடைய அவள் இவ்விடத்தை விட்டுச் செல்லும்படி என்ன கூறினீர்கள்? உங்களிடம் அவள் என்ன கூறினாள்?அதற்கு நீங்கள் அவளுக்கு என்ன மறுமொழி அளித்தீர்கள்? அதற்கு அவள் உங்களிடம் என்ன பதில் சொன்னாள் ? மிளிரும் அணிகலன்களைப் பூண்ட அவள் அவற்றை மிளிரவிட்டுக் கொண்டிருக்க என்ன உரையாடல் இங்கு நடந்தேறியது? (என்று இற்செறிப்புக் காரணமாகப் புனத்தை விட்டுச் சென்றுவிட்ட தலைவியைத் தேடிச் சென்ற தலைவன் தனது ஆற்றாமையால் மரம் செடி கொடிகளிடம் கேள்வி எழுப்பிக் கொண்டிருந்தான்; இப்பாடல் இற்செறிப்புக் காரணமாக தலைவனுடன் உடன் போக்கு சென்றுவிட்ட தலைவி குறித்து மரங்களையும் கொடிகளையும் பாலைநில வழியே அவளைத் தேடிச் செல்லும் செவிலித்தாய் கேட்பதாகவும் குறிப்பிடப்படுகிறது.)*

*கொன்றாய்! குருந்தே! கொடி முல்லாய்! நீர் வாடிநின்றீர்; இதற்குக் காரணம் யானறிந்தேன்; நெடுங் கண்ணாள் இங்கு நின்று போகின்றாட்கு நீர் என்னுரைத்தீர்? நுமக்கு அவள் என்னுரைத்தாள்? அவட்கு நீர் பின்னை என்னுரைத்தீர்? அவள் உமக்குப் பின்னை என்னுரைத்தாள், மின்னிரைத்த பூண் விட்டு மிளிராநின்று?(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"கொன்றை, குருத்த, முல்லை போன்ற மரம், கொடிகளே நீங்கள் வாடி இருக்கிறீர்கள். இதற்குக் காரணம் நீங்கள் தலைவியுடன் உரையாடியதே! நீங்கள் தலைவிக்கு யாது கூறினீர்? அவள் உமக்கு யாது கூறினாள்?" எனத் தலைவன் ஆற்றாமையால் வினவினான்.(பால சங்கரன் உரை)*

*82. தலைமகனது செலவுக் குறிப்பு அறிந்து ஆற்றாளாய தலைமகளைத் தோழி உலகினது இயற்கை கூறி, ஆற்றாது உடன்படுத்துவித்தது*

*ஆண்கட னாமாற்றை யாயுங்கா லாடவர்க்குப்*
*பூண்கடனாப் போற்றிப் புரிந்தமையாற் - பூண்கடனாச்*
*செய்பொருட்குச் செல்வராற் சின்மொழி! நீசிறிது*
*நைபொருட்கட் செல்லாமை நன்று.*

*சொற்பிரிப்பு:*
*ஆண் கடன் ஆம் ஆற்றை ஆயுங்கால், ஆடவர்க்குப்*
*பூண் கடனாப் போற்றிப் புரிந்தமையால், பூண் கடனாச்*
*செய் பொருட்குச் செல்வரால்;-சின்மொழி!-நீ சிறிது*
*நை பொருட்கண் செல்லாமை நன்று.*

*தலைவியே ஆண்களின் கடமை பொருள் தேடுதல் என்பதால் தலைவன் பொருள் தேடிச் சென்றுள்ளார். பிறர் அறியும் வண்ணம் உனது துயரை வெளிக்காட்டாதிருக்க வேண்டி நீ அதிகம் பேசாமல் இருத்தல் நல்லது எனத் தோழி தலைவிக்குக் கூறுகிறாள்.*
*ஆண்களின் கடமை என்ன என்று அவர்களுக்கான நெறியினை ஆராய்ந்து பார்த்தால், ஆண்மக்கள் மேற்கொள்ள வேண்டிய கடமையாகப் பொருள் தேடுதலைப் பெரியோர் வகுத்து வைத்துள்ளனர். எனவே, தலைவன் தான் மேற் கொள்ள வேண்டிய கடமையாகச் செல்வம் தேடிச் சென்றுள்ளார். ஆதலால், சுருக்கமாக உரையாடும் முறையை மேற்கொண்டு நீ சிறிது காலம் பிரிவால் வருந்துகின்ற உனது நிலையைப் பிறர் அறியாவண்ணம் மறைத்து வைப்பது நல்லது (என்று தலைவிக்குத் தோழி கூறினாள்.)*

*ஆள்வினைக் கடனாகிய நெறியை ஆராயுங்கால், ஆடவர்க்குப் பூணுங் கடனாகப் பாதுகாத்து நல்லார் சொல்லி மேவினமையாற் றமக்கு அவ் வாள்வினை பூணுங் கடனாகத் தேடும் பொருட்டுச் செல்வர் நங் காதலர்; ஆதலாற் சின்மொழியை யுடையாய்! நீயதற்கு மனனழியுந் திறத்தின்கட் செல்லாமை நன்று.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"தலைவியே! பொருள் தேடுதல் ஆண் மகனது கடமை என்று பெரியோர் வகுத்த நெறி. அத்தகைய கடமைக்காக நம் தலைவர் சென்றுள்ளார். ஆதலால் நீ சிறிது காலம் பிரிவால் வருந்தும் வகையில் புகாமல் ஆற்றியிருப்பது நல்லதாகும்" என்று தோழி உரைத்தாள்.(பால சங்கரன் உரை)*

*83. தலைமகன் செலவு உணர்த்திய தோழிக்குத் தலைமகள் உடன்படாது சொல்லியது*

*செல்பவோ சிந்தனையு மாகாதா னெஞ்செரியும்*
*வெல்பவோ சென்றார் வினைமுடிய - நல்லாய்!*
*இதடி கரையுங்கன் மாபோலத் தோன்றிச்*
*சிதடி கரையுந் திரிந்து.*

*சொற்பிரிப்பு:*
*செல்பவோ? சிந்தனையும் ஆகாதால்; நெஞ்சு எரியும்;*
*வெல்பவோ, சென்றார் வினை முடிய?-நல்லாய்!*
*இதடி கரையும்; கல் மா போலத் தோன்றும்;*
*சிதடி கரையும், திரிந்து.*

*தலைவன் பொருள் தேடி பாலை வழி செல்லவிருக்கிறான் என்று தோழி கூறியது கேட்டு தலைவி அதற்கு உடன்படாது சொல்லியது.*
*கொடிய பாலைநில வழியே செல்ல விரும்புவார் எவராவது உண்டோ? அப்படி ஒரு செயலை எண்ணிப் பார்க்கவும் இயலாது. அவ்வாறு நினைத்தாலே நெஞ்சு எரிவது போன்று துன்பம் தரும். பொருட்படுத்தாது அப் பாலைநில வழியே வெற்றிகரமாகச் சென்று மீண்டு வரமுடியுமா? தலைவன் அந்த வழியே சென்று பொருள் தேட எண்ணியது நிறைவேறுமா? நல்ல தோழியே! காட்டு எருமைகள் பிரிந்து காணாது போன காட்டெருமைப் போத்துக்களை நினைத்துக் கதறி அழுது கொண்டிருக்கும், கற்களும் யானைகள் பரவி நிற்பன போலத் தோற்றமளிக்கும். சிள்வண்டுகள் ஒலி எழுப்பியவண்ணம் திரிந்து கொண்டிருக்கும் அந்தப் பாலைநில வழிப் பயணம் செய்ய ஏற்ற வழியல்ல (என்று தலைவி தோழியிடம் கூறினாள்.)*

*இப்பெற்றித்தாகிய சுரத்தின்கட் செல்வாருளரே? நினைத்தலு மாகாதால்; நினைத்த நெஞ்சும் எரியும்; மாறிச் சுரத்தின்கட் சென்றார் சுரத்தை வெல்ல வல்லவரோ? தாமெடுத்துக் கொண்டவினை முடியும்படி; நல்லாய்!காட்டெருமைப் போத்துக்களைப் பிரிந்த பெண் எருமைகள் கதறா நிற்கும்; அங்குப் பலவாய்க் கிடந்த கற்களும் மா பரந்தாற்போலத் தோன்றும்; சிள் வீடுகளும் திரிந்து கதறா நிற்கும்ஆதலான். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*தலைவி தோழியிடம் "காட்டு எருமைகள் பிரிந்து, கற்கள் பரவி நிற்கும், சிள் வண்டுகள் திரியும் இடமான பாலை வழியில் எவரேனும் செல்வரா? செல்ல நினைத்த நெஞ்சு எரியும். பாலை வழியே காரியம் முடிய போய் மீளுதல் வெற்றியை அடைவரோ! அடையார். எனவே நம் தலைவர் பொருள்வயின் பிரிதல் பொல்லாத ஒன்றாகும்" எனத் தலைவி தோழியிடம் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*84. தலைமகன் செலவு உணர்த்திய தோழிக்குத் தலைமகள் உடன்படாது சொல்லியது*

*கள்ளியங் காட்ட கடமா விரிந்தோடத்*
*தள்ளியுஞ் செல்பவோ தம்முடையார் - கொள்ளும்*
*பொருளில ராயினும் பொங்கெனப்போந் தெய்யு*
*மருளின் மறவ ரதர்.*

*சொற்பிரிப்பு:*
*கள்ளிஅம் காட்ட கடமா இரிந்து ஓட,*
*தள்ளியும் செல்பவோ, தம்முடையார்-கொள்ளும்*
*பொருள் இலர் ஆயினும், பொங்கெனப் போந்து எய்யும்*
*அருள் இல் மறவர் அதர்?*

*கொள்ளையர்கள்  இரக்கமற்று கொலை செய்யக்கூடிய பாலை நில வழியாக அறிவுடைய எவரும் செல்ல விரும்ப மாட்டார்கள், ஆதலால் தலைவன் பொருள் தேடி அந்த வழியில் செல்வது நல்லதல்ல என்று தலைவி தோழியிடம் கூறுகிறாள். கள்ளிச் செடிகள் மிகுந்து வளர்ந்துள்ள காட்டு வழியில் காட்டுப்பசுக்கள் அஞ்சி ஓடிட, மறந்தும் செல்ல விரும்புவார்களா தனக்கென அறிவைக் கொண்டிருப்பவர்கள் எவரும்? கொள்ளை கொள்ளக் கூடிய  பொருள் வழிப்போக்கரிடம் இல்லாவிட்டாலும்,  திடீரென்று எதிர்பாராத வகையில் வந்து அவர்கள் மீது அம்பெய்து  கொன்று இரக்கமற்ற வகையில் கொள்ளையடிக்கும் மறவர்கள் எதிர்ப்படும் பாலைநில வழியில்  எவராவது செல்ல விரும்புவார்களா? (செல்ல விரும்ப மாட்டார்கள். ஆகையால், பொருள் தேடி பாலை நில வழியாகத் தலைவன் செல்வது நன்றன்று என்று தலைவி தோழியிடம் கூறினாள்.)*

*கள்ளியங் காட்டின்கட் கடமாக்கள் இரிந் தோடும் வகை மறந்துஞ் செல்வரோ தம் மறிவை யுடையார்? வழிபோம் வம்பலராற் கொள்ளும் பொருளிலராயினும் கதுமெனப் போந்தெய்கின்ற அருளில்லாத மறவர் வாழும்வழியை.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"வழிப்பறிக் கொள்ளையர் பாலை நிலத்தில் திடீரெனத் தோன்றி கொல்வர். கள்ளிச் செடிகள் வளர்ந்த காட்டில் காட்டுப் பசுக்கள் பின் வாங்கி ஓடுமாறு செல்வாரோ? செல்லமாட்டார். தலைவர் பொருள் தேட பாலை வழியில் செல்வது நல்லதாகாது" என்று தலைவி கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*85. தலைமகனைத் தோழி செலவு அழுங்குவித்தது*

*பொருள்பொரு ளென்றார்சொற் பொன்போலப் போற்றி*
*யருள்பொரு ளாகாமை யாக - வருளான்*
*வளமை கொணரும் வகையினான் மற்றோ*
*ரிளமை கொணர விசை.*

*சொற்பிரிப்பு:*
*‘பொருள் பொருள்’ என்றார் சொல் பொன் போலப் போற்றி,*
*அருள் பொருள் ஆகாமை ஆக; அருளான்,*
*வளமை கொணரும் வகையினான், மற்று ஓர்*
*இளமை கொணர இசை!*

*பொருளால் எவற்றையும் அடைந்துவிடலாம் என்று பொருள் தேடி நீங்கள் செல்ல விரும்புகையில், தலைவியின் மீது அருள் காட்ட மறக்கிறீர்கள். பொருளால் கடந்து சென்ற இளமையைப் பெறமுடியாது என்பதை எண்ணிப் பாருங்கள் என்று தோழி தலைவனுக்கு அறிவுரை கூறுகிறாள்.*
*பொருளால் எதையும் அடைந்துவிடலாம் என்று பொருளுக்கு முதன்மை இடம் கொடுப்பவர் சொல்வதைப் பொன் போல மதித்து, பொருள் தேடச் செல்கின்றீர். உங்களிடம் அன்பு கொண்டுள்ள தலைவியின் மேல் அருள் காட்டுவதை ஒரு பொருட்டாக நீங்கள் கொள்ளவில்லை. அன்பு கூர்ந்து நீங்கள் சென்று பல வளங்களைக் கொண்டு வந்தாலும், அவற்றுடன் வேறோர் செல்வமாகிய இளமையையும் அங்கிருந்து கொண்டுவருவதற்கு உடன்படுவாயாக. (பொருளால் கடந்து சென்றுவிடும் இளமையை மீண்டும் பெற இயலாது என்று தோழி தலைவனின் பொருள் தேடும் விருப்பத்தால் இழக்கப் போவது என்ன என்று கூறி அவனது முடிவை நினைத்து வருந்தச் செய்கிறாள்.)*

*பொருள் பொருளாவதென்று சொன்னார் சொல்லைப் பொன்போல விரும்பித் தெளிதலான், அருளுடைமை பொருளாகாமை ஆவதாயினும் ஆக; பொருளைக் கொணரும் வகைமைபோல நின்னருளினாலே வேறோரிளமைகொணர்தற்கு எமக் குடன்படுவாயாக.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"எல்லாவற்றையும் இனிதாய் முடிக்க வல்ல பொருளே! தலைவியிடம் காட்ட வேண்டிய அருளும் வேண்டாத காரியமாய்ப் போயினும் போக. நீ பல வளங்களைத் தரும் பொருளைக் கொண்டு அன்பு மிக்கு பின்னால் நாம் பெற இயலாத வேறோர் இளமையை அங்கிருந்து கொண்டு வருவதற்கு உடன்படுவாயாக!" என்று தலைவனிடம் தோழி கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*86. தலைமகள் தோழிக்குச் செலவு உடன்படாது சொல்லியது*

*ஒல்வா ருளரே லுரையா யொளியாது*
*செல்வாரென் றாய்நீ சிறந்தாயே - செல்லா*
*தசைந்தொழிந்த யானை பசியாலாட் பார்த்து*
*மிசைந்தொழியு மத்தம் விரைந்து.*

*சொற்பிரிப்பு:*
*ஒல்வார் உளரேல், உரையாய்!-'ஒழியாது,*
*செல்வார்' என்றாய்; நீ சிறந்தாயே!-செல்லாது*
*அசைந்து ஒழிந்த யானை, பசியால், ஆள் பார்த்து,*
*மிசைந்து ஒழியும் அத்தம் விரைந்து.*

*தலைவன் பொருள் தேட பாலைநிலம் வழியே செல்ல முடிவெடுத்துள்ளான் என்பதை என்னிடம் மறைக்காது சொன்ன நீ ஒரு சிறந்த தோழியே, ஆனால் அதனால் என்ன பயன், ஆறுதல் வழங்கக் கூடியவர் எவரிடமாவது சென்று சொல் என்று தலைவி மனம் வருந்தி தோழியிடம் சொல்கிறாள்.*
*உறுதியாகப் பொருள் தேட தலைவன் பாலைநிலம் வழியாகச் செல்ல முடிவெடுத்துவிட்டான் என்பதை என்னிடம் மறைக்காமல் சொன்ன நீ என்னிடம் உண்மையான நட்பு கொண்ட தோழியே. ஆனால், ஆறுதல் வழங்கக் கூடியவர் எவரேனும் இருந்தால் அவர்களிடம் சென்று சொல்வாயாக. இயலாமல் வருந்தி இறந்து வீழ்ந்த யானைகளை, தமது பசி மிகுதியினாலே அவ்வழியில் செல்பவர்கள் பார்த்து அவற்றை உண்டு பசியாறிச் செல்லும் அப்பாலைநில வழியே அவர்கள் விரைவார்கள். (என்னிடம் சொல்லி என்ன பயன்? என்று தலைவி தோழியிடம் கூறினாள்.)*

*ஆற்றுவர் ருளராயின், அவர் பிரிவினை அவர்கட்கு உரையாய்; தவிராதே நங்காதலர் செல்வா ரென்றாய்; ஆதலால், நீ எனக்கு மெய்யாகச் சிறந்தாயே யன்றோ? போகமாட்டாதே வருந்தி யிறந்து வீழ்ந்த யானைகளை அங்குள்ளவர்கள் தம் பசியானே எங்கும் பார்த்துத் தின்று போம்அத்தத்தினை விரைந்து.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"தோழியே! பசியால் இறந்து கிடக்கும் யானையை உடைய பாலையில் நம் தலைவர் செல்வது உறுதி என்று மொழிந்தாய். நீ எனக்கு உண்மையான தோழியாய் ஆனாய் என்றாலும் ஆற்றுவார் எவரேனும் இருந்தால் அவர்க்குக் காதலற் செயலைச் சென்று கூறுவாயாக! என்னிடம் கூற வேண்டியதில்லை!" என்று தலைவி சொன்னாள்.(பால சங்கரன் உரை)*

*87. புணர்ந்து உடன்போக்கு நயப்பித்த தோழிக்குத் தலைமகள் உடன்பட்டுச் சொல்லியது*

*ஒன்றானு நாமொழிய லாமோ செலவுதான்*
*பின்றாது பேணும் புகழான்பின் - பின்றா*
*வெலற்கரிதாம் வில்வலான் வேல்விடலை பாங்காச்*
*செலற்கரிதாச் சேய சுரம்.*

*சொற்பிரிப்பு:*
*ஒன்றானும் நாம் மொழியலாமோ-செலவு தான்*
*பின்றாது, பேணும் புகழான் பின்;-பின்றா*
*வெலற்கு அரிதாம் வில் வலான், வேல் விடலை, பாங்காச்*
*செலற்கு அரிதாச் சேய சுரம்?*

*தலைவனுடன் உடன்போக்கு செய்யும்படி தோழி சொன்ன அறிவுரைக்கு உடன்பட்ட தலைவி, விற்போரில் வல்லவனான அவனுடன் பாலை நில வழியில் செல்வது கடினமான செயல் அல்ல என்கிறாள்.*
*யாதாயினும் நாம் சொல்ல இயலுமா? யாவரும் விரும்பும் புகழினைக் கொண்ட தலைவனைப் பின் தொடர்ந்து உடன் போக்கு செய்தல் ஒழுக்கம் பிறழாத செயலே ஆகும். பின் வாங்குதலை அறியாத, வெல்லுதற்கு அரிதாகிய, விற்போரிலே வல்லவனாகிய, வேலைக் கையில் கொண்ட விடலைப் பருவ தலைவன் பக்கத்தே துணையாய் வர செல்லுதற்கரிய தொலைவையும் பாலைநில வழியைக் கடப்பது கடினமான செயல் அல்ல (என்று தலைவி தோழியிடம் கூறினாள்.)*

*பிறழாத வெலற்கரிதாகிய வில்லினை வல்லானாகிய வேல்விடலை தான் துணையாகச் சுரத்தைச் செலற்கரிதாக யாதானுஞ் சொல்லலாமோ? அப் பேணும் புகழான் பின்சேறல் ஒழுக்கத்திற் பிறழாது காண்.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*விற்போரில் வல்லவனான தலைவன் துணையாய் வரப் பாலை நிலத்து வழி செல்வதற்கரிது என்று ஒன்றையேனும் நாம் சொல்லலாமோ? முடியாது. நம் தலைவனின் பின் செல்லுதல் நல்ல ஒழுக்கத்தினின்று தவறுவது இல்லையாம்.(பால சங்கரன் உரை)*

*88. புணர்ந்து உடன் போவான் ஒருப்பட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது*

*அல்லாத வென்னையுந் தீரமற் றையன்மார்*
*பொல்லா தென்பது நீபொருந்தா - யெல்லார்க்கும்*
*வல்லி யொழியின் வகைமைநீள் வாட்கண்ணாய்!*
*புல்லி யொழிவான் புலந்து.*

*சொற்பிரிப்பு:*
*அல்லாத என்னையும் தீர, மற்று ஐயன்மார்*
*பொல்லாதது என்பது நீ பொருந்தாய், எல்லார்க்கும்,*
*வல்லி ஒழியின்,-வகைமை நீள் வாட் கண்ணாய்!*
*புல்லி ஒழிவான், புலந்து.*

*எனது வீட்டோரைச் சந்திக்க நேர்ந்தால் எனது நிலையைக் கூறி அவர்களது மனதை மாற்றுக தோழி! என்று வீட்டைவிட்டு வெளியேறும் தலைவி கூறுகிறாள். பொருத்தமற்ற வெறுப்புச் சொற்கள் கூறி, எங்களது காதலைப் புரிந்து கொள்ளாது, எங்களைக் கடிந்து கொள்ளும் தந்தையும் தமையன் மார்கள் எம்மேல் கொண்ட குறை நீக்கி, எங்கள் மீது வீட்டை விட்டுச் செல்லும் பழிச் சொல்லும் கருத்தினையும் நீக்கி, நீ எல்லோருக்கும் நல்லவளாகப் பொருந்தியிருப்பாயாக. வல்லமை கொண்டவளாக நான் இல்லாமல் எனது வீட்டிற்குச் செல்வாய் என்றால், நேர்த்தியான நீண்ட வாளினைப் போன்ற கண்களையுடைய தோழியே! உடன் போகின்ற என்னைத் தலைவன் தழுவிக் கொண்டு செல்ல வேண்டிய எனது நிலையினை எடுத்துக் கூறி அவர்களது மன மாறுபாட்டை நீக்குவாயாக (என்று தலைவி தோழியிடம் வேண்டிக் கொள்கிறாள்).*

*எம்பெருமானோடு பொருந்தி இங்கு நின்றும் ஒழிந்து போவதற்கு முன்பு வேறுபட்டு மற்றதன்கண் அல்லாத வென்னை நீ இங்கே யிருந்து நம் மையன்மார் பொல்லாத தென்று கொள்ளும் மனத்தின் கண்ணுள்ள கோளினையுந் திருத்தி நீ பொருந்தாய்; எல்லார்க்குந் தத்த மனத்தின்கணுள்ள வேறுபா டொழியுமாயின், வல்லி போன்றிருவாட்கண்ணாய்! அல்லதூஉம், உடன்போகின்ற என்னைப் புல்லிக் கொண்டொழிவான் வேண்டி மனத்தின்கட் புலந்து நீங்குதற்கு வல்லையாயொழியின், வகைமையையுடைய நீண்ட வாட்கண்ணாய்! ஆண்மையல்லாத வுரைகளை என்னை நீக்கி, நம்மையன்மார் பொல்லாத தென்னுங் கருத்தினையும் நீக்கி எல்லார்க்கும் பொருந்துவாயாக,என்றுமாம்.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"தலைவன் என்னைத் தழுவிக் கொண்டு செல்ல வேண்டிய உள்ளத்தில் மாறுபட்டு நீங்குவதற்கு வல்லவன். ஆனால் நம் ஐயன்மார் கூறும் ஆண்மைக்குப் பொருந்தாத மொழிகளின்று என்னையும் என் தலைவனையும் நீக்கி, எம்மிடம் தீமையுண்டு என்ற எண்ணத்தைப் போக்கி, எல்லாருக்கும் நல்லவளாய்ப் பொருந்தியிருப்பாயாக!" என்று தோழியிடம் தலைவி கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*89. சுரத்திடைச் சென்ற செவிலிக்குத் தலைமகனையும் தலைமகளையும் கண்டமை எதிர்ப்பட்டார் சொல்லி, ஆற்றுவித்தது*

*நண்ணிநீர் சென்மி னமரவ ராபவே*
*லெண்ணிய வெண்ண மெளிதரோ - வெண்ணிய*
*வெஞ்சுட ரன்னானை யான்கண்டேன் கண்டாளாந்*
*தண்சுட ரன்னாளைத் தான்.*

*சொற்பிரிப்பு:*
*நண்ணி, நீர் சென்மின்; நமர் அவர் ஆபவேல்,*
*எண்ணிய எண்ணம் எளிதுஅரோ, எண்ணிய*
*வெஞ்சுடர் அன்னானை யான் கண்டேன்; கண்டாளாம்,*
*தண்சுடர் அன்னாளை, தான்.*

*உடன்போக்கு சென்ற தலைவியையும் தலைவனையும் பாலை நில வழியே தேடிச் செல்லும் செவிலித்தாயிடம், எதிர்ப்படும் கணவன் மனைவியாகிய இருவர், தாங்கள் அவர்களைப் பார்த்தோம் என்றும், விரைந்து சென்றால் அவர்களைக் காணலாம் என்று கூறுகிறார்கள்.*
*விரைந்து நீங்கள் செல்வீர்கள் என்றால், நம்மவர்களாகிய அவ்விருவரையும் காணவேண்டும் என்ற உங்கள் எண்ணம் எளிதில் நிறைவேறும். (பிறன்மனை நோக்காப் பேராண்மை கொண்டவனாகிய அவன்) வெப்ப மிக்க கதிரவன் போன்ற தலைவனை, நான் பார்த்தேன். குளிர்ந்த மதியையொத்த தலைவியை (மற்ற ஆண்மகனை ஏறெடுத்தும் பார்க்காத) இவள் பார்த்தாளாம் (என்று தலைவனையும் தலைவியையும் தேடிச் செல்லும் செவிலித்தாயை எதிர்ப்பட்ட கணவன் மனைவியராகிய இருவரில் ஆண்மகன் செவிலியிடம் கூறினான்.)*

*பொருந்தி நீர் சென்மின்; அவரும் நமக்குச் சுற்றத்தாராயின், நீர் அவரைச் சென்றெய்த வேண்டுமென்று எண்ணிய எண்ணம் எளிது; நீர் கருதிய வெய்ய பகலோனன்னானை யான்கண்டேன், கண்டாளாம் தண்மதியனையாளை இவள்தான்.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"கதிரவனைப் போன்ற தலைவனை நானும், சந்திரனைப் போன்ற மங்கையை இவளும் பார்த்தோம். இவர்கள் நம்மவராயின் விரைந்து செல்வீராக" என்று எதிரில் வந்த கணவன் மனைவியர் செவிலியிடம் கூறினர்.(பால சங்கரன் உரை)*

*90. 'தன்னும் அவனும்' என்பதனுள், 'நன்மை தீமை' என்பதனால், நற்றாய் படிமத்தாளை வினாயது-90*

*வேறாக நின்னை வினவுவேன் றெய்வத்தாற்*
*கூறாயோ கூறுங் குணத்தினனாய் - வேறாக*
*வென்மனைக் கேறக் கொணருமோ வெல்வளையைத்*
*தன்மனைக்கே யுய்க்குமோ தான்.*

*சொற்பிரிப்பு:*
*வேறாக நின்னை வினவுவேன்; தெய்வத்தான்*
*கூறாயோ? கூறும் குணத்தினனாய், வேறாக-*
*என் மனைக்கு ஏறக் கொணருமோ?-எல்வளையைத்*
*தன் மனைக்கே உய்க்குமோ, தான்?*

*உடன் போக்கு சென்ற மகளைத் தலைவன் எனது வீட்டிற்கு அழைத்து வருவானா? அல்லது தனது வீட்டிற்கே கொண்டு சென்றுவிடுவானா? என்று நற்றாய் நிமித்தம் கூறுபவரிடம் குறி கேட்கிறாள்.*
*நிமித்தம் கூறும் பலரிலும் நீ வேறுபட்டவள் என்ற கருத்தினால் உன்னைக் கேட்கிறேன். உன் தெய்வத்தன்மை தன்மையின் உதவியைக் கொண்டு கூறுவாயாக. புகழ்ந்து கூறும் நற்பண்பினைக் கொண்டவனாக எனது மனைக்கு முறைப்படி மணம் முடித்துத் தர எனது மகளைத் தலைவன் அழைத்து வருவானா? அல்லது, ஒளி மிக்க வளையணிந்த என் மகளைத் தனது மனைக்கே அழைத்துச் சென்று விடுவானா ? (என்று என்று நற்றாய் குறி சொல்பவளிடம் கேட்கிறாள்.)*

*நிமித்தஞ் சொல்வார் பலருள்ளும் நின்னை வேறாகக்கொண்டு வினவாநின்றேன்: உன்னுடைய தெய்வத்தன்மையுடைய கழங்காற் பார்த்துக் கூறாய்;உலகத்தார் கூறும் நற்குணத்தினை யுடையனாய் எல்வளையை உடன் - கொண்டுபோனவன் என்மனைக்கே மணஞ் செய்வதாகக் கொண்டு வருமோ? அஃதன்றி, யாம் வெறாகத் தன் மனைக்கே மணஞ்செய்யக் கொண்டு போமோதான்?(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"தேவராட்டியே! என் மகளை அழைத்துச் சென்ற தலைவன் என் இல்லத்தில் மணவிழாச் சிறப்புப் பொருந்துமாறு அவளைத் திரும்பக் கொணர்வானோ? அல்லது தன் வீட்டுக்குக் கொண்டு போய்ச் சேர்ப்பானோ? கூறுவாயாக" என்று நற்றாய் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*91. தலைமகன் செலவு உடன்படாத தலைமகள் தோழிக்குச் சொல்லியது*

*கள்ளிசார் காரோமை நாரில்பூ நீண்முருங்கை*
*நள்ளியவேய் வாழபவர் நண்ணுபவோ - புள்ளிப்*
*பருந்து கழுகொடு வம்பலர்ப் பார்த்தாண்*
*டிருந்துறங்கி வீயு மிடம்.*

*சொற்பிரிப்பு:*
*கள்ளி, சார், கார் ஓமை, நார் இல் பூ நீள் முருங்கை,*
*நள்ளிய வேய், வாழ்பவர் நண்ணுபவோ-புள்ளிப்*
*பருந்து கழுகொடு வம்பலர்ப் பார்த்து, ஆண்டு,*
*இருந்து உறங்கி, வீயும் இடம்?*

*நல்ல வாழ்வை வாழ விரும்பும் எவரும்  கொடிய பாலை நிலம் வழியாகச் செல்ல விரும்ப மாட்டார்கள், தலைவன் அவ்வாறு செல்லுதல் நல்லதல்ல என்று தலைவி தோழியிடம் கூறுகிறாள்.*
*கள்ளிச்செடிகளும்,  சார் மற்றும்  கரிய மாமரங்களும், நாராகிய பற்றுதலில்லாது பூக்களையுடைய, நீண்டு வளர்ந்த, முருங்கை மரங்களும், மிகுந்த  மூங்கிற் புதர்களும் நிறைந்த இடத்திற்கு, நல் வாழ்க்கையை வாழ  விரும்பும் மக்கள் விரும்பிச் செல்வார்களா? புள்ளிகளையுடைய பருந்துகள் மற்றும் கழுகுகள் புதிதாக வரும் வழிப் போக்கர்கள் கொண்டு செல்லும்  பொருளைக் கொள்ளை அடிக்க எதிர்பார்த்து, அவ்விடத்தில்,  தங்கியும்  உறங்கியும்  வீழ்ந்து கிடக்கும் இடமாகிய பாலை நில வழியே எவரும் செல்ல விரும்புவார்களா?  (கொடிய பாலை நிலம் வழியே செல்ல எவரும்  விரும்ப மாட்டார்கள் என்று தலைவி தோழியிடம் கூறினாள்.)*

*புள்ளிப் பருந்துகள் கழுகுடனே வழி போவாரைப் பார்த்து அங்கிருந்து உறங்கப்பட்டுக் கள்ளியுஞ் சாருங் காரோமையும் நாரில் பூ நீண்முருங்கையும் வேயும்பொருந்தி யமர்ந்து வீயுமிடத்தை உயிர் வாழ்பவர்நண்ணுவரோ?(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"பருந்துகள் கழுகுகளுடன் வழியில் செல்பவரின் பொருளைப் பறித்துக் கொள்ள வேண்டி எதிர்பார்த்து கிடைக்காமையாலே உறங்கி விழுகின்றன. ஓமை மரங்களும், முருங்கை மரங்களும் மிக்க மூங்கில் புதர்களும் பொருந்தியுள்ளன. அப் பாலை வழியில் வாழ்க்கையை மேற்கொள்ள விரும்புவர் செல்ல நினைப்பாரோ? நினையார்!" என்று தலைவி தோழியிடம் சொன்னாள்.(பாலசங்கரன் உரை)*

*92. தலைமகன் செலவு உடன்படாத தலைமகள் தோழிக்குச் சொல்லியது*

*செல்பவோ தம்மடைந்தார் சீரழியச் சிஃஃடுவன்றிக்*
*கொல்பபோற் கூப்பிடும் வெங்கதிரோன் - மல்கிப்*
*பொடிவெந்து பொங்கிமேல் வான்சுடுங் கீழா*
*லடிவெந்து கண்சுடு மாறு.*

*சொற்பிரிப்பு:*
*செல்பவோ, தம் அடைந்தார் சீர் அழிய-சிள் துவன்றி,*
*கொல்பபோல் கூப்பிடும்; வெங் கதிரோன் மல்கி,*
*பொடி வெந்து, பொங்கி, மேல் வான் சுடும்; கீழால்*
*அடி வெந்து, கண் சுடும்;-ஆறு?*

*தன்னைச் சார்ந்தவரின் நலவாழ்வைக் கருத்தில் கொள்ளும் எவரும்  கொடிய பாலை நிலம் வழியாகச் செல்ல விரும்ப மாட்டார்கள், தலைவன் அவ்வாறு செல்லுதல் நல்லதல்ல என்று தலைவி தோழியிடம் கூறுகிறாள்.*
*நல்ல உள்ளம் கொண்ட எவரும் தம்மைச்  சார்ந்து வாழ்பவர் சிறப்பழிந்து வருந்துமாறு பாலைநிலம் வழியே செல்வார்களோ?  சிள்வண்டுகள் நெருங்கி கொடிய ஒலி எழுப்பியபடி  இருக்கும், வெப்ப மிக்க ஞாயிறு எரிந்து,  புழுதிகள் சூடேறி மேலே எழுந்து புழுதிப் புயலாக வீசி வானையும் சூடேற்றும்.   தரையிலே, நடந்து செல்வார் அடிகள் வெந்து கண்களையும் சுடச் செய்வதுமாகி பாலைநில வழியே எவரும் செல்ல விரும்ப மாட்டார்கள் (என்று தலைவி தோழியிடம் கூறினாள்.)*

*தம்மை யடைந்தார் சீர்மையழிய நல்லார் செல்வரோ? சிள்வீடுகள் நெருங்கிக் கடிய வோசையாற் பிறரைக் கொல்வனபோலக் கூப்பிடாநிற்கும் வெய்ய வெயிலோன் மிக்குப் பொடிகள் வெந்து பொங்கி மேலேவிசும்பினைச் சுடாநிற்கும், கீழின்கண் வழிபோவார் அடி வேவ அவர் கண்களைச் சுடாநிற்கும்இப்பெற்றிப்பட்ட அவ்வழியினை.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"சிள் என்ற வண்டுகள் ஓசையால் மற்றவரைக் கொல்வது போல் ஒலிக்கும்படியானதும், சூரியன் வெம்மை மிகுந்து வானத்தைக் கொதிக்கச் செய்யும் தரையில் செல்பவர் அடிகள் வேவ, அவர்தம் கண்களைச் சுடச் செய்வதுமான பாலை நிலத்தின் வழியே தம்மை ஆதரவாகக் கொண்ட மனைவியர் சிரப்பழியத் துன்பம் அடையுமாறு கணவர் செல்வாரோ?" என்று தோழியிடம் தலைவி கூறினாள்.(பால சங்கரன் உரை)*

# *4. முல்லை: மூலமும் – உரையும்*

***பாடல்கள் [93-123]***

*93. பருவம் கண்டு அழிந்த தலைமகள் தோழிக்கு உரைத்தது*

*கருங்கடன் மாந்திய வெண்கடலைக் கொண்மூ*
*விருங்கடன்மா கொன்றான்வேன் மின்னிப் - பொருங்கட*
*றன்போன் முழங்கித் தளவங் குருந்தணைய*
*வென்கொல்யா னாற்றும் வகை.*

*சொற்பிரிப்பு:*
*கருங் கடல் மாந்திய வெண் தலைக் கொண்மூ*
*இருங் கடல் மா கொன்றான் வேல் மின்னி, பொருங் கடல்-*
*தன்போல் முழங்கி, தளவம் குருந்து அணைய,*
*என்கொல், யான் ஆற்றும் வகை?*

*செம்முல்லைக் கொடிகள் அருகில் உள்ள குருந்த மரத்தில் படர்வது போல தலைவனை அணைத்துக் கொள்ள எனக்கு வழி இல்லையே தோழி! கருமையான கடலிலிருந்து நிறைய நீரினை அருந்திய வெண்மையான தலையைக் கொண்ட முகில்கள், பெரிய கடலினில் புகுந்து மாமர வடிவுகொண்ட சூரபன்மனைக் கொன்ற முருகனின் வேலினைப் போன்று மின்னும் மின்னல்களுடன், அலைகள் ஒன்றோடொன்று மோதிக்கொள்வதால் பொருமும் கடல்தனைப் போல இடிகளை முழக்கி ஆரவாரிக்கும் கார்காலத்தில், தளிர்த்து வளரும் தளவமாகிய செம்முல்லைக் கொடிகள் அருகில் உள்ள குருந்த மரத்தினை பற்றி அணைத்துத் தழுவிப் படர்கின்றன. ஆனால், எவ்வாறு நான் அதுபோன்று என் தலைவனை அணைத்து என்னைத் தேற்றிக் கொள்வேன் என்று புரியவில்லையே தோழி? (என்று தலைவி தோழியிடம் தலைவனைப் பிரிந்துள்ள தனது பிரிவு ஏக்கத்தைக் கூறுகிறாள்.)*

*கருங்கடலைப் பருகிய வெண்டலை முகில்கள் இருங்கடலின்கண்ணே புக்கு மாவினைக்கொன்ற முருகன் வேல்போல மின்னிப் பெருங்கட றன்னைப்போல முழங்குதலால் முல்லைக்கொடிகளெல்லாம் குருந்தமரத்தின்மேற் சென்றணையக் கண்டு யான்ஆற்றுந் திறம் என்னை கொல்லோ? (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"மாமரத்தின் வடிவம் உடைய சூரனை அழித்த முருகனின் வேலைப் போன்று மின்னி, கடல் அலை ஆரவாரம் செய்தலால், செம்முல்லைக் கொடிகள் குருந்த மரத்தைச் சேர்ந்து படரும் கார் காலத்தைக் கண்டு நான் பொறுத்துக் கொள்வது எவ்வாறு?" எனத் தலைவி தோழியிடம் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*94. பருவம் கண்டு அழிந்த தலைமகள் தோழிக்கு உரைத்தது*

*பகல்பருகிப் பல்கதிர் ஞாயிறுகல் சேர*
*விகல்கருதித் திங்க ளிருளைப் - பகல்வர*
*வெண்ணிலாக் காலு மருண்மாலை வேய்த்தோளாய்!*
*உண்ணிலா தென்னாவி யூர்ந்து.*

*சொற்பிரிப்பு:*
*பகல் பருகிப் பல் கதிர் ஞாயிறு கல் சேர,*
*இகல் கருதித் திங்கள் இருளை, பகல் வர*
*வெண் நிலாக் காலும் மருள் மாலை,-வேய்த்தோளாய்!-*
*உள் நிலாது, என் ஆவி ஊர்ந்து.*

*மயக்கும் மாலைப்பொழுது எனது உயிரை வாட்டுகிறது தோழியே! பகல் பொழுதிற்குரிய வெளிச்சத்தை தன்னுள் உள்வாங்கிக் கொண்டு பலகதிர்களை உடைய பகலவன் மலைத்தொடரின் பின் சென்று மறைந்ததால் இருள் பரவ, அது ஒரு குறைபாடு என்று எண்ணி நிலவு தோன்றி அவ்விருளை வெண்மையான நிலவொளியினை வெளிவிட்டு பகற் பொழுது மீண்டும் வந்தது போல விரட்டிவிடுகின்ற ஒளி மயங்கும் மாலைப் பொழுதும் வந்தது; மூங்கிலைப் போன்ற தோள்களையுடைய தோழியே! என்னுடலில் தங்காது எனது உயிர் மெதுவாக என்னைவிட்டுப் பிரிவது போல உணர்கிறேன். (என்று தலைவி தோழியிடம் கூறுகிறாள்.)*

*பகற் பொழுதைப் பருகிப் பல்கதிர்ஞாயிறு மலையின்கட் சேர, திங்ளானது இருளைப் பகையென்று கருதிப் பகலின்றன்மை வர வெண்ணிலாவை யுகாநின்ற மருண்மாலையின்கண், வேய்த்தோளாய்! என்னிடத்து நிலைகின்றதில்லை;என்னுயிர் சென்று. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"பகற்பொழுது மறைந்து, நிலவானது தோன்றி ஒளியை வெளியிடும் அத்தகைய மயக்கத்தை அளிக்கக் கூடிய மாலைப் பொழுதில் என் உயிர் வெளிப்பட்டு என்னுள் நிற்பதில்லை!" எனத் தலைவி தோழியிடம் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*95. தோழி தலைமகளைப் பருவம் காட்டி வற்புறுத்தியது*

*மேனோக்கி வெங்கதிரோன் மாந்தியநீர் கீழ்நோக்கிக்*
*கானோக்கங் கொண்டழகாக் காண்மடவாய் - மானோக்கி*
*போதாரி வண்டெலா நெட்டெழுத்தின் மேற்புரியச்*
*சாதாரி நின்றறையுஞ் சார்ந்து.*

*சொற்பிரிப்பு:*
*மேல் நோக்கி வெங் கதிரோன் மாந்திய நீர் கீழ் நோக்கி,*
*கான் ஓக்கம் கொண்டு, அழகா-காண், மடவாய்! மான் நோக்கி!-*
*போது ஆரி வண்டு எலாம் நெட்டெழுத்தின்மேல் புரிய,*
*சாதாரி நின்று அறையும், சார்ந்து.*

*கார்காலம் துவங்கியது, மழையால் காடுகள் தழைத்தோங்குகின்றன, தலைவன் திரும்பும் காலமும் வந்தது தலைவியே!*
*மேல்முகமாக வெப்பத்தைக் கொண்ட கதிரவன் முகந்து உட்கொண்டதால் நீர் நிறைந்த முகிலானது, கீழுள்ள புவியை நோக்கி மழையாகப் பெய்த படியினாலே, முல்லை நிலத்தின் காடுகளெல்லாம் தழைத்தோங்கி அழகாக மாறியுள்ளதைக் காண்பாயாக, மான் போல மருண்டு நோக்கும் இளமங்கையான தலைவியே! பூக்கள் தோறும் செல்லும், இறகில் கோடுகளை உடைய வண்டினங்கள் எல்லாம் நெடில் ஓசை கொண்ட எழுத்துக்களின் ஒலியின் மீது விருப்பம் கொண்டது போல ஒலியெழுப்புவதால் அந்த இசைக்குரிய சாதாரி யென்னும் பண்ணானது தொடர்ந்து ஒலித்துக் கொண்டிருக்கும் கார்காலம் வந்துவிட்டது (எனவே விரைவில் தலைவன் வாக்குறுதி தந்தது போல வந்துவிடுவான் என்று தோழி தலைவியிடம் கூறினாள்.)*

*வெங்கதிரோன் மேனோக்கிப் பருகிய நீர் கீழ் நோக்குதலால் காடெல்லாம் ஒக்கங்கொண்டு அழகாகப் போதுதோறும் அரிவண்டுகள் நெட்டெழுத்தோசைமேல் மேவிச் சாதாரி என்னும் பண்ணினைச் சார்ந்தொலியா நின்றன; மானோக்கி! இதனைக் காணாய்.அல்லதூஉம், 'போதாரி வண்டெலாம்,' என்பது போதினைப் பரந்து இவ்வண்டெல்லாம் எனலுமாம். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"இளமையும் மருண்ட பார்வையும் உடைய தலைவியே! சூரியன் மேல்முகமாக உட்கொண்ட மேகம் கீழ்முகமாக பெய்த மழையால் முல்லை செழித்தது. வண்டுகள் நீண்ட ஓசையுடைய எழுத்தின் ஒலியின் மீது விருப்பம் கொண்டு ஒலிக்கச் 'சாதாரி' என்ற பண்ணானது அந்த ஒலியின் சார்பாகக் கொண்டு நிலைத்து ஒலிக்கும். அதை நீ காண்பாய்!" எனத் தோழி தலைவியிடம் கூறியது.(பால சங்கரன் உரை)*

*96. மாலைப் பொழுது கண்டு ஆற்றாளாய தலைமகள் தோழிக்குச் சொல்லியது*

*இருள்பரந் தாழியான் றன்னிறம்போற் றம்மு*
*னருள்பரந்த வாய்நிறம் போன்று - மருள்பரந்த*
*பால்போலும் வெண்ணிலவும் பையர வல்குலாய்!*
*வேல்போலும் வீழ்துணையி லார்க்கு.*

*சொற்பிரிப்பு:*
*இருள் பரந்து ஆழியான்தன் நிறம்போல், தம்முன்*
*அருள் பரந்த ஆய் நிறம் போன்று, மருள் பரந்த*
*பால் போலும் வெண் நிலவும்,-பை அரவு அல்குலாய்!-*
*வேல் போலும், வீழ் துணை இலார்க்கு.*

*இருண்ட வானும் வெண்ணிலவும் காதல் துணை அற்றவருக்குத் துன்பத்தைத் தரும் தன்மையைக் கொண்டனவாய் உள்ளன தோழி!*
*சக்கரப்படை கொண்ட கண்ணனின் நிறம் போலும் இருண்டிருக்கும் வானில், அவனுக்கு மூத்தவனும், அன்பு கொண்டவனும், மனம் விரும்புதற்குரிய மயக்கம் தரும் பால் நிறத்தை உடைய பலராமனின் நிறம் போன்று வெண்மையான நிலவும், தான் விரும்பும் துணை உடன் இல்லாதவருக்குக் கொடிய வேலைப் போன்று வருத்தும் தன்மை கொண்டதாக அமைந்துவிடுவதை அறிவாய், பாம்பின் படத்தைப் போன்ற அல்குல் உடைய தோழியே! (என்று தலைவி தோழியிடங் கூறினாள்.) என்று உரைகளில் பொருள் கொள்ளப்படுகிறது.*

*கரிய கடலின் நிறத்தினைப் போல இருள் பரவியுள்ள வானில், காண்பவர் விரும்பும் நிறத்துடன் மயக்கும் தன்மை கொண்டு, பாலின் நிறத்துடன் தோன்றும் வெண்மையான நிலவும் கூட, தான் விரும்பும் துணை உடன் இல்லாதவருக்குக் கொடிய வேலைப் போன்று வருத்தும் தன்மை கொண்டதாக அமைந்துவிடுவதை அறிவாய், பாம்பின் படத்தைப் போன்ற அல்குல் உடைய தோழியே! (என்று தலைவி தோழியிடங் கூறினாள்.)*
*என்றும் பொருள் கொள்ளலாம்*

*சக்கரத்தையுடைய மாயவனிறம் போல எங்கும் இருள்பரந்து, அம்மாயவன் முன்னோனுடைய நிறம் போன்று வியப்புமிக்க பானிறமும் போன்ற வெண்ணிலாவும், பையவரல்குலாய்! இவை விரும்பப்படுந் துணையில்லாதார்க்கு வேல் போலும். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*தலைவி தோழியை நோக்கி "கண்ணன் தன் வலிமையைப் பெருக்க பகைவர்களின் யானையின் மீது செலுத்திய சக்கரத்தைப் போன்று சூரியன் மேற்கில் மறைய இருள் எங்கும் சூழ்ந்தது. பலராமனின் வெண்மையான நிறம் போன்றும் பாலின் நிறத்தைப் போன்றும் விளங்கும் சந்திரனும், விரும்பப்படும் காதலர்களைப் பக்கத்தில் கொள்ளாத மங்கையர்க்கு வேலைப் போன்று துன்பத்தைத் தரும்" எனக் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*97. மாலைப் பொழுது கண்டு ஆற்றாளாய தலைமகள் தோழிக்குச் சொல்லியது*

*பாழிபோன் மாயவன்றன் பற்றார் களிற்றெறிந்த*
*வாழிபோல் ஞாயிறு கல்சேரத் - தோழியோ!*
*மான்மாலை தம்மு னிறம்போன் மதிமுளைப்ப*
*யான்மாலை யாற்றே னினைந்து.*

*சொற்பிரிப்பு:*
*பாழிபோல் மாயவன் தன் பற்றார் களிற்று எறிந்த*
*ஆழிபோல் ஞாயிறு கல் சேர, தோழியோ!*
*மால் மாலை, தம்முன் நிறம்போல் மதி முளைப்ப,*
*யான், மாலை ஆற்றேன், இனைந்து.*

*மாலை மயக்கத்தினை பொறுக்க இயலாதவளாக தலைவனை எண்ணி வருந்துகின்றேன் தோழியே!*
*வலிமை கொண்ட கண்ணன் தன்பகைவர்களின் ஆண்யானையினது மத்தகத்தின் மீது எறிந்த சக்கரப் படையினைப் போன்று, கதிரவன் மலைகளின் பின் சென்று மறைய, அதனால் மாலை நேரம் மயங்கிட, அவனது முன்னவன் பலராமனது வெண்மை நிறத்தைப்போல உள்ள நிலவானது தோன்ற, அதனால் நான் அடைந்த மாலை மயக்கத்தினை பொறுக்க இயலாதவளாக தலைவனின் நினைவால் வருந்துகின்றேன் தோழியே! (என்று தலைவி தோழியிடம் கூறுகின்றாள்.)*

*தனக்கு வலிபோலக் கருதி மாயோன் பற்றார் களிற்றின் முகத்தெறிந்த சக்கரம்போல ஞாயிறு குட மலையைச் சேரத் தோழி! மருண்மாலையின்கண் அம்மாயவன் முன்னோன் நிறம்போல மதி தோன்றுதலான் யான் கொண்ட மயலை ஆற்றமாட்டுகில்லேன் வருந்தி. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*தலைவி தோழியை நோக்கி, "கதிரவன் மேற்கில் மறைய மயக்கத்தைத் தரும் மாலைக் காலத்தில் பலராமனின் வெண்மையான நிறம் போன்று சந்திரன் தோன்ற, அதனால் நான் பெற்ற மயக்கத்தை நினைத்து ஆற்ற முடியாதவளாக உள்ளேன்" என்றாள்.(பால சங்கரன் உரை)*

98. *'பருவம் அன்று' என்று வற்புறுத்திய தோழிக்குத் தலைமகள் வன்புறை எதிர் அழிந்து சொல்லியது*

*வீயும் வியப்புறவின் வீழ்துளியான் மாக்கடுக்கை*
*நீயும் பிறரொடுங்கா ணீடாதே - யாயுங்*
*கழலாகிப் பொன்வட்டாய்த் தாராய் மடலாய்க்*
*குழலாகிக் கோல்சுரியாய்க் கூர்ந்து.*

*சொற்பிரிப்பு:*
*வீயும்-வியன் புறவின் வீழ் துளியான், மாக் கடுக்கை;*
*நீயும் பிறரொடும் காண், நீடாதே;-ஆயும்*
*கழல் ஆகி, பொன் வட்டு ஆய், தார் ஆய், மடல் ஆய்,*
*குழல் ஆகி, கோல் சுரியாய், கூர்ந்து.*

*கார்ப்பருவம் வந்ததால் கொன்றை மலரத் துவங்குகின்றது தோழியே காண்பாயாக ! தோழியே! இந்த பெரிய முல்லை நிலத்திலே விழுகின்ற மழைத்துளிகளால் பெரிய கொன்றை மரமானது, பறித்து விளையாடப் பயன்படுத்தும் கழற்சிக்காய்களைப் போன்ற அரும்புகளாக முதலில் அரும்பி, பிறகு பொன்னால் செய்யப்பட்ட வட்டாடும் சூதுக்கருவிகளைப் போன்று முதிர்ந்து, பூச்சரங்கள் போலக் கொத்துகளாகி, இதழ்களாய் மலர்ந்து, அடர்ந்த கூந்தல் போலத் தோன்றி, மலர்கள் உதிர்ந்த பிறகு குச்சியாக மாறி இறுதியில் மறைந்துவிடும் நிலையை எனது தோழியாகிய நீயும், மற்ற தோழியரோடு சென்று கவனத்துடன் காண்பாயாக. காலம் தாழத்தாதே.(என்று கார்ப்பருவம் வந்து கொன்றை மலரத் துவங்குவதைத் தலைவி தோழியிடம் காட்டிக் கூறினாள்.)*

*ஆயப்படுங் கழல்போல அரும்பி, பொன் வட்டுப்போல முதிர்ந்து, பின்னைப் பூமாலையாய், இதழாய் விரிந்து, மடவார் குழல்போலக் காய்த்து, பின்னைத் துளையையுடைய கோலாய் மிக்கு அழியாநின்றன; வியன் புறவின்கண்ணே வீழ்துளியானே பெருங் கொன்றைகள்: இதனைப் பிறரோடே நீ போய் நீயுங் காணாய் நீடியாதே. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"கொன்றை மரமானது நீர்த்துளிகளால் சிறுமியர் விளையாடும் காயாகத் தோன்றி, பொன்னால் செய்யப்பட்ட சூதாடு கருவியாக முதிரச் செய்து, பூமாலை போன்று மலர்ந்து, பெண் கூந்தல் போல காய்க்கச் செய்து முடிவில் கொம்பாய் மாறி அழியச் செய்துவிடும். நீ உடனே சென்று பார்ப்பாயாக!" எனத் தலைவி தோழியிடம் கூறியது.(பால சங்கரன் உரை)*

*99. 'பருவம் அன்று' என்று வற்புறுத்திய தோழிக்குத் தலைமகள் வன்புறை எதிர் அழிந்து சொல்லியது*

*பொன்வாளாற் காடில் கருவரை போர்த்தாலு*
*மென்வாளா வென்றி யிலங்கெயிற்றாய்! - என்வாள் போல்*
*வாளிழந்த கண்டோள் வனப்பிழந்த மெல்விரலு*
*நாளிழந்த வெண்மிக்கு நைந்து.*

*சொற்பிரிப்பு:*
*பொன் வாளால் காடு இல் கரு வரை போர்த்தாலும்*
*என்? வாளா' என்றி;-இலங்கு எயிற்றாய்!-என் வாள்போல்*
*வாள் இழந்த, கண்; தோள் வனப்பு இழந்த; மெல் விரலும்,*
*நாள் இழந்த, எண் மிக்கு, நைந்து.*

*தலைவனைப் பிரிந்த நாட்களை எண்ணி எண்ணி எனது விரல்களும் நலிந்தன தோழி! பொன்னாக ஒளிரும் வெயிலில் காடுகளே இன்றி கரிய பெரிய மலைகள்வரை கார்காலத்துப் பசுமையால் மூடியிருந்தாலும் என்ன பயன், அழகிய பற்களையுடைய எனது தோழியே! தலைவனின் பிரிவால் என் மேனியின் ஒளி மங்கியது, ஒளியிழந்தன எனது கண்களும், என் தோள்களும் அழகினை இழந்தன. எனது மெல்லிய விரல்களும் தலைவனைப் பிரிந்ததால் நலமிழந்த நாட்களை எண்ணத் துவங்கி, அந்த நாட்களும் எண்ணிக்கையில் அதிகமானதால் விரல்களும் தேய்ந்து விட்டன (ஆனால், நீயோ இது கார்ப்பருவம் அல்ல என்று சொல்லி நிற்கின்றாய் என்று தலைவி தோழியிடம் கூறுகின்றாள்.)*

*பொன்போன்ற வெயிலொளியால் வெந்து காடின்றியிருந்த கருவரைகள் கார்ப்பருவஞ் செய்து மலரிதழ்களான் மூடப்பட்டாலும், அதனாற் பயனென்? பருவ மன்று என்று சொல்லி வாளாநின்றி; இலங்கெயிற்றை யுடையாய்! என்மேனியின் கண்ணுள்ள ஒளிபோல ஒளியிழந்தன என் கண்களும்: போயிழந்த நாள்களின்எண் மிகுதலான் எணணி என்விரல்களுந் தேய என்தோள்களும்வனப்பிழந்தன.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"மழையால் மரம் செடி மூடப்பட்டாலும் இதனால் என்ன பயன்? இது கார்காலம் அன்று எனச் சொல்லி நிற்கின்றாய். என் மேனியின் ஒளியும் கண்களும் ஒளி இழந்தன. தலைவனைப் பிரிந்தமையால் என் விரல்கள் நாட்களை எண்ணித் தேய்கின்றன. என் தோள்களும் அழகை இழந்துவிட்டன" என்று தலைவி தோழியிடம் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*100.* பருவம் கண்டு அழிந்த கிழத்தி தோழிக்குச் சொல்லியது

*பண்டியையச் சொல்லிய சொற்பழுதான் மாக்கடல்*
*கண்டியைய மாந்திக்கால் வீழ்த்திருண் - டெண்டிசையுங்*
*கார்தோன்றக் காதலர் தேர்தோன்றா தாகவே*
*பீர்தோன்றி நீர்தோன்றுங் கண்.*

*பண்டு இயையச் சொல்லிய சொல் பழுதால்; மாக் கடல்*
*கண்டு இயைய மாந்தி, கால்வீழ்த்து, இருண்டு, எண் திசையும்*
*கார் தோன்ற, காதலர் தேர் தோன்றாது; ஆகவே,*
*பீர் தோன்றி, நீர் தோன்றும், கண்.*

*கொடுத்த உறுதிமொழியின்படி தலைவன் வராததால் என் உள்ளத்தில் ஏற்படும் அச்சத்தால் கண்ணீரால் நிறைகின்றன என் விழிகள் தோழியே!*
*முன்னர் பிரியும் பொழுது, தன் விருப்பத்திற்கு நான் இணங்க வேண்டும் என்பதற்காக, கார்காலத்தில் திரும்பிவிடுவேன் என்று தலைவன் கொடுத்த உறுதிமொழி தவறிப் போனது. பெருங்கடலினைக் கண்டு தன்னை நிரப்பிக் கொள்ளும்படி கடல்நீரைக் குடித்து, மழை பொழியத் தாழ்ந்து, நிறம் கருத்து, எட்டுத் திக்குகளிலும் முகிற் கூட்டம் சூழ்ந்து காணப்படுகிறது. கார்காலம் துவங்கிவிட்டது. ஆனால், கொடுத்த உறுதிமொழியின்படி தலைவனின் தேர் இங்கு வரவில்லை. தோழியே! ஆதலால், உள்ளத்தில் ஏற்படும் அச்சத்தால் கண்ணீரால் நிறைகின்றன என் விழிகள் (என்று தலைவி தோழியிடம் கூறுகின்றாள்.)*

*தாமுன்பு நம்மைப் பிரிகின்றநாட் குறிப்படச் சொல்லிய சொற்பழுதாயிற்றால்; பெருங்கடற் சென்று கண்டு நிரம்பப் பருகிக் கால்வீழ்த்தே யிருண்டு திசை யெட்டு மழை தோன்றக் காதலர் தேர் தோன்றுகின்றதில்லை: ஆதலால் என் கண்கள் பீர் தோன்ற நீர் தோன்றாநின்றன.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"மழை பெய்து காணப்பட்டும், தலைவனது தேர் தோன்றவில்லை. முன்பு நம்மைப் பிரிந்து சென்றபோது அவருக்கு இணங்க வேண்டும் என்பதற்காகக் கார் காலத்தில் திரும்பி வருவேன் என்று கூறிய உறுதிமொழி தவறியது. என் கண்களும் நீரைத் தோற்றுவிக்கின்றன" என்று தலைவி தோழியிடம் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*101. பருவம் கண்டு அழிந்த கிழத்தி தோழிக்குச் சொல்லியது*

*வண்டினம் வெளவாத வாம்பலும் வாரிதழான்*
*வண்டினம் வாய்வீழா மாலையும் - வண்டின*
*மாராத பூந்தா ரணிதேரான் றான்போத*
*வாராத நாளே வரும்.*

*வண்டுஇனம் வெளவாத ஆம்பலும், வார் இதழான்*
*வண்டுஇனம் வாய் வீழா மாலையும், வண்டுஇனம்*
*ஆராத பூந் தார் அணி தேரான்தான் போத*
*வாராத நாளே, வரும்.*

*புல்லாங்குழலின் இசையும் மாலைப் பொழுதும் என்னை வருத்துகின்றன தோழி! வண்டுக் கூட்டம் நாடாத செயற்கை மலர் மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட தேரைக் கொண்ட தலைவன் என்னைச் சேரும்படி வந்திடாத நாட்களில்; வண்டுக் கூட்டங்கள் விரும்பிடாத ஆம்பல்பூண் அணி செய்யும் புல்லாங்குழலின் இசையும், வடிவாக அமைந்திட்ட இதழ்களைக் கொண்ட பூக்களை நாடும் வண்டுக் கூட்டம் வாய் வைக்க விரும்பாத அந்தி மாலை நேரமும், என்னைத் துன்புறுத்தும். (என்று தோழியிடம் தலைவி கூறினாள்.)*

*வண்டினங்கள் விரும்பாத ஆம்பலென்னும் பெயரையுடைய குழலும், ஒழுகிய மலர்களிற் புக்கு வண்டினங்கள் வாய்வீழாத அந்தியாகிய மாலையும், வண்டினங்கள் புக்கொலியாத பூச்செயல்களையு முடைய புரவி பூண்ட தார் மணிகளையுடைய புரவிகளாலே ஒப்பிக்கப்பட்ட தேரினையுமுடையான் வாராத நாளேவந்து என்னை நலியும்.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"வண்டுகள் மொய்க்காத ஆம்பல் என்ற பெயரையுடைய புல்லாங்குழலும், வண்டுகள் தேனைப் பருக எண்ண விரும்பாத மாலைப் பொழுதும் வண்டுகள் விரும்பாத நெட்டிப் பூக்கள் முதலியவற்றால் செய்த மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட தேரையுடைய தலைவன் என்னிடம் வராத நாட்களிலேயே அவை என்னை வந்து துன்புறுத்தும்" எனத் தோழிக்குத் தலைவி சொன்னாள்.(பால சங்கரன் உரை)*

## *102.* பருவம் கண்டு அழிந்த கிழத்தி தோழிக்குச் சொல்லியது

*மானெங்குந் தம்பிணையோ டாட மறியுகள*
*வானெங்கும் வாய்த்து வளங்கொடுப்பக் - கானெங்குந்*
*தேனிறுத்த வண்டோடு தீதா வெனத்தேரா*
*தியானிறுத்தே னாவி யிதற்கு.*

*சொற்பிரிப்பு:*
*மான் எங்கும் தம் பிணையோடு ஆட, மறி உகள,*
*வான் எங்கும் வாய்த்து வளம் கொடுப்ப, கான் எங்கும்*
*தேன் இறுத்த வண்டோடு, 'தீ, தா' என, தேராது,*
*யான் இறுத்தேன், ஆவி இதற்கு.*

*கார்காலத்தில் திரும்புவேன் என்று கூறிய தலைவன் வாக்குறுதி தவறியவனாக இருக்கக்கூடும் என்ற தெளிவைப் பெறாது நானும் தலைவன் வரவை எதிர்நோக்கி எனது உயிரை வருத்திக் கொண்டிருக்கிறேன்!*
*தோழியே! முல்லை நிலமெங்கும் ஆண் மான்கள் தம்முடைய பெண்மான்களுடனே கூடிக் களித்திட, அவற்றின் குட்டிகளும் அவற்றோடு சேர்ந்து குதித்துக் கும்மாளமிட, வான் வெளியெல்லாம் முகில்கள் படர்ந்து மழையினைப் பொழிந்து வளத்தினை உண்டாக்க, அக்காடுகளிலெல்லாம், தேன் உண்ணும் வண்டுகள் தம்மோடு இணைந்த வண்டுகளுடனே, தீ தா என்ற ஒலிக்குறிப்புடன் ஓசை பாடிக் கொண்டிருக்கின்றன. கார்காலத்தில் திரும்புவேன் என்று உறுதி கூறிய தலைவனின் மொழியும் பொய்யாக இருக்கக்கூடும் என்ற தெளிவைப் பெறாத நானும் தலைவன் வரவை எதிர்நோக்கி கடமையாக எனது உயிரை வருத்திக் கொண்டிருக்கிறேன் (என்று தலைவி தோழியிடம் கூறுகிறாள்.)*

*மான்கள் தம்பிணைகளைக் கூடி எங்கும் விளையாட, அவற்றின் மறிகளு முகள, மழை யெங்கும் பெய்து வாய்த்து வளங் கொடுப்ப, காடெங்கும் தேன்களும் தம்மொடு சார்ந்த வண்டுகளோடு தீதாவென் றொலித்தலான், ஆராயாதே மயங்கிப் பருவத்துக்கென்னா வியைக் கடனாகக் கொடுத்தேன். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"தோழியே! முல்லை நிலத்தில் ஆண் மான் பெண் மான் மற்றும் குட்டிகளுடன் கூடிக் குதிக்க, மழை பெய்து வளம் உண்டாக்கக் காடெல்லாம் வண்டுகள் வண்டுகளுடன் சேர்ந்து தீ, தா என்று ஒலித்ததால், நான் தெளிவின்றிக் கார் வந்தும் தலைவர் வரவில்லையே என்று மயங்கி என் உயிரைக் கடமையாய்த் தந்து வருந்துகின்றேன்" என்று தலைவி கூறியது.(பால சங்கரன் உரை)*

*103. 'பருவம் அன்று' என்று வற்புறுத்தின தோழிக்குத் தலைமகள், 'பருவமே' என்று அழிந்து சொல்லியது*

*ஒருவந்த மன்றா லுறைமுதிரா நீராற்*
*கருமந்தான் கண்டழிவு கொல்லோ - பருவந்தான்*
*பட்டின்றே யென்றி பணைத்தோளாய்! கண்ணீரா*
*லட்டினே னாவி யதற்கு.*

*சொற்பிரிப்பு:*
*ஒருவந்தம் அன்றால், உறை முதிரா நீரால்;*
*கருமம் தான் கண்டு அழிவுகொல்லோ?-'பருவம் தான்*
*பட்டின்றே' என்றி;-பணைத் தோளாய்!-கண்ணீரால்*
*அட்டினேன், ஆவி அதற்கு.*

*இது கார்காலம் அல்ல வென்று எனக்கு ஆறுதல் கூற முற்படும் தோழியே எனது உயிரை இந்தப் பருவத்திற்கே அளிக்கிறேன் நான்.*
*இதைக் கார்காலம் என்று உறுதியாகச் சொல்ல இயலாது. ஏன் எனில், மழை பெய்யும் தன்மையை நோக்கினால் அது கார்ப்பருவத்தின் மழைக்கேற்ற முதிர்ச்சியுடன் சீராக இல்லை. கார்காலம் வந்துவிட்டதே என்று தவறான ஓர் பருவ காலத்தில் எண்ணி வருந்துவதை நீ ஒரு செயலாகச் செய்யலாமா? கார்காலம் இன்னமும் வரவேயில்லை என்று பலவாறு சொல்லி எனக்கு ஆறுதல் சொல்லும் மூங்கில் போன்ற தோள்களை உடைய தோழியே! எனது கண்ணீரினையே தாரை நீராகக் கொண்டு எனது உயிரை வார்த்துக் கொடுத்தேன் இந்த பருவமல்லாத பருவத்திற்கு (என்று தலைவி தோழியிடம் கூறினாள்.)*

*ஒருவந்த மன்றால் என்பது இது பருவமென்பது மெய்ம்மை யன்றா லென்றவாறு. உறை முதிரா நீரால் என்பது மழை பெயல் நிரம்பாத நீராலென்றவாறு; வம்ப மழை யென்றவாறாம், கருமந்தான் கண்டழிவு கொல்லோ என்பது கருமமாவது பருவமல்லாத பருவத்தைக் கண்டழிவதோ என்றவாறு. பருவந்தான் பட்டின்றே யென்பது பருவம் வந்து பட்டதில்லை என்றவாறு, என்றி என்பது இவையெல்லாஞ் சொல்லி என்னைத் தேற்றா நின்றாய் என்றவாறு பணைத்தோளாய் கண்ணீரா லட்டினே னாவி யதற்கு என்பது கண்ணீரே நீராக வார்த்து என்னுயிரைப் பருவத்துக்குக் கொடுத்தேன்,பணைத்தோளாய் என்றவாறு. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"மூங்கில் போன்ற தோள்களை உடைய தோழியே! கார் காலம் என்பது வரவே இல்லை என்று சொல்லி என்னைத் தேற்றுகிறாய். அந்தப் பருவம் அல்லாப் பருவத்துக்கு என் உயிரைப் பருவம் என்று எண்ணிக் கண்ணீரை நீராய்க் கொண்டு தாரை வார்த்துத் தந்தேன்" என்று தலைவி கூறியது.(பால சங்கரன் உரை)*

*104. பருவம் கண்டு அழிந்த கிழத்தி கொன்றைக்குச் சொல்லுவாளாய்த் தோழி கேட்பச் சொல்லியது*

*ஐந்துருவின் வில்லெழுதி நாற்றிசைக்கு முந்நீரை*
*யிந்துருவின் மாந்தி யிருங்கொண்மூ - முந்துருவி*
*னொன்றாய் யுருமுடைத்தாய்ப் பெய்வான்போற் பூக்கென்று*
*கொன்றாய்! கொன்றாயெற் குழைத்து.*

*சொற்பிரிப்பு:*
*ஐந்து உருவின் வில் எழுதி, நால் திசைக்கும், முந்நீரை,*
*இந்து உருவின் மாந்தி, இருங் கொண்மூ, முந்து உருவின்*
*ஒன்றாய், உரும் உடைத்தாய், பெய் வான்போல், 'பூக்கு' என்று,*
*கொன்றாய்! கொன்றாய், எற் குழைத்து.*

*கார்காலத்தில் பூத்துத் தழைத்து மலர்களாய் சொரிந்து என்னைக் கொல்கின்றாய் கொன்றை மரமே!*
*ஐந்து நிறங்களையுடைய வானவில்லை வரைந்து வைத்து, நான்கு திக்குகளுக்கும் கடல் நீரைக் கொண்டு சென்று கொடுக்க விரும்பிய, ஈச்சம் பழத்தின் நிறங்கொண்ட மேகமானது நீரை அள்ளிக் குடித்து உருவில் பெரிய மேகமானது. பழைமையான உருவாகிய வானின் நீல நிறத்தைப் போன்று அதனுடன் ஒன்றாகப் பரவி, இடிகளைக் கொண்டதாக மழையாகப் பொழிகின்ற வான் வெளியின் தன்மை போல, கார்காலத்தில் பூத்துத் தழைத்து மலர்களாய் சொரிந்து என்னைக் கொல்கின்றாய் கொன்றை மரமே! (என்று தலைவி கொன்றை மரத்தை நோக்கி தோழியின் காதில் விழும்படி கூறுகின்றாள்.)*

*ஐந்து நிறத்தினையுமுடைய வில்லை யெழுதினாற்போலக் கோலி, முந்நீரைப் பருகி, ஈந்தின் கனிபோன்றருந்துகின்ற வுருவோடு இருங்கொண்மூ நாற்றிசைக் கண்ணும் ஒன்றா யுருமுடைத்தாய்ப் பெய்யப்படுகின்ற வானம் என்னைக் கொல்கின்றாற்போலத் தழைத்துப் பூப் பேனென்று என்னைக் கொன்றாய்; கொன்றை மரமே! (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"கொன்றை மரமே! ஈச்சம் பழத்தினைப் போன்ற நிறத்தினை உடைய மேகம் இடி இடித்து மழை பெய்கிறது. நீ என்னைக் கொல்வதைப் போல, தழைத்துப் பூத்தலைச் செய்வேன் என்று பூ பூத்து என்னைக் கொன்று விடுகின்றாய்" என்று கொன்றை மரத்தைப் பார்த்துக் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*105.* பருவம் கண்டு அழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது

*எல்லை தருவான் கதிர்பருகி யீன்றகார்*
*கொல்லைதரு வான்கொடிக ளேறுவகாண் - முல்லை*
*பெருந்தண் டளவொடுதங் கேளிரைப்போற் காணாய்*
*குருந்தங் கொடுங்கழுத்தங் கொண்டு.*

*சொற்பிரிப்பு:*
*எல்லை தருவான் கதிர் பருகி ஈன்ற கார்,*
*கொல்லை தரு வான் கொடிகள் ஏறுவ காண்-முல்லை*
*பெருந் தண் தளவொடு தம் கேளிரைப்போல், காணாய்,*
*குருந்தம் கொடுங்கழுத்தம் கொண்டு.*

*கார்காலத்து முல்லைக்கொடிகள் குருந்த மரத்தை அணைத்துப் படர்ந்திருப்பதைக் காண்பாய் தோழி!*
*பகற் பொழுதினைத் தரும் கதிரவனின் கதிர்களால் குடிக்கப்பட்ட நீரைக் கொண்ட மேகம் அதை மழையாக வழங்கியதாலே, முல்லை நிலத்தில் வளர்ந்த நெடிய கொடிகள் மரங்களிற் படர்ந்து கொண்டிருப்பதைக் காண்பாயாக தோழி!! முல்லைக் கொடிகளானது பெரிய, குளிர்ந்த செம்முல்லைப் பூச் செடிகளுடனே கூடிப் படர்ந்து தனது உறவை அணைத்துக் கொள்வது போன்ற நிலையைக் காண்பாயாக. குருந்த மரங்களை, அந்த மரங்களே ஒடுங்கிவிடும்படியாக இறுகத் தழுவி கொடிகள் அதன் மேல் படர்ந்தேறி நிற்கின்றன. (என்று காட்சியால் புணர்ச்சி வேட்கையை மிகுந்த தலைவி தோழியிடம் கூறினாள்.)*

*பகலினைத் தருங் கதிரோனுடைய கதிர்கள் நீரை நிலத்தின்கட் பருகி யீன்ற காரானே கொல்லைகள் தருகின்ற வாலிய கொடிகண் மரந்தோறுஞ் சென்றேறு வனவற்றைக் காணாய்! அன்றியேயும், முல்லைகள் பெருந்தண்டளவுடனே குருந்து அங்கு ஒடுங்கு அழுத்தங் கொண்டு தங்கேளிரைப்போ லேறுவன காணாய்! (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"என் தோழியே! மழையினால் முல்லைச் செடிகள், செம்முல்லைச் செடிகளுடன் கூடிக் குருந்த மரங்களைத் தம் உறவான கணவரை மங்கையர் அணைத்து இருப்பதைப் போல அம்மரங்கள் ஒடுங்கி நிற்குமாறு உறுதியாய்ப் பற்றி ஏறுவதை நீ காண்பாயாக!" என்று தோழி தலைவியிடம் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*106. வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் வன்புறை எதிர் அழிந்து சொல்லியது*

*என்னரே யேற்ற துணைப்பிரிந்தா ராற்றென்பா*
*ரன்னரே யாவ ரவர்க்கு - முன்னரே*
*வந்தாரந் தேங்கா வருமுல்லை சேர்தீந்தேன்*
*கந்தாரம் பாடுங் களித்து.*

*சொற்பிரிப்பு:*
*என்னரே, ஏற்ற துணை பிரிந்தார்? 'ஆற்று' என்பார்*
*அன்னரே ஆவர், அவரவர்க்கு; முன்னரே*
*வந்து, ஆரம், தேம் கா வரு முல்லை, சேர் தீம் தேன்*
*கந்தாரம் பாடும், களித்து.*

*தலைவனின் பிரிவினைப் பொறுத்துக் கொள் என்று கூறி என்னை வற்புறுத்தும் நீ கொடியவள் தோழி!*
*தன்னை அன்புடன் ஏற்றுக் கொண்ட காதல் துணையைப் பிரிந்து செல்கின்ற காதலர் எப்படிப்பட்ட கொடியவர்! அந்தப் பிரிவினைப் பொறுத்துக் கொள் என்று பிரிவுத் துயரில் வருந்துபவர்களிடம் சொல்பவர்களும் அது போன்ற கொடியவர்களே ஆவார்கள். அவ்வாறு ஆறுதல் அடையச்சொல்லி வற்புறுத்துவோர் கொடியவர்கள் (ஆதலால் தோழி நீயும் கொடியவளே என்பது தலைவி தோழியிடம் மறைமுகமாகக் குறிப்பது). தோழியே! என்முன் வந்து சந்தனச் சோலைகளிலும், தேன் பொழியும் சோலைகளில் வளர்கின்ற முல்லைக் கொடிகளிலும், தங்கி செவிக்கினிய காந்தாரப் பண்ணில் தேன்வண்டுகள் மகிழ்ச்சியுடன் பாடுகின்றன (என்று தலைவி தோழியிடம் கூறினாள்.)*

*என்னரே யேற்ற துணைப்பிரிந்தார் என்பது எப்பெற்றியர் அவர் தமக் கன்புபட்ட காதலரைப்பிரிந்தார் என்றவாறு, ஆற்றென்பா ரன்னரே யாவ ரவரவர்க்கு என்பது அக்காதலித்தாரைப் பிரிந்தாரோடொப்பர், பிரியப்பட்டார்க் காற்றி இறந்துபடாதிருக்கச் சொல்லுவார் என்றவாறு, முன்னரே வந்து ஆரந் தேங்கா வரு முல்லை சேர்தீந்தேன் கந்தாரம் பாடுங் களித்து என்பது எனக்கு முன்னே வந்து சந்தனப் பொழிலையும், தேங்காவின்கண் வளர் முல்லையுஞ் சேர்ந்த தீந்தேன்கள் கந்தாரமென்னும் பண்ணினைக் களித்துப் பாடாநின்றன, என்றவாறு. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"தோழியே! சந்தனச் சோலையில் வண்டுகள் கூடிக் காந்தாரம் என்ற பண்ணைப் பாடுகின்றன. இம்மை மறுமை துணையாய்க் கொண்ட காதலியரைப் பிரிந்தவர் கொடியவர். அவ்வாறு பிரிந்து வருந்தும் காதலியை ஆற்றி இரு என்று கூறுபவர் பிரிந்த காதலரை விடக் கொடியவர். எனவே என்னை ஆற்றி இரு என்று கூறிய நீ கொடியவள்" என்று குறிப்பால் தலைவி கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*107. பருவம் கண்டு அழிந்த கிழத்திக்குத் தோழி சொல்லியது-107*

*கருவுற்ற காயாக் கணமயிலென் றஞ்சி*
*யுருமுற்ற பூங்கோட லோடி - யுறுமுற்ற*
*வைந்தலை நாகம் புரையு மணிக்கார்தா*
*னெந்தலையே வந்த தினி.*

*சொற்பிரிப்பு:*
*கரு உற்ற காயாக் கண மயில் என்று அஞ்சி,*
*உரும் உற்ற பூங் கோடல் ஓடி, உரும் உற்ற*
*ஐந் தலை நாகம் புரையும் அணிக் கார்தான்*
*எம்தலையே வந்தது, இனி.*

*இந்த அழகிய கார்காலம் நம்மை வருத்துவதற்கு என்றே வந்துள்ளது தலைவியே ! கருக்கொண்டு பூத்துள்ள காயாம்பூச் செடியின் பூங்கொத்துகளை, இறகுகள் தொகுதியாக அமைந்த ஆண் மயிலின் தோகை என்று எண்ணி, அஞ்சி விலகிப் பின்வாங்கி, இடியால் தாக்குண்ட பூக்களையுடைய வெண் காந்தலின் அருகிலே சென்று ஐந்து தலைகளையுடைய நாகப்பாம்பானது அந்த வெண்காந்தள் பூ போன்றே தன் உருவை மறைத்து நிற்கும் இந்த அழகிய கார்காலம், நம் பொருட்டே, நம்மை வருத்துவதற்கு என்றே இப்பொழுது வந்துள்ளது தலைவியே (என்று தோழி தலைவியிடம் கூறினாள்.)*

*கருதிக்கொண்டு பூத்த காயாம் பூவினைத் தொகுதியையுடைய மயிலென்றஞ்சி உருமுற்ற ஐந்தலை நாகங்கள் உருமுற்ற பூங்கோடல்களை யொவ்வாநின்ற அழகிய இக் கார்ப்பருவந்தான், எம்முடைய மாட்டேநலிய வந்தது இப்பொழுது. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*தோழி தலைவியைப் பார்த்து, "ஐந்து தலை நாகம் கருக் கொண்ட காயாம் பூவை ஆண்மயில் தோகை என்று எண்ணி அஞ்சியது. இடியால் தாக்கப் பெற்ற பூக்களை உடைய வெண் காந்தளின் பக்கத்தில் ஓடி அந்த வெண் காந்தளைப் போன்றே காணப்படும். அத்தகைய கார்காலமானது இனி நம்மிடத்தையே குறிக்கோளாகக் கொண்டு வருந்திட வந்தது" என்று கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*108. 'பருவம் அன்று' என்று வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் ஆற்றாது சொல்லியது*

*கண்ணுள வாயின் முலையல்லை காணலா*
*மெண்ணுள வாயி னிறவாவா - லெண்ணுளவா*
*வன்றொழிய நோய்மொழிச்சார் வாகா துருமுடைவா*
*னொன்றொழிய நோய்செய்த வாறு.*

*சொற்பிரிப்பு:*
*கண் உளவாயின், முலை அல்லை, காணலாம்;*
*எண் உளவாயின், இறவாவால்; எண் உளவா,*
*அன்று ஒழிய, நோய் மொழிச் சார்வு ஆகாது;-உருமுடை வான்*
*ஒன்று ஒழிய, நோய் செய்தவாறு.*

*எனக்கு ஆறுதல் கூறும் பொருட்டு எனது துயர் நீக்கும் நோக்கில் இது கார்காலம் அல்ல என்று நீ சொல்வது எனக்கு நம்பிக்கை அளிக்காது தோழியே!*
*தோழியே! இடியோடு கூடிப் பெய்கின்ற இம்மழை, என் போன்று காமம் கொண்டவர்களுக்கு இறப்பு என்ற ஒன்று நீங்கலாக மற்ற பிற துன்பங்களையும் உண்டாக்குவதாகும். ஆனால் நீ அம்முல்லை மலரினைப் போன்றவளல்ல, உனக்குக் கண்களுண்டு. அவை இருப்பதும் உண்மை என்றால், எனது நிலையை நீ காண முடியும். என் காதலர் இத்தனை நாட்களில் திரும்பிவிடுவேன் என்று கூறிச் சென்ற நாட்கணக்கு தவறாதிருக்குமானால் இது கார்காலமே. இது கார்காலமாக இல்லாவிடில் மழை இவ்வாறு தொடர்ந்து பொழியாது. ஆதலால், எனது துயர் நீக்கும் நோக்கில் இது கார்காலம் அல்ல என்று நீ சொல்வது எனக்கு நம்பிக்கை அளிக்காது.*

*உருமுடை வான் ஒன்றொழிய நோய் செய்தவாறு கண்ணுளவாயின் முல்லையல்லை காணலாம் என்பது உருமுடைய வான் இறந்து பாடொன்றையும் ஒழிய மற்றைக் குறிப்புக்கள் ஒன்பதும் எனக்குளவாம் படி என்னை நோய் செய்தவாற்றை நினக்குங் கண்ணுள வாயின் முல்லையல்லை யாதலின் நக்குக் காண் என்றவாறு, எண்ணுளவாயின் இறவாவால் என்பது அவர் குறித்த இத்துணை நாளுள் வருகின்றேன் என்ற எண் பழுது படாவாயின், அவர் சொன்ன நாளைக் கடவா அன்றோ என்றவாறு. எண்ணுளவா வன்றொழிய நோய் மொழிச் சார்வாகாது என்பது என்னை ஆற்றுவிக்க வேண்டி நின் மனத்தின்கண் எண்ணின எண்ணிண் கண்ணுள்ளவா வன்றி என்னோ யொழிதற்கு நீ யாற்றுவிக்கின்ற நின்மொழி எனக்குச் சார்வாகாதுஎன்றவாறு. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*தலைவி, "தோழியே! மழையால் மலர்ந்த முல்லைச் கொடிகள் கண் இல்லாமையால் காணவில்லை. ஆயின் தோழி, நீ அந்த முல்லை போன்றவள் அல்லள் உனக்குக் கண் இருப்பது உண்மையானால், என் துன்பம் கண்டு நீ சிரிப்பதை விட்டு, அதைக் காணலாம். காதலன் இத்தனை நாளில் வருவேன் எனக் குறிப்பிட்டுச் சென்ற நாள் கணக்குத் தவறாதிருக்க இஃது அந்தக் கார்ப் பருவம் இல்லையென்றால் இந்த மழையானது தொடர்ந்து பெய்யாது. என்னை ஆற்றுவிக்க உன் உள்ளத்தினின்று தோன்றியவையே அல்லாது எனக்கு ஆதரவாக இராது" என்றாள்.(பால சங்கரன் உரை)*

*109.  பருவம் கண்டு ஆற்றாளாய தலைமகள் தோழிக்குச் சொல்லியது*

*என்போ லிகுளை! இருங்கடன் மாந்தியகார்*
*பொன்போறார் கொன்றை புரிந்தன - பொன்போற்*
*றுணைபிரிந்து வாழ்கின்றார் தோன்றுவர் தோன்றா*
*ரிணைபிரிந்து வாழ்வ ரினி.*

*சொற்பிரிப்பு:*
*என்போல் இகுளை! இருங் கடல் மாந்திய கார்*
*பொன்போல் தார் கொன்றை புரிந்தன;-பொன்போல்*
*துணை பிரிந்து வாழ்கின்றார் தோன்றுவர்; தோன்றார்,*
*இணை பிரிந்து வாழ்வர், இனி.*

*பிரிந்து சென்ற தலைவர் சொன்னவாறு திரும்பி வாரார் என்றால் இனி துணையைச் சேரும் வாய்ப்பிழந்து வாழ்வார் தோழி!*
*எனது உயிர் போன்ற இனிய தோழியே! பெரிய கடலின் நீரை அருந்தி மழை மேகங்கள் உருவாகின. பொன்னால் செய்யப்பட்ட சரங்களாகக் கொன்றை மரத்தில் பூக்கள் மலர்ந்தன. பொன் போன்ற சிறப்புமிக்க துணையின் அருமை புரியாது பிரிந்து சென்றவர் இக்கார்காலத்தில் திரும்புவர். அவ்வாறு திரும்பி வாரார் என்றால் இனி துணையைச் சேரும் வாய்ப்பிழந்து வாழ்வார். (என்று பிரிவுத் துயரில் இருக்கும் தலைவி தோழியிடம் கூறினாள்.)*

*என்னைப் போன்ற தோழி! பொன் போன்ற தார்களைக் கொன்றைகள் ஈனும் வகை இருங்கடலைப் பருகின முகில்களாதலால், பொன் போலப் பெறுதற்கரிய தந்துணைகளைப் பிரிந்து போய் வாழ்கின்றார் அத்துணைக்கண் அவர்மாட்டுத் தோன்றுவர்; நம்மோடிணைதலைப் பிரிந்து வாழ்கின்றார்இப்பருவத்தின் கண்ணுந் தோன்றுகின்றிலர். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"என் உயிர் போன்றவளே! முகில்கள் மழை பொழியும் பொருட்டு பெரிய கடல் நீரைப் பருகி கருத்து காணப்பட்டன. கொன்றை மலர்கள் வரிசையான மாலையாய்க் கொண்டு விளங்கின. காதலர் திரும்பி வந்து காதலியுடன் இன்புறுத்துகின்றனர். பொருள் காரணமாகப் பிரிந்து சென்ற தலைவர் திரும்பி வராமல் இருக்கின்றார்" என்று தலைவி கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*110.     பருவம் கண்டு ஆற்றாளாய தலைமகள் தோழிக்குச் சொல்லியது*

*பெரியார் பெருமை பெரிதே யிடர்க்கா*
*ணரியா ரெளியரென் றாற்றாப் - பரிவாய்த்*
*தலையழுங்கத் தண்டளவந் தாநகக்கண் டாற்றா*
*மலையழுத சால மருண்டு.*

*சொற்பிரிப்பு:*
*பெரியார் பெருமை பெரிதே!-இடர்க்காண்*
*அரியார் எளியர் என்று, ஆற்றா, பரிவாய்,*
*தலை அழுங்க, தண் தளவம் தாம் நகக் கண்டு, ஆற்றா,*
*மலை அழுத, சால மருண்டு.*

*சிறுமதி கொண்ட செம்முல்லைகள் என் துயர் கண்டு நகைக்க, பெருந்தன்மை கொண்ட மலைகளோ  என் நிலை கண்டு அழுகின்றன தோழியே! தோழியே! பெரியோர் என்பவரின் பெருந்தன்மைப் பண்பு என்பது என்றும் பெருமைக்குரியதே. துன்பம் வரும் சூழலில் இதைக் கண்கூடாக நாம் அறிந்து கொள்ள முடியும்.  நமக்கு அருமையான துணையாக இருந்தவர் வருத்தத்தை நீக்கும் வகையில் அருகில் இல்லையே என வருந்தி, மனம் ஆறாது,  அன்புடன் தலை சாய்த்துக் கொள்ள வகையற்ற நிலையில் இருப்பதைக்  கண்டு,  குளிர்ந்த செம்முல்லைச் செடிகளோ  சிறுமைக் குணத்தால் சிரித்துக்கொண்டு பூக்கின்றன. ஆனால், அதனைப் பார்த்துப் பொறுக்கவியலாத பெருந்தன்மை கொண்ட மலைகளோ மழை நீரினைக் கண்ணீராக வழிய விட்டு மிகவும் அழுது மயங்குகின்றன (என்று தலைவி தோழியிடங் கூறினாள்.)*

*பெரியாராயிருப்பார் பெருமைக்குணம் மெய்ம்மையாகப் பெரிதே: காண முன்னரியரா யுள்ளார் இடர் வந்த இப்பொழுது எளியராயினா ரென்றிரங்கி யழுங்கி ஆற்றாவாய் மலைகள் மிகவும் அழுதன; தலை சாய்க்கும் வகை பரிவாய்த்தண்டளவங்கள் தஞ்சிறுமையால் நகக் கண்டு. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"தோழியே! நம் துன்பத்தைப் பார்த்து செம்முல்லைச் செடிகள் அற்ப குணத்தால் நகைத்தவாறு பூத்தன. மலைகளோ தலைவர் தொலைவில் உள்ளாரே என்று எண்ணி மழை நீரைக் கண்ணீராய்க் கொண்டு வாய்விட்டு அழுதன. எனவே பெருந்தன்மைக் குணம் உண்மையில் கொண்டாடத் தக்கவையாகவே விளங்கும்" என்று தலைவி கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*111.* பருவம் கண்டு ஆற்றாளாய தலைமகள் தோழிக்குச் சொல்லியது

*கானங் கடியரங்காக் கைம்மறிப்பக் கோடலார்*
*வானம் விளிப்பவண் டியாழாக - வேனல்*
*வளரா மயிலாட வாட்கண்ணாய்! சொல்லா*
*யுளராகி யுய்யும் வகை.*

*சொற்பிரிப்பு:*
*கானம் கடி அரங்கா, கைம்மறிப்பக் கோடலார்,*
*வானம் விளிப்ப, வண்டு யாழாக, வேனல்,*
*வளரா மயில் ஆட, வாட்கண்ணாய்! சொல்லாய்,*
*உளர் ஆகி, உய்யும் வகை.*

*அழகிய கார்காலம் தரும் துயரால் என் உயிர் நீங்காமல் இருக்க ஏதேனும் வழி இருந்தால் சொல்வாயாக தோழி!*
*முல்லை நிலக் காடானது சிறந்த நாடக மன்றமாகவும், நிகழ்ச்சியைக் கண்ணுற்று கைகளை அசைத்துக் காட்டும் காண்போர் கூட்டம் போல வெண் காந்தள் மலர்கள் ஆடவும், முகிற் கூட்டம் இடியோசையைப் பாடலாகப் பாடவும், வண்டினங்கள் யாழ் இசை போலச் சுருதி கூட்டவும், வேனிற்காலத்தில் ஆடாதிருந்த மயில்கள் பருவம் கண்டு தோகை விரித்து மகிழ்ந்தாடும் இக்கார்காலத்திலே; வாள் போன்ற கண்களையுடைய தோழியே! துணையின்றி தவிக்கும் காதலர்கள் துயருற்று இறவாமல் வாழும் வகை ஏதேனுமிருப்பின் என்னவென்று எனக்கு அதை உரைப்பாயாக (என்று தலைவி தோழியிடம் கூறினாள்.)*

*கானங் கடியரங்காகக் கோடலார் வியந்து கைம்மறிப்ப, முகில் பாட, வண்டுகள் யாழாக, வேனற் காலத்துக் களியாத மயில் களித்தாடாநிற்க, வாட்கண்ணாய்! சொல்லாய்; காதலரைப் பிந்நதார்இறந்துபடாது உளராகியுய்யுந் திறத்தை. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"முல்லை நிலம் நாடக அரங்காகவும், முகில் இடிக்குரலான பாடலைப் பாடவும், வண்டுகள் இசைக்கவும், மயில் ஆடவும், வெண்காந்தள் கைகளை அசைக்கவும், பொருந்திய இக்கார் காலத்தில் காதலரைப் பிரிந்த காதலியர் இறவாமல் நிலை பெற்றுப் பிழைக்கக் கூடிய வழி இருந்தால் கூறு!" என்று தலைவி தோழியிடம் கூறியது.(பால சங்கரன் உரை)*

*112. பருவம் காட்டி, தோழி, தலைமகளை வற்புறுத்தியது*

*தேரோன் மலைமறையத் தீங்குழல் வெய்தாக
வாரான் விடுவானோ வாட்கண்ணாய்! - காரார்
குருந்தோடு முல்லை குலைத்தனகா ணாமும்
விருந்தோடு நிற்றல் விதி.*

*சொற்பிரிப்பு:
தேரோன் மலை மறைய, தீம் குழல் வெய்து ஆக,
வாரான் விடுவானோ?-வாட்கண்ணாய்!-கார் ஆர்
குருந்தோடு முல்லை குலைத்தனகாண்; நாமும்
விருந்தோடு நிற்றல், விதி*

*கார்காலம் துவங்கியது. தலைவன் வரவை எதிர்நோக்கி அவனுக்கு விருந்து முதலியன செய்து காத்திருத்தல் நமது கடமை தலைவியே!
தேரினை உடையவனாகிய கதிரவன் மலையின் பின்னர் சென்று மறைய இருள் சூழும் வேளையில், இடையர்களின் குழலோசையும் துன்பம் தருவதாக மாறிடும் இக்கார்காலத்தில், தலைவன் திரும்பி வாராது இருந்துவிடுவானோ? நிச்சயம் வருவான். வாளினையொத்த கண்களையுடைய தலைவியே! மழையினால் செழித்து வளர்ந்துள்ள குருந்த மரங்களுடனே, முல்லைச் செடிகளும் பூங்கொத்துக்களால் நிறைந்துள்ளதைக் காண்பாயாக. கார்காலம் துவங்கியது. ஆகவே நாமும் தலைவன் வரவை எதிர்நோக்கி அவனுக்கு விருந்து முதலியன செய்து காத்திருத்தல் நமது கடமையாகும் (என்று தோழி தலைவியிடம் கூறினாள்.)*

*பகலோன் மலையின்கண் மறைய இனிய குழல் இன்னாதாய் வெய்தாக இக்காலத்தின்கண் வாராதே விடுவானோ? வாட்கண்ணாய்! பசுமையார்ந்த குருந்துடனே முல்லைகள் பூங்கொத்தை ஈன்றான காண்; இனி நாமும் அவர்க்கு விருந்துசெய்து ஒழுகிநிற்றல் நெறி. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*தோழி தலைவியிடம் "சூரியன் மறைந்து மாலைக் காலம் உண்டானது. ஆயரின் குழல் இசை கொடியதாக விளங்கின. குருத்த மரங்களும், முல்லைக் கொடிகளும் பூத்தன. இது தலைவன் குறிப்பிட்ட பருவமாகும். நம் தலைவன் வாராமல் கைவிடுவானோ! கைவிடான் அவன் வரவை நோக்கி விருந்து செய்து காத்திருத்தல் நம் கடமையாகும்" என்று கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*113. பருவம் கண்டு அழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது*

*பறியோலை மேலொடு கீழா விடையர்*
*பிறியோலை பேர்த்து விளியாக் கதிப்ப*
*நரியுளையும் யாமத்துந் தோன்றாரா லன்னாய்!*
*விரியுளைமான் றேர்மேற்கொண் டார்.*

*சொற்பிரிப்பு:*
*பறி, ஓலை, மேலொடு கீழா, இடையர்*
*பிறியோலை பேர்த்து, விளியா, கதிப்ப,*
*நரி உளையும் யாமத்தும் தோன்றாரால்-அன்னாய்!-*
*விரி உளை மான் தேர் மேல் கொண்டார்.*

*நள்ளிரவு பொழுது கடந்தும் பொருள் தேடச் சென்ற என் தலைவன் வந்தாரில்லை தோழியே!*
*பறியென்னும் படுக்கைக்கு மேலாக ஓலைப்படல் வேயப்பட்டிருக்க, பறிக்குக் கீழாக இடையர்கள் பிறியோலையை விலக்கி அழைத்தும் அதட்டியும் ஆடுகளைப் படலுக்குள் அடைத்திருக்க, அந்த ஆடுகளை உண்ணுபதற்குத் தக்க பொழுதினை எதிர் நோக்கிக் காத்திருந்த நரிகள் ஊளையிடும் நள்ளிரவு பொழுது கடந்தும், பரந்த பிடரி மயிரினையுடைய குதிரைகள் பூட்டப்பட்ட தேரிலமர்ந்து பொருள் தேடச் சென்ற என் தலைவன் வந்தாரில்லை, என் அன்னையையொத்த அன்பு மனம் கொண்ட தோழியே! (என்று தலைவி தோழியிடங் கூறினாள்.)*

*படுத்துக் துயிலும் பறி கீழாக ஓலைப்படன் மழைத்துளியைக் காத்தற்கு மேலாக இடையர்கள் கிடந்து யாடுகளைப் பிறித்தற்குக் கருவியாகிய பிறியோலையைப் புடை பெயர்வித்து அழைத்துரப்ப, நரிகள் அஞ்சிக் கதறும் யாமத்தின்கண்ணும் தோன்றாராற் றோழி! விரிந்த உளையையுடைய மாவாற் பூட்டப்பட்ட தேரை மேற்கொண்டு போயினார். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"என் தாய் போன்றவளே பறி என்ற படுக்கை கீழாகக் கொண்டு ஆட்டு மந்தையைக் காப்பவர் ஆயர்கள். அவர்கள் ஆடுகளைப் பிரிக்கக்கூடிய கருவியான பிறியோலையை அசைத்துக் காட்டி அழைத்து அதட்ட, ஆடுகளைக் கொல்ல எண்ணிய நரிகள் அச்சம் கொண்டு கதறுகின்ற நள்ளிருள் பொழுதாக ஆகியும் குதிரை பூட்டப்பட்ட தேர்மீது சென்ற தலைவர் திரும்ப வந்தாரில்லை!" என்று தலைவி தோழியைப் பார்த்துச் சொன்னாள்.(பால சங்கரன் உரை)*

*114. பருவம் கண்டு அழிந்த தலைமகள் கேட்ப, தோழி குருந்த மரத்திற்குச் சொல்லுவாளாய், 'பருவம் அன்று' என்று வற்புறுத்தியது*

*பாத்துப் படுகடன் மாந்திய பல்கொண்மூக்*
*காத்துக் கனை துளி சிந்தாமைப் - பூத்துக்*
*குருந்தே! பருவங் குறித்திவளை நைந்து*
*வருந்தேயென் றாய்நீ வரைந்து.*

*சொற்பிரிப்பு:*
*பாத்து, படு கடல் மாந்தி, பல கொண்மூ,*
*காத்து, கனை துளி சிந்தாமை, பூத்து-*
*குருந்தே!-பருவம் குறித்து, இவளை, 'நைந்து*
*வருந்தே' என்றாய், நீ வரைந்து.*

*கார்காலம் வந்தது போன்று காலம் தவறிப் பூத்துள்ள குருந்த மரமே, இது கார்காலம் அல்ல, தலைவியை வருத்தும் நோக்கில் பூத்துள்ளாய்.*
*ஒலிக்கின்ற கடலின் நீரைக் குடித்துப் பல முகில்களில் பகுத்தெடுத்து, அந்த நீரைப் பாதுகாத்துக் கொண்டு வந்து, செறிவான மழைத்துளிகளை முகில்கள் நன்கு சிதறி பெய்யாத போதும், செழித்துப் பூத்துள்ள குருந்த மரமே! நீ இவ்வாறாகப் பூத்திருப்பதைக் கண்டு கார்காலம் துவங்கிவிட்டதோ என்று தலைவி கருதும்படிச் செய்கிறாய். இவளை உடல் மெலிந்து வருந்து என்கிறாய். நீ இவளை மட்டும் பெரிதும் துன்புறுத்துகிறாய் (என்று தலைவியை ஆற்றுவிக்கும் நோக்கில் இது கார்காலம் அல்ல எனத் தலைவியின் காதில் விழும்படி தோழி குருந்த மரத்தினை நோக்கிக்கூறினாள்.)*

*ஒலிக்கின்ற கடலைப் பருகி அந்நீரைக் காத்துக் கருமுற்றிப் பகுத்துச் செறிந்த துளிகளைச் சிதறுவதற்கு முன்பே பூத்துக் குருந்தே! பருவத்தைக் குறித்துக் காட்டி இவளையே வரைந்து வருந்துவாய் என்றாய் நீ. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"குருந்த மரமே! மழை நன்றாகப் பெய்யாமலேயே மலர்களை நிரப்பி, இது கார்ப் பருவமோ! என்று எண்ணும்படி என் தலைவியைத் தணித்து உடல் மெலிந்து துன்பம் அடையச் செய்தாய்" என்று தோழி தலைவியின் காதில் விழும்படி இது கார்ப்பருவம் அன்று என்று கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*115. வினை முற்றி மீண்ட தலைமகன், தலைமகட்குத் தூது விடுகின்றான், தூதிற்குச் சொல்லியது*

*படுந்தடங்கட் பல்பணைபோல் வான்முழங்க மேலுங்*
*கொடுந்தடங்கட் கூற்றுமின் னாக - நெடுந்தடங்கண்*
*ணீர்நின்ற நோக்கி! நெடும்பணைமென் றோளாட்குத்*
*தேர்நின்ற தென்னாய் திரிந்து.*

*சொற்பிரிப்பு:*
*படும் தடங் கண் பல் பணைபோல் வான் முழங்கல் மேலும்,*
*கொடுந் தடங் கண் கூற்று மின் ஆக, நெடுந் தடங் கண்*
*நீர் நின்ற நோக்கின்நெடும் பணை மென் தோளாட்கு,*
*'தேர் நின்றது' என்னாய், திரிந்து.*

*தலைவனின் தேர் வாசலில் வந்து நிற்கிறது, உன் தலைவன் திரும்பிவிட்டான் என்பதைக் கூறுவாய் தோழியே!*
*ஒலிக்கின்ற, பரந்த முழக்கும் பாகத்தையுடைய, பல முரசுகளைப் போன்று முகில்கள் இடியோசை எழுப்ப, மேலும், கொடிய பெரிய மின்னும் கண்களையுடைய கூற்றுவன் போன்று மின்னலானது கார்காலம் வந்தது என்று தலைவியை வருத்த, அதனைத் தாங்க மாட்டாது நீண்ட பெரிய கண்களில் கண்ணீர் தளும்பும் படி பார்க்கும், மூங்கில் போன்ற மெல்லிய தோள்களையுடைய தலைவியிடம், தலைவனின் தேர் வாசலில் வந்து நிற்கிறது, உன் தலைவன் திரும்பிவிட்டான் என்பதைக் கூறுவாய் தோழியே! (என்று தலைவன் தோழியை நோக்கிக் கூறினான்.)*

*ஒலியா நின்ற தடங்கண்ணையுடைய பலமுரசு போல் முகில்கள் முழங்குவதன் மேலும், மின்னே கொடிய தடங் கண்ணினையுடைய கூற்றமாக, அழுகின்ற நீர் விடாது நின்ற நெடுந்தடங்கண்ணோக்கினையுடைய நெடும்பணை மென்றோளாட்கு நீ, மறித்துவந்து நின் மனை வாயிலின் கண்ணே அவன்றேர் நின்றதென்று சொல்லுவாய்;எமக்கு முன்னே சென்று தூதாக. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"மேகம் இடிக்க மின்னல் தலைவியை வருத்த அதைப் பொறுக்காத தோழியே! என் தேர் திரும்பி வந்து நின் இல்லத்து வாயிலில் நிற்கிறது எனக் கூறுவாயாக" என்று தலைவன் தோழியிடம் கூறியது.(பால சங்கரன் உரை)*

*116. பருவம் கண்டு, ஆற்றாளாய தலைமகள் ஆற்றல் வேண்டி, தோழி தான் ஆற்றாளாய்ச் சொல்லியது*

*குருந்தே! கொடிமுல்லாய்! கொன்றாய்! தளவே!*
*முருந்தே யெயிறொடுதார் பூப்பித் - திருந்தே*
*யரும்பீர் முலையா ளணிகுழறாழ் வேய்த்தோள்*
*பெரும்பீர் பசப்பித்தீர் பேர்ந்து.*

*சொற்பிரிப்பு:*
*குருந்தே! கொடி முல்லாய்! கொன்றாய்! தளவே!*
*முருந்து ஏய் எயிறொடு தார் பூப்பித்திருந்தே,*
*அரும்பு ஈர் முலையாள் அணி குழல் தாழ் வேய்த்தோள்*
*பெரும் பீர் பசப்பித்தீர், பேர்ந்து.*

*கார்காலம் தோன்றிய அறிகுறிகளால் தலைவனின் வரவை எண்ணியிருந்த தலைவி பசலை நோய் கண்டாள்.*
*குருந்த மரமே! கொடி முல்லையே! கொன்றை மரமே! செம்முல்லைச் செடியே! மயிற்பீலியின் அடிப்பாகத்தினையொத்த பற்களுடனே, மலர்ந்த மலர்களால் ஆன பூமாலையினையும் அணிந்துள்ளவளும், பூத்திருக்கும் அரும்பின் தன்மையையும், அழகில் தோற்கச் செய்யும் முலைகளையுடைய என் தலைவியின், அழகிய கூந்தல் தொங்கிப் புரளும்படியான மூங்கிலையொத்த தோள்களை, பெரும் பீர்க்கம் பூவின் நிறம் போன்று மீண்டும் பசலை பூக்கச் செய்துவிட்டீர்கள் (என்று தோழி வருந்துகிறாள். கார்காலம் தோன்றிய அறிகுறிகளால் தலைவனின் வரவை எண்ணியிருந்த தலைவி பசலை நோய் கண்டாள்.)*

*குருந்தே! கொடி முல்லாய்! கொன்றாய்! தளவே! பீலி முருந்தினையொக்கும் இவளெயிற்றுடனே பூமாலையையும் பூப்பித் திருந்து கோங்கரும்பு முதலாயினவற்றை வென்று சிதைக்கும் முலையினை யுடையாளுடைய குழறாழ்ந்த நிறைந்த வேய்த்தோள்களைப் பெரும்பீர் நிறம் போலப் பசப்பித்தீர்மீட்டும். (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"குருந்த மரமே! கொடி முல்லையே! கொன்றை மரமே! முல்லைச் செடியே! தலைவியின் அழகிய கூந்தல் தாழ்ந்து புரள்கின்ற மூங்கில் போன்ற தோள்களை, பீர்க்கம் பூவின் நிறம் போல பசலை திரும்பவும் பூக்கச் செய்தீர்! இது என்ன கொடுமை" என்று தோழி கூறியது.(பால சங்கரன் உரை)*

*117.     தலைமகளைத் தோழி பருவம் காட்டி, வற்புறுத்தியது*

*கதநாகம் புற்றடையக் காரேறு சீற*
*மதநாக மாறு முழங்கப் - புதனாகம்*
*பொன்பயந்த வெள்ளி புறமாகப் பூங்கோதாய்!*
*என்பசந்த மென்றோ ளினி.*

*சொற்பிரிப்பு:*
*கத நாகம் புற்று அடையக் கார் ஏறு சீற,*
*மத நாகம் மாறு முழங்க, புதல் நாகம்*
*பொன் பயந்த, வெள்ளி புறமாக;-பூங்கோதாய்!-*
*என் பசந்த, மென் தோள், இனி?*

*தலைவன் திரும்பும் கார்காலமும் வந்தது. தலைவன் திரும்பி வந்துவிடுவான் என்று தெரிந்தும் ஏன் பசலை நோய் கண்டாய் தலைவி?*
*முகிலின் இடியானது சினந்து முழங்கியதால் சினம் மிக்கப் பாம்புகள் தம் புற்றுக்குள் சென்று அடைந்துவிட, மதம் கொண்ட யானை அந்த இடி முழக்கத்திற்கு மாறாக முழங்க, புதர்களாற் சூழப்பட்ட சுரபுன்னை மரங்கள் பொன் போன்ற பூந்தாதுகளை கொண்டனவாகப் பூத்து அதன் புறத்தே சூழ்ந்திருக்கும் வெண்மையான மலர் இதழ்களின் மீது தூவிட, தலைவன் திரும்பும் கார்காலமும் வந்தது. அழகிய கூந்தலையுடைய தலைவியே! (தலைவன் திரும்பி வந்துவிடுவான் என்று தெரிந்தும்), என்ன காரணத்தால் இப்பொழுது உனது மெல்லிய தோள்களில் பசலை பூக்களாயின? (என்று கேட்டு தோழி தலைவியை வருந்தவேண்டாம் என வற்புறுத்தினாள்.)*

*சினத்தினையுடைய பாம்புகளும் புற்றினையடையும் வகை உருமேறு வெகுண்டிடிப்ப, மதத்தையுடைய யானைகள் அவ்வுரு மேற்றுக்கு எதிரே முழங்க, புதலால் சூழப்பட்ட நாகமரங்கள் வெள்ளிபோலும் இதழ்கள் புறஞ்சுற்றப் பொன்போலுந் தாதுக்களை உள்ளே பயந்தனவாதலாற் பூங்கோதாய்! நின் மென்றோள்கள் யாதுகாரணத்தாற் பசந்தன இப்பருவத்து? (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"நாகங்கள் புற்றில் சேரும்படியாக இடி இடிக்க, அதற்கு எதிராக மத யானை ஒலிக்கவும், புதர்கள் சூழப்பட்ட புங்கைமரம் பூக்களைப் பூக்கவும் கார்காலம் வந்தது. காதலரும் வருவார். மென்மையான தோள்கள் எக்காரணத்தால் பசலைப் பூத்தன" என்று தலைவியைத் தோழி ஆற்றினாள்.(பால சங்கரன் உரை)*

*118. 'பருவம் அன்று' என்று, வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் வன்புறை எதிர் அழிந்துச் சொல்லியது*

*கார்தோன்றிப் பூவுற்ற காந்தண் முகைவிளக்குப்*
*பீர்தோன்றித் தூண்டுவாண் மெல்விரல்போ - னீர்தோன்றித்*
*தன்பருவஞ் செய்தது கானந் தடங்கண்ணாய்!*
*என்பருவ மன்றென்றி யின்று.*

*சொற்பிரிப்பு:*
*கார் தோன்றிப் பூவுற்ற காந்தள் முகை, விளக்குப்*
*பீர் தோன்றித் தூண்டுவாள் மெல் விரல்போல்; நீர் தோன்றி,*
*தன் பருவம் செய்தது கானம்;-தடங் கண்ணாய்!-*
*'என் பருவம் அன்று' என்றி, என்று.*

*கார்காலத்தின் அறிகுறிகள் தெளிவாகத் தோன்றுகையில் எதனால் இது கார்ப்பருவம் அல்லவென்று சொல்ல முற்படுகிறாய் தோழி?*
*கார்காலம் துவங்கியதால், காந்தள் மொட்டுக்கள், எரியும் விளக்கின் சுடர் பீர்க்கம் பூவின் மஞ்சள் நிறம் போல ஒளி மங்கியதால், அதனைத் தூண்டி நன்கு எரியச் செய்பவளின் கையின் மெல்லிய விரல்கள் போலப் பூத்து நின்றன. எங்கும் மழையால் நீர் நிரம்பி தனக்குரிய கார்ப்பருவத்தினைக் காட்டி நின்றது கார்காலத்து முல்லை நிலக் காடு. (அவ்வாறு இருக்க) பெரிய கண்களையுடைய தோழியே! எதனால் இது என் காதலர் திரும்புவதாகச் சொன்ன கார்ப்பருவம் அல்லவென்று சொல்ல முயல்கிறாய் இப்பொழுது? (என்று தலைவி தோழியை வினவினாள்.)*

*விளக்கு மழுங்கிப் பீர்நிறம் கோடலான் அவ்விளக்கினைத் தூண்டுவாள் மெல் விரலினைத் தோன்றிப் பூவின் மேற் சென்றன காந்தண் முகைகள் போலும் வகை கார் நீர் தோன்றுதலாற் காரின் பருவத்தைச் செய்தன கானங்கள்; இத்தைக் கண்டும், தடங்கண்ணாய்! எனக்குக் காதலர் சொல்லிய பருவம் அன்றென்னா நின்றி. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"பீர்க்கம் பொன் நிறம் போன்ற மலர்களையும், காந்தள் அரும்புகள் கார்த்திகை மலர் மீது பொருந்தியும், முல்லைநிலம் மழையால் நிரம்பியும் தனக்குரிய கார்ப்பருவத்துடன் விளங்குகின்றன. அவ்வாறு இருக்க தலைவர் வருவதாகக் கூறிய கார்ப்பருவம் அன்று என்று நீ எவ்வாறு கூறுகின்றாய்" என்று தலைவி தோழியிடம் வினவுதல்.(பால சங்கரன் உரை)*

*119. 'பருவம் அன்று' என்று, வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் வன்புறை எதிர் அழிந்துச் சொல்லியது*

*உகவுங்கா ரன்றென்பா ரூரா ரதனைத்*
*தகவு தகவன்றென் றோரேன் - றகவேகொல்*
*வண்டுடுப்பாய்ப் பாம்பாய் விரலாய் வளைமுறியாய்*
*வெண்குடையாந் தண்கோடல் வீந்து.*

*சொற்பிரிப்பு:*
*'உகவும் கார் அன்று' என்பார், ஊரார்; அதனைத்*
*தகவும் தகவு அன்று என்று ஓரேன்; தகவேகொல்?*
*வண் துடுப்பு ஆய், பாம்பு ஆய், விரல் ஆய், வளை முரி ஆய்,*
*வெண் குடை ஆம்,-தண் கோடல் வீந்து.*

*கார்காலம் இதுவல்ல என்று சொல்கிறார் சிலர், அது சரியல்ல இது கார்காலம்தான் தோழி!*
*மழை விழும் கார்காலம் இதுவல்ல என்று சொல்கிறார் ஊரார் சிலர். தோழியே! அக்கூற்று உண்மையானதா அல்லது உண்மைக்குப் புறம்பானதா என்று நான் ஆராய்ந்து அறியேன். அவ்வாறு கார்காலம் அல்ல என்று உரைப்பது பொருத்தமான செயலாகுமா? வண்மையான துடுப்பு போல அரும்பி, பிறகு பாம்பு போல அவ்வரும்பு  நீண்டு வளர்ந்து, கை விரல்கள் போல விரிந்து, வளையும் தளிர் இதழ்களாகக் கவிழ்ந்து, வெண்குடையைப் போலக் கீழ் நோக்கி முடிவுற்றுக் காணப்படும் குளிர்ந்த வெண்காந்தள் மலர்கள் இது கார்ப்பருவம் இது என்பதை வலியுறுத்தும் (என்று தோழியிடம்  தலைவி கூறுகின்றாள்.)*

*மழைத்துளிகள் உகவுங் கார்ப்பருவம் அன்றென்று சொல்லாநின்றார் இவ்வூரார்; அச் சொலவு தான் அவர்க்குக் குணமோ குற்றமோ என்பதறியேன்; அதுதான் அவர்க்குக் குணமே கொல்லோ! வளவிய துடுப்பாய்ப் பாம்பாய்விரலாய் வளைமுறியாய் வெண்குடையாகாநின்றது தண்கோடலழிந்து. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"என் தோழியே! இந்த ஊரில் உள்ளவர் கார்ப் பருவம் அன்று என்று உரைப்பர். வெண்காந்தள் துடுப்பைப் போல் அரும்பி பின்பு பாம்பைப் போல் அரும்பு நீளப் பெற்று, கைவிரல் போன்று விரிந்து வளையும் தளிர் போன்ற இதழ்களைக் கொண்டு கீழ் முகமாக மடிந்து வெண்மையான குடை போன்று காணப்பட்டுக் கார்ப் பருவம் இது என்பதை வலியுறுத்தும். அங்ஙனம் இருக்க இதனைக் கார்ப் பருவம் அன்று என்பது தக்கதோ?" எனத் தோழியை நோக்கித் தலைவி வினவினாள்.(பால சங்கரன் உரை)*

*120. 'பருவம் அன்று' என்று, வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் வன்புறை எதிர் அழிந்துச் சொல்லியது*

*பீடிலா ரென்பார்கள் காணார்கொல் வெங்கதிராற்*
*கோடெலாம் பொன்னாய்க் கொழுங்கடுக்கைக் - காடெலா*
*மத்தங் கதிரோன் மறைவதன்முன் வண்டொடுதேன்*
*றுத்த மறையுந் தொடர்ந்து.*

*சொற்பிரிப்பு:*
*‘பீடு இலார்’ என்பார்கள் காணார்கொல்?-வெங் கதிரால்*
*கோடு எலாம் பொன் ஆய்க் கொழுங் கடுக்கை, காடு எலாம்,*
*அத்தம் கதிரோன் மறைவதன்முன், வண்டொடு தேன்,*
*துத்தம் அறையும், தொடர்ந்து.*

*கொன்றை மலர்கள் மலர்ந்து, வண்டுகள் பாடும் மாலைப் பொழுதைக் கண்ட பிறகும் இது கார்காலம்தான் என்ற உண்மையை அறிய மாட்டார்களா?*
*தோழியே! (கார்காலம் அல்லாததை எல்லாம் கார்காலம் என்று கூறும் அறியாமை கொண்ட இத்தகையோர்) "பெருமைக்குரியவர்கள் அல்ல" என்று நம்மீது இழிசொல் கூறும் இவ்வூரார் காணமாட்டார்களா இது கார்காலம்தான் என்று? வெப்ப மிக்க கதிரின் ஒளியால் மரக்கிளைகளில் பொன் போன்ற பூக்கள் நிரம்பப்பெற்று செழுமையாகக் கொன்றை மரங்கள் பூத்திருக்கின்றன. முல்லை நிலப் பகுதி காடுகளில் எல்லாம் கதிரவன் மாலைப் பொழுதில் மறைவதற்கு முன்னர் வண்டுகளுடனே தேன் வண்டுகளும் இணைந்து துத்தம் இசையை ("ரீ" என்னும் இசை ஒலி அல்லது ரீங்காரம் ) என்னும் பண்ணினை ஒலிக்கும் நிலை கண்டு இது கார்காலம்தான் என்று அறிய மாட்டார்களா? (என்று தலைவி தோழியை வினவினாள்.)*

*நம்மைப் பெருமையிலரென்று சொல்லுவார் காணாதாராகாரே! வளவிய கொன்றைகள் கொம்பெல்லாம் பொன்னாகப் பூக்க. வண்டொடு தேன்கள் துத்தம் என்னும் பண்ணினைத் தம்முட் பொருந்தி ஒலியா நின்றன காடெல்லாம்; வெய்ய கதிரோடு கூடி வெங்கதிரோன் அத்த மலையைஅடைதற்கு முன்னே. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"கொன்றை மலர்கள் பூக்க முல்லைக்காடு எங்கும் வண்டுகள் கூடித் துத்தம் என்ற பண்ணைப் பாடும். இதைப் பருவம் அல்லாப் பருவத்தினைக் கண்டு வருந்தும் இழிகுணம் உடையவர்கள் என நம்மைக் குறைகாணும் இந்த ஊரவர் இது கார்ப் பருவம் தான் என்று அறிய மாட்டாரோ!" என்று தலைவி தோழியை வினவினாள்.(பால சங்கரன் உரை)*

*121. 'பருவம் அன்று' என்று, வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் வன்புறை எதிர் அழிந்துச் சொல்லியது*

*ஒருத்தியா னொன்றல பல்பகை யென்னை
விருத்தியாக் கொண்டன வேறாப் - பொருத்தின்
மடலன்றின் மாலை படுவசி யாம்பல்
கடலன்றிக் காரூர் கறுத்து.*

*சொற்பிரிப்பு:
ஒருத்தி யான்; ஒன்று அல பல் பகை, என்னை
விருத்தியாக் கொண்டன-வேறாப் பொருத்தின்,
மடல் அன்றில், மாலை, படு வசி, ஆம்பல்,
கடல், அன்றி, கார், ஊர், கறுத்து.*

*கார்காலத்துப் பல நிகழ்வுகளும் ஒற்றை ஆளான என்னை வருத்துதலே தமது தொழிலாகக் கொண்டுள்ளன தோழியே!
ஒற்றை ஆளாக நான் இருந்தும், ஒன்று அல்லாது பல பகைகளும் என்னை வருத்துதலே தமது தொழிலாகக் கொண்டுள்ளன. துணை அன்றிலை விட்டுப் பிரிந்து வேறாகப் பொருத்தமற்று பனைமடலில் தங்கியுள்ள அன்றில் பறவையும், மாலைப்பொழுதும், பெய்யும் மழையும், ஆம்பற் குழலோசையும், கடலும் மட்டுமின்றி ஊர்ந்து செல்லும் முகில்களும் என் மேல் சினம் கொண்டுள்ளன இதற்கு நான் என்ன செய்வது தோழியே? (எனத் தோழியிடம் கூறி தலைவி வருந்தினாள்.)*

*யானொருத்தி; எனக்கு ஒன்றல்ல பல பகைகள் என்னை மலைத்தலே தமக்கு ஒழுக்கமாகக் கொண்டன: வேறாகத் துணையைப் பிரிந்து பொருந்தில் மடற்பனை மேலிருந்த அன்றில், மாலைப்பொழுது, மழை பெயல், ஆம்பற்குழல். கடல் அன்றியே முகில்கள் என்று சொல்லப்பட்டஇவையெல்லாம் மேல் வெகுண்டு. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"தோழி! நான் ஒருத்தியாய் இருந்தும், துணையை விட்டுப் பிரிந்த அன்றில் பறவையும், மாலையும், மழையும், ஆம்பல் குழல் ஓசையும், கடலும், கார்முகிலும், எனக் கூறப்பட்ட பல பகைகளும் என் மீது ஊர்ந்து என்னை வருத்துவதே தம் தொழிலாகக் கொண்டுள்ளன. இதற்கு நான் என் செய்வேன்" என்று தலைவி கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*122. 'பருவம் அன்று' என்று, வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் வன்புறை எதிர் அழிந்துச் சொல்லியது*

*கானந் தலைசெயக் காப்பார் குழற்றோன்ற*
*வேன மிடந்த மணியெதிரே - வான*
*நகுவதுபோன் மின்னாட நாணிலென் னாவி*
*யுகுவது போலு முடைந்து.*

*சொற்பிரிப்பு:*
*கானம் தலைசெய, காப்பார் குழல் தோன்ற,*
*ஏனம் இடந்த மணி எதிரே, வானம்*
*நகுவதுபோல் மின் ஆட, நாணா என் ஆவி*
*உகுவது போலும், உடைந்து.*

*முல்லைநிலக் காடுகள் தழைத்துள்ள கார்காலத்தில் தலைவன் திரும்பாததால் என்னுயிரானது, நொறுங்கி உதிர்ந்து விழுவது போலவுள்ளது தோழியே! தோழியே! முல்லைநிலக் காடுகள் தழைத்து ஓங்கவும், ஆனிரைகளை மேய்த்து அவற்றைக் காக்கும் இடையர்கள் ஊதும் புல்லாங்குழலிசையானது ஒலிக்கவும், பன்றிகள் நிலத்தைக் கிளறியதால் தோன்றிய மாணிக்கங்களைக் கண்டு அவற்றுக்கு எதிராக, முகில்கள் சிரிப்பதுபோல மின்னல்கள் மின்னவும் கார்காலம் வந்துள்ளது. (ஆனால் இக்காலத்தில் மீளுவேன் என்று சொன்ன சொல் தவறிய தலைவன் வாராத இந்நிலை கண்டும் உயிரை நீக்காத) நாணமில்லாத என்னுயிரானது, நொறுங்கி உதிர்ந்து விழுவது போலவுள்ளது (என்று தலைவி தோழியிடம் தன் துயரை வெளிப்படுத்தினாள்.)*

*காடுகள் தழைத்துத் தலையெடுக்க, ஆயர் ஊதுங் குழலோசை தோன்ற, ஏனங்கள் இடந்த மணிகளினெதிரே முகில்கள் சிரிப்பதுபோல மின்கள் ஒளிவிட இக்காலத்தும் இறந்து படாமையான் நாணில்லாத என்னுயிர் ஒழுகுவது போலவுளது. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"முல்லைத் தழைக்க, ஆயர் புல்லாங்குழல் ஓசை எழுப்ப, மின்னல் ஒளிவிட இந்நிலையைக் கண்டும் இறவாமையால் நாணம் இல்லாத என் உயிர் தூளாகி உதிர்ந்து விழுவது போல் உள்ளன" என்று தலைவி தோழியிடம் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*123. குறித்த பருவத்தின்கண் வந்த தலைமகனைப் புணர்ந்திருந்த தலைமகள் முன்பு தன்னை நலிந்த குழல் ஓசை அந்திமாலைப் பொழுதின்கண் கேட்டதனால், துயர் உறாதாளாய்த் தோழிக்குச் சொல்லியது*

*இம்மையாற் செய்ததை யிம்மையே யாம்போலு*
*மும்மையே யாமென்பா ரோரார்கா - ணம்மை*
*யெளிய ரெனநலிந்த வீர்ங்குழலா ரேடி!*
*தெளியச் சுடப்பட்ட வாறு.*

*சொற்பிரிப்பு:*
*இம்மையால் செய்ததை இம்மையே ஆம் போலும்;*
*உம்மையே ஆம் என்பார் ஓரார்காண்;-நம்மை*
*எளியர் என நலிந்த ஈர்ங்குழலார், ஏடி!*
*தெளியச் சுடப்பட்டவாறு!*

*தலைவனைப் பிரிந்திருந்த என்னை வருத்திய குழலும் அதன் கொடிய செய்கையின் பலனை இப்பிறவியிலேயே அடையும் வண்ணம் துளையிடப்படுவதைக் காண்பாய் தோழி!*
*இப்பிறப்பில் ஒருவர் செய்யும் வினைக்கு இப்பிறப்பிலேயே அது பலன் கொடுப்பது போலத் தோன்றுகிறது. ஆனால், மறுபிறப்பில் தான் அந்த வினையின் பலன் நிகழும் என்று கூறுவோர் இவற்றையெல்லாம் நன்கு ஆராயாத அறிவற்றோர் என்பதைக் காண்பாயாக, ஏடி தோழியே! தலைவனைப் பிரிந்திருந்த நம்மை, வருத்துதற்கு இலகுவானவர்கள் என்று எண்ணத்தில் வருத்திய குளிர்ந்த புல்லாங்குழலார் உலகிற் பலர் அறியச் சுட்டுத் துளை செய்யப்பட்ட முறையினைக் காண்பாயாக (என்று தலைவி தோழியிடம் கூறினாள்.)*

*இப்பிறப்பின்கட் செய்த தீவினை இப்பிறப்பின்கண்ணே விளையும் போலும்! மறுபிறப்பின்கண் ஆம் என்பார் அறியாதார் காண்; முன்பு நம்மை எளியரெனக் கொண்டு துயர்செய்த ஈர்ங்குழலார், தோழி! எல்லாரும் அறியச் சுடப்பட்டவாற்றைப் பாராய். குழல் நலிவது நெருப்பாற் சுடப்பட்டுத் துளை பட்ட பின்: சூடுண்டது பிறரை நலிந்ததாற் பயனென்று குழலைச் சொல்லுமாறென்னையெனிற் பிறரை நலியுந் தன்மை முன்பே அதற்குளதாதலாற்பட்ட தெனக் கொள்க. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"தோழி! குழல் ஓசை பலரும் அறிய சுட்டுத் துளைப்பட்ட முறையைக் காண்பாய்! ஒருவன் செய்த தீவினை இப்பிறவியிலேயே பயனைத் தரும். இதை அறியாதவரே இத்தீவினை மறுபிறவியில் பயன் அளிக்கும் என்று கூறுவர்" என்று தலைவி தோழியிடம் கூறியது.(பால சங்கரன் உரை)*

# *5. மருதம்: மூலமும் – உரையும்*

***பாடல்கள் [124-153]***

*124. பாணற்குத் தலைமகள் வாயில் மறுத்தது*

*செவ்வழியாழ்ப் பாண்மகனே! சீரார்தேர் கையினா*
*லிவ்வகை யீர்த்துய்ப்பான் றோன்றாமு - னிவ்வழியே*
*யாடினா னாய்வய லூரன்மற் றெங்கையர்தோள்*
*கூடினான் பின்பெரிது கூர்ந்து.*

*சொற்பிரிப்பு:*
*செவ்வழி யாழ்ப் பாண்மகனே! சீர் ஆர் தேர் கையினால்*
*இவ் வகை ஈர்த்து உய்ப்பான் தோன்றாமுன்,-இவ் வழியே*
*ஆடினான், ஆய் வயல் ஊரன்; மற்று எங்கையர் தோள்*
*கூடினான், பின் பெரிது கூர்ந்து.*

*எனது மகன் பிறக்கும் முன்னர் என்னுடன் கூடி மகிழ்ந்திருந்த என் தலைவன் இப்பொழுது பரத்தையர்களை விரும்பி அவர்களைக் கூடி மகிழ்கிறான் பாணனே. செவ்வழிப்பண்ணை யாழில் இசைக்கும் பாணனே! அருமையான சிறு தேரினை தனது கையினாலே இவ்வாறாக இழுத்து உருட்டி விளையாடும் எனது மகன் பிறக்கும் முன்னர், இந்த இல்லத்தில் என்னுடன் அன்புடன் கூடி விளையாடியவன் நல்ல வயல்கள் நிறைந்த இந்த மருத நிலத்துக்குரிய ஊரின் தலைவன். மாறாக, பின்னர் எனக்குப் பின் வந்தவர்களாகிய பரத்தையர்களின் தோள்களில் மிகவும் விருப்பத்துடன் கூடி மகிழலாயினன் இப்பொழுது. (என்று தலைவி பாணனிடம் கூறினாள்.)*

*செவ்வழி யாழையுடைய பாண்மகனே! சீரார்ந்த விளையாட்டுத் தேரினைத் தன்கையால் இம்மனையின்கண் ஈர்த்து நடத்துகின்ற என்மகன் பிறப்பதற்கு முன் இம்மனையின்கட் பிரியாது ஆய்வயலூரன் ஒழுகினான்; பின்னை யெல்லாம் எங்கையர் தோளே மிக விரும்பி முயங்கினான்; ஆதலான் இப்பருவம் யாம்அவர்க்குத் தக்கேம் அல்லேம்.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"யாழை உடைய பாணனே! மருத நிலத்துக்குரிய தலைவன் என் மகன் பிறப்பதற்கு முன்னம் இவ்வீட்டில் தங்கினான். என் மகன் பிறந்த பின்பு எனக்குத் தங்கையரான பரத்தையர் தோள்களில் மிகவும் விரும்பிப் புணர்ந்து மகிழலானான். ஆதலால் நான் தலைவனுக்குத் தகுந்த தலைவி அல்லேன்!" எனக் கூறி வாயில் மறுத்தாள்.(பால சங்கரன் உரை)*

*125. பாணற்குத் தலைமகள் வாயில் மறுத்தது*

*மாக்கோல்யாழ்ப் பாண்மகனே! மண்யானைப் பாகனார்*
*தூக்கோற் றுடியோடு தோன்றாமுன் - றூக்கோற்*
*றொடியுடையார் சேரிக்குத் தோன்றுமோ சொல்லாய்*
*கடியுடையேன் வாயில் கடந்து.*

*சொற்பிரிப்பு:*
*மாக் கோல் யாழ்ப் பாண்மகனே! மண் யானைப் பாகனார்*
*தூக்கோல் துடியோடு தோன்றாமுன்,-தூக் கோல்*
*தொடி உடையார் சேரிக்குத் தோன்றுமோ,-சொல்லாய்!-*
*கடி உடையேன் வாயில் கடந்து?*

*பாணனே, என் மகன் பிறப்பதற்கு முன்னர் எனது தலைவன் இந்த வீட்டின் வாயிலைத் தாண்டி பரத்தையர் இல்லம் சென்றதுண்டோ? சொல்வாயாக! அழகிய வளைந்த கோட்டினைக் கொண்ட யாழினை மீட்டும் பாணனே! மண்ணால் உருவாக்கப்பட்ட யானை சிலை மீது அமர்ந்து பாகன் போல கையில் கோலுடன் ஓட்டி விளையாடும் எனது மகன் பிறக்கும் முன்னர் எனது தலைவன், அழகிய வளைவுகளைக் கொண்ட வளையல்களை அணிந்த பரத்தையரது சேரிக்குச் சென்றானா என்று சொல்வாயாக. அவனது வாழ்க்கைத் துணையான எனது வீட்டின் வாயிலைத் தாண்டிச் சென்றானா அவன்? (சொல்வாயாக என்று தலைவி பாணனிடம் வினவினாள்)*

*அழகிய காம்பையுடைய யாழ்ப்பாணனே! மண்ணாற் செய்யப்பட்ட யானைப்பாகராகிய என்மகனார் தாங் கொட்டுகின்ற தூக்கோற் றுடியோடு இங்குத் தோன்றி யொழுகுவதற்கு முன்பு தூய புரிப்புச் செயல் களையுடைய தொடியுடையார் மனையின்கட் சென்று தோன்றி யொழுகுமோ சொல்லாய் இப்பொழுது; அவனால் வரையப்பட்ட வாழ்வினையுடையேன் வாயில்கடந்து. (திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"பாணனே! மண்ணால் செய்யப்பட்ட விளையாட்டு யானைக்கு ஓட்டும் கருத்தாவான என் மகனார் கொட்டும் தூக்கோல் துடியுடனே அவன் பிறப்பதற்கு முன் தலைவனால் மணந்து கொள்ளப்பட்ட வாழ்வையுடைய என் வீட்டு வாயிலைத் தாண்டித் தூய்மை வளைவுகளையுடைய வளையல் அணிந்த பரத்தையரின் இருப்பிடத்துக்குப் போய்க் காணப்படுகிறாரே! என் சொல்லுக்கு மாறுண்டாயின் கூறுவாய்!" என்று தலைவி சொன்னாள்.(பால சங்கரன் உரை)*

*126. பாணற்குத் தலைமகள் வாயில் மறுத்தது*

*விளரியாழ்ப் பாண்மகனே! வேண்டா வழையேன்*
*முளரி மொழியா துளரிக் - கிளரிநீ*
*பூங்கண் வயலூரன் புத்தில் புகுவதன்மு*
*னாங்க ணறிய வுரை.*

*சொற்பிரிப்பு:*
*விளரி யாழ்ப் பாண்மகனே! வேண்டா; அழையேல்;*
*முளரி மொழியாது, உளரிக் கிளரி, நீ,*
*பூங் கண் வயல் ஊரன் புத்தில் புகுவதன்முன்,*
*ஆங்கண் அறிய உரை.*

*தேவையற்ற செய்திகளை என்னிடம் கூறாது சென்றுவிடு, பரத்தையரிடம் சென்று தலைவன் அங்கு வந்து கொண்டிருக்கிறான் என்று சொல் பாணனே!*
*விளரி என்னும் பண்ணை யாழில் இசைக்கும் பாணனே! எனக்குத் தேவையற்ற செய்திகளை இங்கு வந்து கூறாதே. முள் போன்று துன்புறுத்தும் சொற்களைக் கூறாது இவ்விடத்தை விட்டுச் சென்றுவிடு. கிளர்ச்சியுடையவனாய், மலர்ந்த தாமரை மலர்கள் நிறைந்திருக்கும் வயலைக் கொண்ட மருத நிலத்தின் ஊரின் தலைவன், புதிய பரத்தையர் இல்லதிற்குள் நுழையும் முன்னர் அங்கு சென்று அவன் வருகையை அவர்களுக்கு அறிவிப்பாயாக. (என்று தலைவி பாணனிடம் கூறி அவனை விரட்டுகிறாள்.)*

*விளரியென்னும் பண்ணைச் செய்கின்ற யாழையுடைய பாண்மகனே! யாங்கள் விரும்பாதன அழையா தொழிக; எங்கண்மாட்டு நினக்கு ஈரமல்லாத முளரி போன்ற மொழிகளைச் சொல்லாது இங்கு நின்றும் புடை பெயர்ந்து கிளர்ந்து நீ போய்த் தாமரைப் பூப் போன்ற கண்களையுடைய வயலூரன் இன்று புதுமனையின்கண்ணே புகுவதன்முன் அப்புதுமனைக்கண் நீ சென்று வாராநின்றான் என்று அவனாற் காதலிக்கப்பட்ட பரத்தையர்க்கு உரை.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*"யாழைக் கையில் கொண்ட பாணனே! விரும்பப்படாத செய்தியைக் கொண்டு வராதே! கொடிய சொற்களை இங்குக் கூறாதே! இந்த இடம் விட்டுப் புறப்படுவாயாக! தலைவன் பரத்தையர் இல்லத்தில் புகுவதற்கு முன்பு, அங்குச் சென்று, அப்பரத்தையர் அறிந்து மகிழும்படி அவர்களுக்குச் சொல்வாயாக!" என்று தலைவி வாயில் மறுத்தாள்.(பால சங்கரன் உரை)*

*127. பாணற்குத் தலைமகள் வாயில் மறுத்தது*

*மென்கட் கலிவய லூரன்றன் மெய்ம்மையை*
*யெங்கட் குரையா தெழுந்துபோ - யிங்கட்*
*குலங்கார மென்றணுகான் கூடுங்கூர்த் தென்றே*
*யலங்கார நல்லார்க் கறை.*

*சொற்பிரிப்பு:*
*மென் கண் கலி வயல் ஊரன்தன் மெய்ம்மையை*
*எங்கட்கு உரையாது, எழுந்து போய், இங்கண்*
*குலம் காரம் என்று அணுகான்; கூடும் கூர்த்து என்றே*
*அலங்கார நல்லார்க்கு அறை.*

*மனைவியைக் கூடி மகிழ்வதைவிட பரத்தையரே தலைவனுக்கு விருப்பம் என்று அந்தப் பரத்தையரிடம் போய்க் கூறு பாணனே!*
*மென்மையான ஒலி நிறைந்த வயல்கள் கொண்ட மருத நிலத்து ஊரின் தலைவன் உண்மைகளை எங்களுக்குச் சொல்லிக் கொண்டிராமல், எழுந்து செல். இங்கு தலைவனின் இல்லத்தில் தனது மனைவியுடன் கூடிக் களிப்பதைக் காரமான செய்கையாய்க் கருதி தலைவன் விலகுகிறான். பரத்தையருடன் கூடுவதை மிக விரும்பி வருகிறான் என்று தன்னை அலங்கரித்துக் கொண்டு காத்திருக்கும் நல்லவர்களாகிய அந்த பரத்தையரிடம் சென்று சொல் (என்று தலைவி பாணனிடங் கூறினாள்.)*

*மெல்லிய இடத்தையுடைய மிக்க வயலூரனுடைய மெய்யுரைகளை எங்கட்குச் சொல்லாதே இங்கு நின்று மெழுந்து போய் இவ்வுலகத்தின்கட் குலமுடைய மனையாளைப் புணர்தல் புண்ணிற்கு இடுங் காரம் போன்று வெய்யதென்று தலைவன் கருதி யவர்களை நெருங்கானாய், பரத்தையரைப் புணர்தல் பால்போன் றினிக்கும் பண்புடையதெனக் கருதி அவர்களை விரும்பிக் கூடுமென்று, தம்மை யழகுபடுத்திக் கொள்வதா நன்மை யொன்றினையே கொண்டபரத்தையரக்குப் பகர்வாயாக.(திரு. அ. நடராசபிள்ளை உரை நூலில் - பழையவுரை)*

*தலைவி பாணனை நோக்கி, "மருத நிலத்தூரனின் உண்மைச் சொற்களை இங்கு எமக்குக் கூறியவாறு காலத்தைத் தழைக்க வேண்டா! இந்த உலகத்தில் நல்ல குலத்தில் வந்த மனையாளைச் சேர்ந்து களித்தல் புண்ணுக்கு இடும் கார மருந்தைப் போன்று கொடியது என்று, தலைவன் நினைத்து அவளை நெருங்காது, பரத்தையர் புணர்ச்சி இன்பம் தரும் என்று எண்ணி அவர்களுடன் சேர்ந்து வாழும்படியான, குடும்பத்திற்கு ஏற்றமில்லாத அலங்காரப் பொம்மையாகிய, தம்மை அலங்கரித்தலையே பணியாகக் கொண்ட பரத்தையர்க்கு நீ சொல்வாயாக!" எனக் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

***(இது முதல் துறைக் குறிப்புகள் கிடைக்கப்பெறவில்லை)***

*128. தலைமகன் பரத்தையிற் பிரியத் தலைமகள் புலந்து சொல்லியது*

*செந்தா மரைப்பூ வுறநிமிர்ந்த செந்நெல்லின்*
*பைந்தார்ப் புனல்வாய்ப்பாய்ந் தாடுவா - ளந்தார்*
*வயந்தகம்போற் றோன்றும் வயலூரன் கேண்மை*
*நயந்தகன் றாற்றாமை நன்று.*

*சொற்பிரிப்பு:*
*செந்தாமரைப் பூ உற நிமிர்ந்த செந்நெல்லின்*
*பைந் தார், புனல்வாய்ப் பாய்ந்து ஆடுவாள், அம் தார்*
*வயந்தகம்போல், தோன்றும் வயல் ஊரன் கேண்மை*
*நயந்து அகன்று ஆற்றாமை நன்று.*

*ஆற்று நீரில் பாய்ந்து ஆடும் பரத்தையர் மனம் போலச் செயல்படும் தலைவனை விலகி, அவன் இல்லாது துயர் நிறைந்த வாழ்க்கையை வாழ்வதே நல்லது என்று தலைவி எண்ணுகிறாள்.*
*செந்தாமரை மலரோடு ஒன்றாக வளர்ந்து நிற்கின்ற செந்நெற் பயிரினது, பசுமையான கதிர்க்குலைகளையுடைய, ஆற்று நீரில் பாய்ந்து விளையாடுகின்றவள் (தலைவனின் மனம் கவர்ந்த பரத்தை) தனது மார்பின் மீது அணிந்திருக்கும் அழகிய மாலையின் வயப்பட்டு, அவளது மனம் போலச் செயல்படும் மருத நிலத்து ஊர்த்தலைவனது தொடர்பின்றி நயமாக விலகிச் சென்று அந்தத் துயருடன் வாழ்வதே மேலானது (என்று தலைவி விலகிச் செல்ல விரும்பி தன்னுள் கூறிக் கொள்கிறாள்).*

*"செந்தாமரை மலருடன் ஒன்றாக வளர்ந்து நிற்கின்ற செந்நெல் பயிரினது பசுமையான கதிர்க்குலைகளையுடைய ஆற்று நீரில் குதித்து விளையாடும் பரத்தையரின் மார்பில் அணிந்துள்ள அழகிய மாலையின் வயப்பட்ட அவளது மனம் போல விளங்கும் தலைவனின் நட்பினின்றும் நீங்கித் துன்பத்துடன் வாழ்தல் நல்லதாகும்!" என்று தலைவி சொன்னாள்.(பால சங்கரன் உரை)*

*129.* *தலைமகன் பரத்தையிற் பிரியத் தலைமகள் புலந்து சொல்லியது*

*வாடாத தாமரைமேற் செந்நெற் கதிர்வணக்க*
*மாடா வரங்கினு ளாடுவா - ளீடாய*
*புல்லக மேய்க்கும் புகழ்வய லூரன்ற*
*னல்லகஞ் சேராமை நன்று.*

*சொற்பிரிப்பு:*
*வாடாத தாமரைமேல் செந்நெல் கதிர் வணக்கம்*
*ஆடா அரங்கினுள் ஆடுவாள் ஈடு ஆய*
*புல்லகம் ஏய்க்கும் புகழ் வயல் ஊரன்தன்*
*நல் அகம் சேராமை நன்று.*

*தலைவன் தலைவியைப் பிரிந்து சென்று பரத்தையுடன் புனலாடும் செய்தி கேட்ட தலைவி மனம் வருந்தி பரத்தையர் கூடும் தலைவனின் மார்பைத் தான் இனி அணைப்பது நல்லதல்ல என்று எண்ணுகிறாள்.*
*அன்று மலர்ந்த தாமரை மலரின் மேலாக சென்னெற்கதிர்கள் தாழ்ந்து அதை வணங்குவது போலக் காட்சியளிக்கும், கூத்தியர் ஆடாத நீர் மேடையான ஆற்றினில் நீராடி மகிழ்பவளின், பலரும் தழுவும் ஒப்புமை கூறமுடியாத சிறந்த மார்பினை (பரத்தையின் பண்பை இகழ்ச்சியாகக் கூறுதல்) அணைத்துக் கொள்ளும், புகழ் மிக்க மருத நிலத்தின் ஊர்த் தலைவனது நல்ல மார்பினை (மீண்டும் இகழ்ச்சி), நானும் அணைத்துக் கொள்ளாமல் இருப்பதே நல்லது (என்று தலைவன் தலைவியைப் பிரிந்து சென்று பரத்தையுடன் புனலாடும் செய்தி கேட்ட தலைவி மனம் வருந்தி, தலைவனின் நடத்தையால், தனது நிலைக்காக நொந்து கொள்கிறாள்).*

*"மலர்ந்த தாமரை மலரிடத்தே செந்நெற் கதிர்கள் வணங்கி ஏங்குமாறு கூத்தியர் ஆடும் ஆற்று நீரில் நீராடுபவளாக உள்ள பரத்தையர் பலரும் தழுவும் தலைவனின் மார்பைத் தழுவாமை நல்லதே ஆகும்" என்று தலைவி தனக்குச் சொல்லியது.(பால சங்கரன் உரை)*

*130.* வாயில் வேண்டிச் சென்றார்க்குத் தலைமகள் வாயின் மறுத்தது

*இசையுரைக்கு மென்செய் திரநின் றவரை*
*வசையுரைப்பச் சால வழுத்தீர் - பசைபொறை*
*மெய்ம்மருட் டொல்லா மிகுபுன லூரன்றன்*
*பொய்ம்மருட்டுப் பெற்ற பொழுது.*

*சொற்பிரிப்பு:*
*இசை உரைக்கும், என் செய்திரம் நின்று அவரை;*
*வசை உரைப்பச் சால வழுத்தீர்; பசை பொறை*
*மெய்ம் மருட்டு ஒல்லா-மிகு புனல் ஊரன்தன்*
*பொய்ம் மருட்டுப் பெற்ற பொழுது.*

*தலைவனின் செயல்களே அவன் புகழைக் காட்டுகிறது, மேலும் பொய் உரைக்காமல் செல்லுங்கள் மக்களே என்கிறாள் தலைவி.*
*நீர்வளமிக்க மருத நிலத்தின் ஊர்த்தலைவனிடம் நான் கொண்ட அன்பின் காரணமாகப் பொறுமையுடன், உண்மையான போக்கினைக் கொண்டிராத அவனது பொய்மையான மாய மொழிகளைக் கேட்கும்போது தலைவன் பெற்ற புகழினை அவனது செயல்களே காட்டி நிற்கிறது, என்னிடம் காதல் கொண்டு தலைவன் செய்யும் செயல்களே கூடல் கருதி நிற்கும் அவனின் விருப்பத்தைக் காட்டுகிறது, ஆகவே அதிகம் வசை கூறாது செல்லுங்கள்.*
*(என்று தலைவி வாயில் தேடி வந்து தலைவனைப் புகழ்பவர்களுக்குக் கூறுகிறாள்.)*

*"மருத நிலத்தாரின் பொய்யான மொழிகளைக் கேட்டது போதும். என்னிடம் தலைவன் செய்யும் காதல் செயல்களே அவனது புகழைத் தெரிவிப்பவை. புணர்ச்சி எண்ணி நிற்பவரை உம் புகழ்ச் சொற்களே இகழ்ச்சியை எடுத்துக் காட்டும்படி போற்றிக் கூறாது சொல்லுங்கள்" என்று தலைவி வாயில் வந்தவனிடம் கூறியது.(பால சங்கரன் உரை)*

*131.* பாணற்கு வாயின் மறுத்தது

*மடங்கிறவு போலும்யாழ்ப் பண்பில்லாப் பாண!*
*தொடங்குறவு சொற்றுணிக்க வேண்டா - முடங்கிறவு*
*பூட்டுற்ற வில்லேய்க்கும் பூம்பொய்கை யூரன்பொய்*
*கேட்டுற்ற கீழ்நாட் கிளர்ந்து.*

*மடங்கு இறவு போலும் யாழ்ப் பண்பு இலாப் பாண!*
*தொடங்கு உறவு சொல் துணிக்க வேண்டா; முடங்கு இறவு*
*பூட்டுற்ற வில் ஏய்க்கும் பூம் பொய்கை ஊரன் பொய்*
*கேட்டு உற்ற, கீழ் நாள், கிளர்ந்து.*

*தலைவனின் கடந்த கால நடத்தை குறித்து நான் நன்கே அறிவேன், எங்களுக்குள் கலகம் மூட்டும் முயற்சியைக் கைவிடுக பாணனே!*
*வளைந்த இறால் மீனினைப்போன்ற தோற்றம் கொண்ட யாழினை ஏந்தியுள்ளவனே, நற்பண்பு சிறிதும் அற்ற பாணனே! மலர்கள் நிரம்பிய பொய்கைகள் மிகுந்த மருத நிலத்தின் ஊர்த் தலைவன் சொன்ன பொய்மையான மொழிகளைக் கேட்டு நீ தெரிந்துகொண்ட அவனது கடந்த காலச் செய்திகளை, வளைந்த இறால் மீன்கள் நாணினாலே தொடுக்கப்பட்ட வில்லினை ஒத்திருக்கும் கொடிய சொற்களால் விவரித்துக் கிண்டலாக என்னிடம் நினைவூட்டும் வகையில் சொல்லி, ஊடல் விலகி எனக்கும் தலைவனுக்கும் இடையே மீண்டும் தொடங்கப் பெற்றுள்ள உறவினை உனது சொற்களால் துண்டிக்க வேண்டாம். தலைவனைப் பற்றி நன்கறிவேன் (என்று தலைவி பாணனிடம் கூறினாள்)*

*"மடங்கிய இறால் மீனைப் போன்று யாழையுடைய பண்புகள் இல்லாத பாணனே! தலைவன் பொய் மொழிகளைக் கேட்டு அறிந்து சென்ற நாட்செய்திகளை எடுத்துச் சொல்லி எமக்குள் தொடங்கப் பெற்றுள்ள உறவின் தன்மையை உன் சொற்களால் துணிய வேண்டியது இல்லை. யாம் நன்றாய் அறிவோம்!" எனத் தலைவி பாணனிடம் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*132.* பாணற்கு வாயின் மறுத்தது

*எங்கை யரிலுள்ளா னேபாண! நீ பிறர்*
*மங்கையரி லென்று மயங்கினாய் - மங்கையரி*
*லென்னா திறவா திவணின்னி கந்தேகல்*
*பின்னாரி லந்தி முடிவு.*

*சொற்பிரிப்பு:*
*எங்கையர் இல் உள்ளானே பாண! நீ பிறர்*
*மங்கையர் இல் என்று மயங்கினாய்; மங்கையர் இல்*
*என்னாது இறவாது, இவண் இன் இகந்து ஏகல்*
*பின்னார் இல் அந்தி முடிவு.*

*பரத்தையர் வீட்டில் வாழும் பாணனே, இந்த வீடு அத்தகைய பெண்கள் வாழும் வீடல்ல, பரத்தையர் வீடுகளுக்கேச் சென்றுவிடு.*
*(தலைவன் எனக்குப் பிறகு வரித்துக் கொண்ட) எனது தங்கையர்களாகிய பரத்தையர் வீட்டில் இருக்கும் பாணனே! (நான் வாழும் இந்த இல்லத்தை) நீ அத்தகைய பிற பெண்கள் வாழும் வீடு என்று தவறாகக் கருதி விட்டாய் போலிருக்கிறது. அது போன்ற பெண்கள் வாழும் வீடு இது என்று தவறாக எண்ணாமல், இங்கிருந்து கிளம்பு. என் பின்னவர்களாகிய பரத்தையரின் வீட்டில் மாலைப் பொழுது மறையும் நேரம் மணவிழாத் தொடங்கப் போகும் நேரத்திற்குள் பரத்தையர் மனைக்குச் சென்றுவிடு. (என்று தலைவி பாணனிடம் கூறுகின்றாள்.)*

*"பாணனே! பிறரான பரத்தையர் வீடு என்று எண்ணி நீ வந்து விட்டாய். பரத்தையின் வீட்டில் மண விழாத் தொடங்கும் வேளையாம். என் இல்லத்தைப் பரத்தையர் இல்லம் என்று எண்ணாது நீங்கி பரத்தையர் மனைக்குச் செல்வாயாக!" என்று தலைவி பாணனிடம் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*133.* பாணற்கு வாயின் மறுத்தது

*பாலையாப் பாண்மகனே! பண்டுநின் னாயகற்கு*
*மாலையா ழோதி வருடாயோ - காலையாழ்*
*செய்யு மிடமறியாய் சேந்தாநின் பொய்ம்மொழிக்கு*
*நையு மிடமறிந்து நாடு.*

*சொற்பிரிப்பு:*
*பாலை யாழ்ப் பாண் மகனே! பண்டு நின் நாயகற்கு*
*மாலை யாழ் ஓதி வருடாயோ? காலை யாழ்*
*செய்யும் இடம் அறியாய்; சேர்ந்தாய்; நின் பொய்ம்மொழிக்கு*
*நையும் இடம் அறிந்து, நாடு.*

*பாணனே! நீ சொல்லும் பொய்களுக்கு மயங்குபவர் உள்ள இடம் தேடிச் சென்றுவிடு என்று தலைவி கூறுகிறாள்.*
*பாலையென்னும் பண்ணை யாழில் இசைக்கும் பாணனே! முன்னர் உனது தலைவனுக்கு மாலை நேரத்தில் இசைக்கவேண்டிய பண்ணினைப் பாடி அவனுக்கு நீ பணி செய்ததில்லையோ; காலைவேளைக்குரிய பண்ணினை பாடவேண்டிய நிலையினை அறியாதவனாக விளங்கினாய். குறைவறாது நீ கூறும் பொய்களுக்கு மயங்குபவர் இடம் தேடிச் சென்றுவிடு. (என்று தலைவி பாணனிடம் கூறி அவனை விரட்டுகிறாள்.)*

*"யாழை உடைய பாணனே! முன்பு உன் தலைவனுக்கு மாலைப் பண்ணைப் பாடித் தொண்டு செய்தது இல்லையோ! காலைப் பண்ணைப் பாடும் நிலையைத் தெரியாதவனாய் வாடாத உன் பொய்ச் சொற்களுக்கு மனம் நெகிழும்படியான இடத்தை அறிந்து செல்வாயாக!" என்று தலைவி பாணனிடம் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*134. பல வாயில்களை மறுத்த தலைவி தனக்கு வாயில் நேர்ந்தமையினைத் தோழிக்கு விறலி கூறியது*

*கிழமை பெரியோர்க்குக் கேடின்மை கொல்லோ
பழமை பயனோக்கிக் கொல்லோ - கிழமை
குடிநாய்கர் தாம்பல பெற்றாரிற் கேளா
வடிநாயேன் பெற்ற வருள்.*

*சொற்பிரிப்பு:
கிழமை பெரியோர்க்குக் கேடு இன்மைகொல்லோ?
பழமை பயன் நோக்கிக் கொல்லோ? கிழமை
குடி நாய்கர் தாம் பல பெற்றாரின் கேளா,
அடி நாயேன் பெற்ற அருள்.*

*தலைவியின் பெருந்தன்மையால் அவள் என்னை ஏற்றுக் கொண்டது நான் அடைந்த பேறு என்று விறலி தோழியிடம் கூறுகிறாள்.
தலைவிக்கு யாவரையும் தனது உறவு என்று பாராட்டும் பெருந்தன்மையான குணம் குறையாது இருப்பதாலோ; அல்லது பழமையானவை மக்களுக்குப் பலவகையில் பயன் தருவதை உணர்ந்திருக்கும் நிலையினாலோ; உரிமையுடன் தக்க குலத் தலைவர்கள் பலகுடிமக்களையும் உறவாகக் கொண்டிருப்பது போன்று, நாய் போன்று மிகவும் தாழ்மையுள்ள என்னையும் ஏற்றுக் கொண்டுள்ள தலைவியின் அருள் கிடைக்கப் பெற்றேன். (தலைவன் அனுப்பிய பல தூதுகளை மறுத்து விட்ட தலைவி விறலியின் தூதினை மதித்து ஏற்று, தலைவனோடு மீண்டும் மகிழ்ந்திருப்பதைக் கண்டு மனம் நெகிழ்ந்த விறலி, அருகே இருந்த தோழியினிடத்தே தனக்குக் கிடைத்த நல்வாய்ப்பிற்கு நன்றி பாராட்டிக் கூறுகின்றாள்)*

*"பெரியவர்க்கு உரியார் எனப் பாராட்டும் தன்மை நீங்காது போக்கினாலோ, பழையவை மக்களுக்குப் பலவகையிலும் பயன்படுபவை என நினைத்துப் பார்த்தாலோ, பல குடிமக்கள் தலைவர்களைப் பெற்றவரைப் போலத் தாழ்மை கொண்ட யான், உறவு போன்று வாயிலாக வருவதற்குக் காரணமாய் அமைந்த தலைவி அருளானது எனக்கு வாய்த்தது" என்று விறலி தோழியிடம் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*135. காமக்கிழத்தி தலைமகளின் இல்லற வியல்பினை அறிந்து தலைமகனைத் தன்தோழியிட மிகழ்ந்து கூறியது*

*என்கேட்டி யேழாய்! இருநிலத்தும் வானத்து*
*முன்கேட்டுங் கண்டு முடிவறியேன் - பின்கேட்*
*டணியிகவா நிற்க வவனணங்கு மாதர்*
*பணியிகவான் சாலப் பணிந்து.*

*சொற்பிரிப்பு:*
*என் கேட்டி ஏழாய்! இரு நிலத்தும் வானத்தும்,*
*முன் கேட்டும் கண்டும், முடிவு அறியேன்; பின் கேட்டு,*
*அணி இகவா நிற்க, அவன் அணங்கு மாதர்*
*பணி இகவான், சாலப் பணிந்து.*

*தோழியே! தலைவன் தனது மனைவி ஆட்டுவித்தபடி அவள் ஏவிய பணிகளைச் செய்து கொண்டிருக்கிறான் என்கிறாள் காமக்கிழத்தி.*
*நான் சொல்வதைக் கேள் பேதையே! என்ன இது!!! இந்த மண்ணிலும் விண்ணிலும் இதற்கு முன்னர் கேட்டதும், கண்டதும் இல்லை, அதனால் அது குறித்து ஒரு முடிவும் அறியேன் நான். நம்மை விட்டு நீங்கிய தலைவன், மனைவியின் பின் சென்று, அவள் கூறுவதைக் கேட்டு, அணங்குபோன்ற தலைவி ஆட்டுவிக்கும் படி நடந்து அவள் கட்டளைகளைத் தட்ட விரும்பாமல், அவன் அணிந்துள்ள அணிகலன்கள் குலைந்தாடும் வண்ணம், மிகவும் பணிவுடன் நிறைவேற்றுகிறான். (என்று காமக்கிழத்தி தன் தோழியிடம் கூறுகின்றாள்.)*

*"பெண்ணே! தலைவன் தலைவியின் பின் போய் அவள் ஏவியதைச் செய்கிறான். அவள் ஆணையைத் தட்டாமல் நடக்கிறான். இதற்கு முன் இத்தகைய நிலையை நான் அறியேன்" என்று காமக்கிழத்தி தோழியிடம் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*136.* பாணற்கு வாயின் மறுத்தது

*எங்கை யியல்பி னெழுவல்யாழ்ப் பாண்மகனே!*
*தங்கையும் வாயு மறியாம - லிங்க*
*ணுளர வுளர வுவனோடிச் சால*
*வளர வளர்ந்த வகை.*

*சொற்பிரிப்பு:*
*எங்கை இயல்பின் எழுவல்; யாழ்ப் பாண் மகனே!*
*தம் கையும் வாயும் அறியாமல், இங்கண்*
*உளர உளர, உவன் ஓடிச் சால,*
*வளர வளர்ந்த வகை.*

*தலைவன் வருகையைக் கூற வந்த பாணனே, என் மகனோடு மகிழ்ச்சியுடன் நான் வாழும் வாழ்க்கையே எனக்குப் போதும்.*
*எனக்குப் பின்னவளாகிய பரத்தையோடு தலைவன் இயல்பாகக் கூடி மகிழ்ச்சியுடன் கிளர்ச்சியடைந்து வாழ்கின்றான். யாழை இசைக்கும் பாணனே! அவ்வாறே, தனது சின்னஞ்சிறு கைகளை அசைத்தும், மழலை பேசியும் பொருள் புரியாத வகையில் இங்கே குழறும் மொழியுடன் ஓடிவிளையாடி நன்கு வளரும் எனது மகனுடன் நானும் நலமாகவே வாழ்கிறேன். (ஆதலால், எனக்கொரு குறையும் இல்லை, என்று என்று தலைவி பாணனிடம் கூறுகின்றாள்.)*

*"பாணனே! என் மகன் மழலைச் சொல்லால் மகிழ்ந்து, வளர்ந்த முறையால், பரத்தையுடன் கூடிய தலைவன் போன்று கிளர்ச்சி அடைந்து வாழ்கிறேன். எனக்கு ஒரு குறையும் இல்லை" என்று தலைவி கூறினாள்.(பால சங்கரன் உரை)*

137. தலைமகன் புறத்தொழுக்கினைத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது

*கருங்கோட்டுச் செங்க ணெருமை கழனி*
*யிருங்கோட்டு மென்கரும்பு சாடி - யருங்கோட்டா*
*லாம்பன் மயக்கி யணிவளை யார்ந்தழகாத்*
*தாம்ப லசையினவாய் தாழ்ந்து.*

*சொற்பிரிப்பு:*
*கருங் கோட்டுச் செங் கண் எருமை, கழனி*
*இருங் கோட்டு மென் கரும்பு சாடி, வரும் கோட்டால்*
*ஆம்பல் மயக்கி, அணி வளை ஆர்ந்து, அழகாத்*
*தாம் பல் அசையின, வாய் தாழ்ந்து.*

*தலைவன் வயலில் புகுந்து பல்வேறு மலர்களைத் தின்னும் எருமை போல பற்பல பெண்களுடன் உறவாடிக் கொண்டிருக்கிறான் தோழி!*
*கரிய பெரிய கொம்புகளையும், சிவந்த கண்களையும் கொண்ட எருமை, வயலில் பெரிய கொம்பு போல வளர்ந்துள்ள மெல்லிய கரும்புகளை மோதித் தள்ளி, அதன் சிறந்த கொம்புகளால் ஆம்பல் மலர்களைக் களைந்து, அழகிய குவளை மலர்களையும் தின்று அழகாகப் பற்கள் அசை போட வாயைத் தாழ்த்தி உண்ணுகிறது. (அது போல தலைவனும் கரும்பு போன்ற என்னை விலக்கி, ஆம்பல் போன்ற எனது தோழியரைப் புறம் தள்ளி, குவளை போன்ற பலவேறு பரத்தையர் பெண்களுடன் உறவாடுகிறான் பாராய் தோழீ! என்று உள்ளுறையுவமம் தொனிக்கத் தலைவி கூறினாள்.)*

*"எருமை வயல்களில் விளைந்த கரும்பை மோதி, கொம்புகளால் ஆம்பல் மலர்களைக் கலக்கி, குவளை மலர்களைத் தின்று அசைப் போடுவதைக் காண்பாயாக" என்று தலைவி தோழிக்குக் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*138. மணந்தவன் போயபின் வந்த பாங்கியோடு இணங்கிய மைந்தனை இனிதிற் புகழ்ந்து சொல்லியது*

*கன்றுள்ளிச் சோர்ந்தபால் காலோற்றித் தாமரைப்பூ*
*வன்றுள்ளி யன்னத்தை யார்த்துவான் - சென்றுள்ளி*
*வந்தையா வென்னும் வகையிற்றே மற்றிவன்*
*றந்தையார் தம்மூர்த் தகை.*

*சொற்பிரிப்பு:*
*கன்று உள்ளிச் சோர்ந்த பால் கால் ஒற்றி, தாமரைப்பூ*
*அன்று உள்ளி அன்னத்தை ஆர்த்துவான், சென்று உள்ளி,*
*இவந்தையா! என்னும் வகையிற்றே-மற்று இவன்*
*தந்தையார் தம் ஊர்த் தகை.*

*எனது மகனும் அவனின் தந்தையாகிய எனது தலைவனும் வாழும் இந்த மருத நிலத்தின் ஊர் சிறப்பான இடம் தோழி!*
*கன்றினை நினைந்து தாய் எருமைகளின் மடி பால் சொரிய, அப்பாலானது வாய்க்காலாக ஓடி, தாமரைப் பூவினிடத்தே பெரிய வெண்மையான துளியினைப் போன்று அமர்ந்திருக்கும் அன்னப் பறவையினை உண்பிக்க வேண்டி குளத்தினுள் பாய்வதைக் காண்பவர் இதென்ன அழகிய காட்சி என்று வியந்து பாராட்டுவர். அத்தகைய தன்மை கொண்டது எனது மகனின் தந்தையாகிய எனது தலைவனின் இந்த மருத நிலத்து ஊரின் சிறப்பு. (என்று தமது ஊடல் தீர்தற்குக் காரணமாயிருந்த மகனைப் புகழ்வது போல, மீண்டும் வந்து தன்னுடன் இணைந்துவிட்ட தனது தலைவனையும் ஒருசேரப் புகழ்ந்து தோழியிடம் கூறுகிறாள் தலைவி.)*

*"கன்றை நினைத்து எருமைகள் மடிசொரிய, அப்பாலானது தாமரை மலரில் உள்ள அன்னப்பறவைகள் உண்பிக்க வேண்டி வாய்க்காலாக ஓடி தாமரைக் குளத்தை வந்தடைந்ததைக் கண்டவர் இஃதென்ன அழகிய காட்சி என்று ஆச்சரியப்படும் மேன்மையுடையது" என்று தலைவி மகனைப் புகழ்வதுபோல் தந்தையைப் (தலைவனை) புகழ்ந்து தோழியிடம் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*139.* மணந்தவன் போயபின் வந்த பாங்கியோடு இணங்கிய மைந்தனை இனிதிற் புகழ்ந்து சொல்லியது

*மருதோடு காஞ்சி யமர்ந்துயர்ந்த நீழ*
*லெருதோ டுழல்கின்றா ரோதை - குருகோடு*
*தாராத்தோ றாய்ந்தெடுப்புந் தண்ணங் கழனித்தே*
*யூராத்தே ரான்றந்தை யூர்.*

*சொற்பிரிப்பு:*
*மருதோடு காஞ்சி அமர்ந்து உயர்ந்த நீழல்,*
*எருதோடு உழல்கின்றார் ஓதை, குருகோடு*
*தாராத் தோறு ஆய்ந்து எடுப்பும் தண் அம் கழனித்தே-*
*ஊராத் தேரான் தந்தை ஊர்.*

*எனது மகனும் அவனின் தந்தையாகிய எனது தலைவனும் வாழும் இந்த மருத நிலத்தின் ஊர் சிறப்பான இடம் தோழி!*
*மருதமரங்களுடன் காஞ்சி மரங்களும் இணைந்து உயர்ந்து வளர்ந்துள்ளதால் அவை பரப்பும் நிழலின் கீழே, காளைகளுடன் உழவில் ஈடுபட்டுள்ள உழவர்கள் எழுப்பும் ஒலியுடன், கழனியில் நாரைகளும் வாத்துக்களும் எழுப்பும் ஒலியும் சென்று கலந்திருக்க; குளிர்ந்த அழகிய வயல்கள் நிறைந்தது; அமர்ந்து பயணிக்க முடியாத சிறிய பொம்மைத் தேரினை உருட்டும் எனது மகனின் தந்தையாகிய எனது தலைவனின் மருத நிலத்தின் ஊர். (என்று ஊடலைக் கைவிட்டு, தான் தலைவனுடன் மீண்டும் இணையக் காரணமாக இருந்த மகனையும் தன் தலைவனையும், அவர்கள் வாழும் ஊரின் சிறப்பையும் புகழ்ந்து தலைவி தோழியிடம் கூறுகிறாள்).*

*"மேல் அமர்ந்து செல்ல முடியாத சிறு தேரினை உடைய என் மகனின் தந்தையின் ஊர், மருத மரங்களுடன் காஞ்சி மரங்கள் வானளாவிய நிழலில் உழவர்கள் இருக்க, நாரை, வாத்துகள் ஒலியுடன் கலந்து காணும் குளிர்ந்த வயல்களுடன் கூடியதாகும்" என்று தலைவி தோழியிடம் கூறியது.(பால சங்கரன் உரை)*

*140. மன்றன் மனைவரு செவிலிக்குத் தோழி அன்புற வுணர்த்தல்*

*மண்ணார் குலைவாழை யுட்டொடுத்த தேனமதென்*
*றுண்ணாப்பூந் தாமரைப் பூவுள்ளுங் - கண்ணார்*
*வயலூரன் வண்ண மறிந்து தொடுப்பாண்*
*மயலூா ரரவர் மகள்.*

*மண் ஆர் குலை வாழையுள் தொடுத்த தேன் நமது என்று*
*உண்ணாப் பூந் தாமரைப் பூ உள்ளும்;-கண் ஆர்*
*வயல் ஊரன் வண்ணம் அறிந்து தொடுப்பாள்,*
*மயல் ஊர் அரவர் மகள்.*

*தனது கணவனின் தோற்றம் சிறக்கும் வண்ணம் அவன் மேல் காதல் கொண்ட தலைவி அவனுக்கு அழகிய மலர்மாலை தொடுக்கிறாள் செவிலித்தாயே! மண்ணில் படிந்தது போன்று தாழ்ந்து தொங்கும் குலையினையுடைய வாழை மரத்து மலரில் இருக்கும் தேனினை நம்முடையதென்று நினைத்துப் பருகி; அழகிய தமாரைப் பூவினிடத்திலும் தனது கண் நிறைந்த கணவனாகிய காதல் தலைவனின் தோற்றம் கண்டு, அத்தோற்றம் சிறக்கும் வண்ணம் அவனுக்காக மலர்மாலையைத் தொடுப்பாள், அவன் மேல் மையல் கொண்டவளான மருதநிலக் கிழாரின் மகள் (தலைவனுக்கும் தலைவிக்கும், உடன்போக்கின் பின் தலைவன் மனையில் மண விழா நிகழ்ந்தது. அதனைக் கேள்வியுற்ற செவிலித்தாய் மணமக்களைக் காண வந்தபொழுது தோழி மணமக்களின் அன்புடன் கூடிய வாழ்க்கையினை செவிலித்தாய்க்கு எடுத்துச் சொல்கிறாள்.)*

*"மண்ணில் படிந்த குலையினை உடைய வாழை மரத்திடையே வைக்கப்பெற்ற தேனினை நம்முடையது என்று உண்டு மயக்கமுற்ற மருத நிலத்தூரனின் மகள் மருத நிலத்தலைவன் அழகைக் கண்டு மாலையைத் தொடுப்பாள்" என்று தோழி செவிலிக்குக் கூறியது.(பால சங்கரன் உரை)*

*141. ஊடிநின்ற தலைமகளின் நிலையினைத் தலைமகன், சிறந்த மொழியை ஒழிந்துநின்ற வாயிலாகிய பாணற்கு உரைத்தது*

*அணிக்குரன்மே னல்லாரோ டாடினென்ன*
*மணிக்குரன்மேன் மாதார ளூடி - மணிச்சிரல்*
*பாட்டை யிருந்தயரும் பாய்நீர்க் கழனித்தே*
*யாட்டை யிருந்துறையு மூர்.*

*சொற்பிரிப்பு:*
*அணிக் குரல்மேல் நல்லாரோடு ஆடினேன் என்ன,*
*மணிக் குரல்மேல் மாதராள் ஊடி, மணிச் சிரல்*
*பாட்டை இருந்து அயரும் பாய் நீர்க் கழனித்தே-*
*ஆட்டை இருந்து உறையும் ஊர்.*

*எனக்குப் பரத்தையர் தொடர்பு உள்ளது என்று என்னுடன் பிணக்கு கொண்டுள்ளாள் எனது தலைவி பாணனே !*
*அழகிய சிரல் (சிச்சிலிப்பறவை அல்லது மீன்கொத்திப்) பறவை தனது பாட்டினை தங்கிப் பாடுகின்ற, பாய்ந்தோடும் நீர் வளமும், வயல்களும் கொண்ட ஊரில் ஓராண்டுக் காலமாக வாழும் எனது தலைவியானவள்; அழகிய குரல்வளம் கொண்டு பாடும் மேன்மையான நல்ல பெண்களுடன் (பரத்தையருடன் புணர்ந்து) நான் விளையாடினேன் என்று எண்ணி, மணியொலி போன்ற குரலையுடைய மேன்மையான எனது தலைவி என்னுடன் பிணக்கு கொண்டுள்ளாள் பாணனே! (என்று தலைவன் பாணனிடங் கூறுகின்றான்.)*

*"மணியொலி போன்ற குரலையுடைய மேன்மையான தலைவி, அழகிய பரத்தையுடன் நான் விளையாடினேன் என்று நினைத்து ஊடல் கொண்டு உள்ளத்தை அடக்கி இருக்கிறாள். அத் தலைவியின் ஊரானது சிச்சிலிப் பறவை பாடும் வயல்களுடன் கூடியது" என்று தலைவன் பாணனிடம் கூறினான்.(பால சங்கரன் உரை)*

*142.　　　தலைவனைப் பாங்கி புகழ்தல்*

*தண்கயத்துத் தாமரைநீள் சேவலைத் தாழ்பெடை*
*புண்கயத் துள்ளும் வயலூர! - வண்கயம்*
*போலுநின் மார்பு புளிவேட்கைத் தொன்றிவண்*
*மாலுமா றநோய் மருந்து.*

*சொற்பிரிப்பு:*
*தண் கயத்துத் தாமரை, நீள் சேவலைத் தாழ் பெடை*
*புண் கயத்து உள்ளும் வயல் ஊர! வண் கயம்*
*போலும் நின் மார்பு, புளி வேட்கைத்து ஒன்று; இவள்*
*மாலும் மாறா நோய் மருந்து.*

*தலைவனே! உன் மீது மயக்கம் கொண்ட தலைவிக்கு உன் சிறந்த மார்பைச் சேர்வதே அவளது காதல் நோயைத் தீர்க்கும் மருந்தாக அமையும். குளிர்ந்த குளத்தினிடத்திலே மலர்ந்துள்ள தாமரைப்பூவிலேயுள்ள, பெரிய ஆண் அன்னப் பறவையினை கீழ்ப்படியும் பெண் அன்னப்பறவையானது நீரிலிருந்து விரும்பும் படியான கழனிகள் சூழப் பெற்ற மருத நிலத்து ஊர்த் தலைவனே! வளம் மிக்க குளத்தினைப் போன்ற உனது பரந்த மார்பானது, புளியம்பழத்தினை மேலும் மேலும் சுவைக்க ஏற்படும் விருப்பம்போல் விரும்பும் சிறப்பைக் கொண்ட ஒன்றாகும். உன்னுடன் கூடி வாழும் இவள் உன் மீது கொண்ட மாறாத மயக்கத்திற்கு அதுவே நோய் நீக்கும் மருந்து. (என்று தோழி தலைவனைப் புகழ்ந்து அவனிடம் கூறுகின்றாள்.)*

*"குளிர்ந்த குளத்தில் மலர்ந்துள்ள தாமரை மலரிலேயுள்ள பெரிய ஆண் அன்னப்பறவைக்குக் கீழ்ப்படியும் இயல்புடைய பெண் அன்னப்பறவை நீரில் இருந்து நினைக்கும்படியான மருதநிலத் தலைவனே! உன் மார்பானது உன்னுடன் கூடி வாழ்கின்ற இவளது மயக்கத்தை நீங்காத காமநோய்க்கு மருந்தாகிப் புளியம் பழத்தினிடம் மக்கள் அடையும் ஆசை போன்று மேலும் விரும்பும் மேன்மை உடையதாகும்" என்று தோழி தலைவனிடம் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*143.* மன்றன் மனைவரு செவிலிக்கு இகுளை அன்புற வுணர்த்தல்

*நல்வய லூரனறுஞ்சாந் தணியகலம்*
*புல்லிப் புடைபெயரா மாத்திரைக்கட் - புல்லியார்*
*கூட்டு முதலுறையுங் கோழி துயிலெடுப்பப்*
*பாட்டு முரலுமாம் பண்.*

*சொற்பிரிப்பு:*
*நல் வயல் ஊரன் நறுஞ் சாந்து அணி அகலம்*
*புல்லி, புடை பெயரா மாத்திரைக்கண், புல்லியார்*
*கூட்டு முதல் உறையும் கோழி துயில் எடுப்ப,*
*பாட்டு முரலுமாம், பண்.*

*தலைவனும் தலைவியும் கொண்டிருக்கும் அன்பின் நெருக்கத்தால் விடியும் வரையும் ஒருவரை விட்டு ஒருவர் பிரிவதில்லை செவிலித்தாயே!*
*நல்ல வளம் மிகுந்த வயல்கள் நிறைந்த மருத நிலத்தின் ஊர்த் தலைவனின் மணமிக்க சந்தனக் குழம்பு அணியப் பெற்ற அகன்ற மார்பின் மீது கூடியிருக்கும் தலைவி, அவன் மார்பை விட்டு நீங்காது பொழுதும் புலர்ந்துவிடும் வரை இணைந்திருக்கிறாள். அந்த விடியல் வேளையிலே, இல்லத்தின் அருகில் இருக்கும் நெற் குதிர்களின் உச்சியிலே தங்கியிருக்கும் சேவலானது கூவி உறக்கத்திலிருந்து எழுப்ப, அதைக் கேட்டுப் பிற உயிரினங்களும் விழித்தெழுந்து இசையோடு பாடல்களைப் பாடத் துவங்கிவிடும் அன்னையே! (என மணவிழா நிகழ்ந்த வீட்டிற்கு வந்திருந்த செவிலித்தாயிடம் தலைவனும் தலைவியும் கொண்டிருக்கும் அன்பின் நெருக்கத்தால் விடியும் வரையும் ஒருவரை விட்டு ஒருவர் பிரிவதில்லை என்று தோழி கூறுகின்றாள்.)*

*"வளமிக்க மருதத் தலைவனின் மணமிக்க சந்தனக்குழம்பு அணியப்பெற்ற மார்பின் கண்ணே நம் தலைவி அன்புடன் கூடியிருந்து, விட்டு விலகாத வேளையில், நெற்கூடு உச்சியில் தங்கியிருக்கும் சேவல் கூவி எழுப்ப, அதனால் எழுந்த வண்டினங்கள் இசையுடன் பாடலைப் பாடத் தொடங்கிவிடும்" என்று தோழி செவிலிக்குக் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*144. தோழி, தலைமகளின் சேடிகளிலொருத்திக்குச் செவ்வணி யணிந்து விட்டமையினைத் தலைவற்குப் பாங்காயினார் கூறியது*

*அரத்த முடிஇ யணிபழுப்பப் பூசிச்*
*சிரத்தையாற் செங்கழுநீர் சூடிப் - பரத்தை*
*நினைநோக்கிக் கூறினு நீமொழிய லென்று*
*மனைநோக்கி மாண விடும்.*

*சொற்பிரிப்பு:*
*அரத்தம் உடீஇ, அணி பழுப்பப் பூசி,*
*சிரத்தையால் செங்கழுநீர் சூடி, பரத்தை*
*நினை நோக்கிக் கூறினும், 'நீ மொழியல்' என்று,*
*மனை நோக்கி, மாண விடும்.*

*தலைவனே! தோழியின் குறிப்பை அறிந்து, பரத்தை என்ன வசை கூறினாலும் அதற்கு மறுமொழி ஒன்றும் கூறாது, உன் குலம் தழைக்க தலைவியுடன் கூட நீ இல்லம் திரும்புக என்று பாங்கர்கள் கூறுகின்றார்கள்.*
*தலைவியின் தோழியர்களில் ஒருத்திக்கு செம்பட்டினை உடுத்து வித்து, அவள் அணிந்துள்ள அணிகலன்கள் எல்லாம் நிறம் மாறும்படி செஞ்சாந்தைப் பூசு வித்து, மிகுந்த அக்கறையோடு சிவந்தகுவளை மலர்களையும் சூட்டி அவளைத் தோழி நீ வாழும் பரத்தையர் வீடு நோக்கி அனுப்புகிறாள். நீ அவளைப் பிரிவதற்காகப் பரத்தை உன்மீது என்ன வசைபாடினாலும் மறுமொழி கூறாது வீடு திரும்புக, மகப்பேற்றால் உன் குலம் தழைக்க தலைவியுடன் நீ இணைய வேண்டிய காலம், இது என அறிவுரையும் கூறச் சொல்லி தோழிகளில் ஒருத்தியை அனுப்பியுள்ளாள். (என்பதை நீ காண்பாயாக தலைவனே என்று தலைவனிடம் அவனது பாங்கர்கள் கூறுகின்றார்கள்.)*

*"தலைவ! பரத்தை வசை கூறினாலும் ஒன்றும் கூறாது திரும்புக!" என்று தோழர்கள் அறிவுரை கூறினார்கள். மேலும் "நீ வாழும் இந்த இல்லத்தை நோக்கி உன் குலம் விளங்க மேன்மை அடைய தலைவி சேடியை அனுப்பி இருக்கிறாள். அதைக் காண்பாயாக" என்று தலைவனிடம் தோழர்கள் கூறினர்.(பால சங்கரன் உரை)*

*145. மகற்பெற்ற தலைமகளினைச் செய்பெருஞ் சிறப்பொடு சேர்தற்கண் தலைமகன் மகற்கண்டு மகிழ்ந்த வகையினைத் தோழி கண்டு மகிழ்ந்து கூறியது*

*பாட்ட ரவம்பண் ணரவம் பணியாத*
*கோட்டரவ மின்னிவை தாங்குழூமக் - கோட்டரவ*
*மத்திரங் கொண்டோங்க லென்ன மகச்சுமந்*
*திந்திரன்போல் வந்தா னிடத்து.*

*சொற்பிரிப்பு:*
*பாட்டு அரவம், பண் அரவம், பணியாத*
*கோட்டு அரவம், இன்னிவை தாம் குழூம, கோட்டு அரவம்*
*மந்திரம் கொண்டு ஓங்கல் என்ன, மகச் சுமந்து,*
*இந்திரன்போல் வந்தான், இடத்து.*

*தலைவன் தனது மகனைச் சுமந்து கொண்டு தலைவியின் இடப்பக்கம் நின்று விழாவில் பங்கேற்றான்.*
*பாடல்களின் ஒலியும், இன்னிசைக் கருவிகள் எழுப்பிய பண் ஒலியும், வளையாது நேராக அமைந்த புல்லாங்குழலினது இசையும் என வகை வகையான பல இசைகளும் கூடி ஒலிக்கும் வேளையில்; வளைந்த நச்சுப்பற்களைக் கொண்டிருந்த பாம்பினை கயிறாகக் கொண்டு பாற்கடலைக் கடைந்த மந்திரமலை போன்ற சிறப்பு அடைந்த, தலைவன் தனது மகனைச் சுமந்து கொண்டு மருத நிலத் தெய்வமாகிய இந்திரனைப் போல தலைவியின் இடப்பக்கம் வந்து நின்றான். (என்று தலைவியின் மகனுக்கு ஐம்படை பூட்டி பெயரிடும் விழாவின் காட்சியைக் கண்ட தோழி அதைக் கூறி மகிழ்ந்தாள்.)*

*"பாக்களைப் பாடும் ஒலியும், இசையும், கொம்பான குழலின் ஒலியும், இசைக்கும் இந்த நேரத்தில், வாசுகி சுற்றிக் கடைந்த மந்திரமலையைப் போன்று தன் மகனைப் பெற்ற தலைவன், இந்திரனைப் போல் தலைவியின் இடப்பாகத்தில் வந்து நின்றான்" என்று தோழி கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*146. அகம் புகன் மரபின் வாயில் தலைமகளன்பின் சிறப்பினைத் தலைமகற்கு முகம்புகன் முறைமையிற் கூறியது*

*மண்கிடந்த வையகத்தோர் மற்றுப் பெரியரா*
*யெண்கிடந்த நாளா னிகழ்ந்தொழுகப் - பெண்கிடந்த*
*தன்மை யொழியத் தரள முலையினாண்*
*யென்மைசெய் திட்டாண் மிக.*

*சொற்பிரிப்பு:*
*மண் கிடந்த வையகத்தோர் மற்றுப் பெரியராய்*
*எண் கிடந்த நாளான் இகழ்ந்து ஒழுக, பெண் கிடந்த*
*தன்மை ஒழிய, தரள முலையினாள்*
*மென்மை செய்திட்டாள், மிக.*

*தலைவி தனது பண்பின் மேன்மையால் சான்றோர் மெச்சும்படி இல்லறம் நடத்துகிறாள்.*
*(தலைவனே!) இம்மண்ணில் வாழ்பவர்களில் சான்றோர்களும் சிறிது நாட்களிலேயே தலைவியின் பெருமை உணர்ந்து அவளைப் பாராட்டி அவளுக்குத் தொண்டு செய்யும் வண்ணம், பெண்ணின் மேன்மையை வெளிப்படுத்தும் வகையில் மார்பில் முத்துமாலைகளைத் தவழ விட்டுள்ள தலைவி மிகவும் எளிமை இனிமை அன்பின் உறைவிடமாக இல்லறம் நடத்தி வருகிறாள். (என்று தலைவியின் இல்லத்தில் நுழைந்து பழகி அவள் இல்லறம் நடத்தும் பாங்கினை கண்ணுற்ற ஒருவன் தலைவனிடம் தூதாகச் சென்று, தலைவி இல்லறத்தினை ஊரார் மெச்சும் வண்ணம் மாண்புடன் நடத்துவதை அவனுக்குத் தெரிவிக்கிறான்.)*

*"சான்றோர் புகழும்படி குறுகிய வாழ்நாளில் பெண்ணின் பெருமை நிலைத்திருக்கும்படி முத்து மாலையை அணிந்த தலைவி, எளிமை, இனிமை, அன்பு இவற்றை இல்வாழ்க்கையாகக் கொண்டு வாழ்கிறாள்" என்று தலைவனிடம் வாயிலோன் கூறினான்.(பால சங்கரன் உரை)*

*147. தலைமகன் புறத்தொழுக்கினைத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது*

*செங்கட் கருங்கோட் டெருமை சிறுகனையா*
*லங்கட் கழனிப் பழனம்பாய்ந் - தங்கட்*
*குவளையம் பூவொடு செங்கயன்மீன் சூடித்*
*தவளையுமேற் கொண்டு வரும்.*

*சொற்பிரிப்பு:*
*செங் கண் கருங் கோட்டு எருமை சிறுகனையா*
*அங்கண் கழனிப் பழனம் பாய்ந்து, அங்கண்*
*குவளை அம் பூவொடு செங் கயல் மீன் சூடி,*
*தவளையும் மேற்கொண்டு வரும்.*

*புறத்து ஒழுக்கம் மேற்கொண்டு தலைவன் பரத்தையருடன் திரிகிறான் தோழியே! சிவந்த கண்களையும் கரிய கொம்புகளையும் கொண்ட எருமையானது, சிறிய கனைப்புடனே; அழகிய வயல்கள் மிகுந்த மருத நிலத்தூடே விரைந்து சென்று; அழகிய கண்களைப் போன்ற குவளை பூக்களுடனே, சிவந்த கயல் மீன்களையும் அணிந்து கொண்டு, தவளையினையும் அதன் முதுகின் மேலே அமர்ந்திருக்கும்படியாக இருத்திக் கொண்டு வருகிறதே, தோழியே (அவனுக்காகக் கரும்பு போன்ற தலைவி அவன் உரிமையாக இருக்கையில், தலைவன் அவளை விலக்கி; ஊரில் திரியும் எருமை போல குவளைப்பூ, மீன், தவளைகளாகிய பரத்தையர்களைச் சார்ந்து வாழ்கிறானே என்ற பொருள் படத் தலைவி தோழியினை நோக்கிக் கூறினாள்.)*

*"எருமை கண்களைப் போன்ற குவளை மலர்களுடனே, சிவந்த கயல் மீன்களையும் சூடிக் கொண்டு தவளையை முதுகில் சுமந்து வைத்துக் கொண்டு வருகிறது என்னே வியப்பு" என்று தலைவி தோழியிடம் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*148. தலைமகன் புறத்தொழுக்கினைத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது*

*இருணடந் தன்ன விருங்கோட் டெருமை*
*மருணடந்த மாப்பழன மாந்திப் - பொருணடந்த*
*கற்பேருங் கோட்டாற் கனைத்துத்தங் கன்றுள்ளி*
*நெற்போர்வு சூடி வரும்.*

*சொற்பிரிப்பு:*
*இருள் நடந்தன்ன இருங் கோட்டு எருமை,*
*மருள் நடந்த மாப் பழனம் மாந்திப்-பொருள் நடந்த*
*கல் பேரும் கோட்டால் கனைத்து, தம் கன்று உள்ளி,*
*நெல் போர்வு சூடி வரும்.*

*புறத்து ஒழுக்கம் மேற்கொண்ட தலைவன் பரத்தையர் உறவுக்குப் பின்னர் தனது மகனை நினைத்துக் கொண்டு வீடு திரும்புவான் தோழியே! இருளானது நடந்தது வருவது போன்று, பெரிய கொம்புகளையுடைய எருமையானது, மருதநிலக் குளத்தில் மன மயக்கத்தைத் தரும் வகையில் மலர்ந்துள்ள மலர்களை உண்டு, திடமாகக் கிடந்த கல்லினையும் பெயர்த்தெறியும் கொம்புகளோடும், சிறு கனைப்பு ஒலியுடனும், தனது கன்றை நினைத்துக் கொண்டு, நெற்கதிர்ப் போர்கள் முதுகில் படர்ந்திருக்க வரும். (என்று, பரத்தையர் உறவுக்குப் பின்னர் தனது மகனை நினைத்துக் கொண்டு தலைவன் வீடு திரும்புவான் என்ற பொருள்படத் தலைவி தோழியிடம் கூறினாள்.)*

*"இருள் நடப்பது போல் கொம்புகள் கொண்ட எருமைகள், கண்டோர்க்கு மன மயக்கத்தை தரும் குவளை மலரை உண்டு, தன் கன்றுகளை நினைத்து நெற்கதிர்ப் போர்களைச் சூடிக் கொண்டு வரும்" என்று தலைவி தோழியிடம் கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*149. உணர்ப்புவயின் வாராது ஊடிய தலைவி மாட்டு ஊடிய தலைமகனை அறிவர் கழறியது*

*புண்கிடந்த புண்மனுநின் னீத்தொழுகி வாழினும்*
*பெண்கிடந்த தன்மை பிறிதரோ - பண்கிடந்து*
*செய்யாத மாத்திரையே செங்கயற்போற் கண்ணினா*
*ணையாது தானாணு மாறு.*

*சொற்பிரிப்பு:*
*புண் கிடந்த புண்மனு நின் நீத்து ஒழுகி வாழினும்,*
*பெண் கிடந்த தன்மை பிறிதுஅரோ பண் கிடந்து*
*செய்யாத மாத்திரையே, செங் கயல்போல் கண்ணினாள்*
*நையாது தான் நாணுமாறு.*

*தலைவியின் ஊடல் கண்டு விலகும் தலைவனிடம், தலைவி அவனிடம் கொண்டுள்ள உண்மை அன்பை எடுத்துக் கூறி தலைவனைச் சேர்ந்து வாழும்படி நல்வழியில் நடத்தும் பெரியோர் இடித்துரைக்கிறார்கள்.*
*தலைவனே! வீரப்போர்ப் புண்கள் மிகப்பெற்ற மனுவென்னும் அரசன் வகுத்த அறநெறி வழி நடப்பது என்ற பண்பு உன்னை விட்டு நீங்கி, நன்னெறி விலகி நீ வாழ்ந்தாலும், செங்கயல் மீனினைப் போன்ற கண்களையுடைய தலைவி, உன் நடத்தை கண்டு வருந்தாமல் நாணம் கொள்ளும் நிலையானது தலைவியிடம் பெண்மைப் பண்பு நிறைந்துள்ளதைக் காட்டுகிறது. இது புது வகை இசை போல உலகம் அறிந்திராத ஒரு புதுமை. (என்று அறநெறி தவறி பரத்தமை மேற்கொண்டு தலைவியை மறந்து நடந்த தலைவனிடம் தலைவி பிடிவாதமான ஊடலைக் கொண்டிருந்ததால் அவன் அவளை விலக, அதனைக் கண்ட பெரியோர் தலைவி தலைவனிடம் கொண்டுள்ள உண்மை அன்பை எடுத்துக் கூறி தலைவனை அவளுடன் சேர்ந்து வாழும்படி நல்வழியில் நடத்தும் பெரியோர் இடித்துரைக்கிறார்கள்.)*

*"தலைவ! நீ மனு என்ற அரசனின் அறநெறியானது உன்னைவிட்டு நீங்கும்படி தீய ஒழுக்கத்தைக் கொண்டு வாழ்ந்தாலும் உன் கயல் போன்ற கண்களை உடைய தலைவி ஊடலை மேற்கொண்டு வருந்தாமல் நாணம் அடையும் வகையில், பெண்மையாகிய பேரரசுக் குணம் அவளிடம் பொருந்திக் கிடக்கும் தன்மை இவ்வுலகத்தில் காண முடியாத புதியதாய் உள்ளது" என்று பெரியவர்கள் தலைவனிடம் உரைத்தது.(பால சங்கரன் உரை)*

*150. தலைமகன் தலைமகளைப் புணர்ந்து மகிழ்ந்து பாணனிடங் கூறியது*

*கண்ணுங்கா லென்கொல் கலவையாழ்ப் பாண்மகனே!*
*எண்ணுங்கான் மற்றின் றிவளொடுநே - ரெண்ணிற்*
*கடல்வட்டத் தில்லையாற் கற்பெயர் சேரா*
*ளடல்வட்டத் தாருளரே லாம்.*

*சொற்பிரிப்பு:*
*கண்ணுங்கால் என்கொல்? கலவை யாழ்ப் பாண் மகனே!*
*எண்ணுங்கால், மற்று இன்று; இவௌாடு நேர் எண்ணின்,*
*கடல் வட்டத்து இல்லையால்; கல் பெயர் சேராள்;*
*அடல் வட்டத்தார் உளரேல் ஆம்.*

*என் குற்றத்தை மன்னித்து என்னை ஏற்றுக் கொண்ட என் தலைவியைப் போல சிறந்த பெண்ணொருத்தி இவ்வுலகில் கிடையாது பாணனே!*
*பலபண்களையும் கலந்து யாழில் இசைக்க வல்ல பாணனே! ஆராய்ந்து பார்த்தால் தலைவியைப் போல சிறந்த ஒரு பெண்ணை எங்கும் காண இயலாது. எண்ணிப் பார்த்தாலும் இன்று என் தலைவிக்கு நிகரான பெண்ணொருத்தி கடல் சூழ்ந்த இந்த மண்ணுலகில் இல்லை. மறைந்து நடுகல்லாய் சமைந்துவிட்ட முன்னோர்களிலும் அத்தகைய பெண் இருந்ததில்லை. சிறப்பான விண்ணுலகில் யாரேனும் இவளுக்கு இணையான சிறப்பு கொண்டவராய் இருக்கக் கூடும். (என்று பாணனைத் தூதனுப்பி தலைவியின் ஊடலை நீக்கி அவளைக் கூடிய தலைவன் மனம் மகிழ்ந்து பாணனிடம் கூறுகின்றான்.)*

*"பாணனே! இவளுக்கு ஒப்பானவரை எண்ணிப் பார்த்தால் கடல் சூழ்ந்த இவ்வுலகில் காண இயலாது. நடுகல்லிடத்தே பெயர் சேரப்பெறாத மேல் உலகப் பெண்கள் இருப்பாராயின் இவளுக்கு ஒப்பாவார்" என்று தலைவன் பாணனிடம் உரைத்தான்.(பால சங்கரன் உரை)*

## *151.* பாணற்கு வாயின் மறுத்தது

*சேறாடுங் கிண்கிணிக்காற் செம்பொன்செய் பட்டத்து*
*நீறாடு மாயதிவ னின் முனா - வேறாய*
*மங்கையரி னாடுமோ மாக்கோல்யாழ்ப் பாண்மகனே!*
*எங்கையரி னாடலா மின்று.*

*சொற்பிரிப்பு:*
*சேறு ஆடும் கிண்கிணிக் கால் செம் பொன் செய் பட்டத்து,*
*நீறு ஆடும் ஆயது இவன் இன் முனா; வேறு ஆய*
*மங்கையர் இல் நாடுமோ?-மாக் கோல் யாழ்ப் பாண் மகனே!-*
*எங்கையர் இல் நாடலாம் இன்று.*

*பாணனே! தலைவன் தன் மகனுடன்தான் விளையாட விரும்புவான், பரத்தையர்களுடன் அன்று.*
*சேற்றில் விளையாடுகையில் கிண்கிணி என ஒலிக்கும் கால் சலங்கை அணிந்த என் மகனின், செம்மையான பொன்னில் செய்யப்பட்ட நெற்றிச் சுட்டியில் புழுதி படர, இந்த வீட்டின் முன் முற்றத்தில் தன் மகனுடன் விளையாடும் என் தலைவன், பண்பால் வேறுபட்ட பெண்களான பரத்தையரின் வீடு சென்று விளையாட விரும்புவானோ? (விரும்பமாட்டான்) ஆகவே, அழகிய கோலுடன் அமைந்த யாழைக் கொண்ட பாணனே, நீ வீணே காலந்தாழ்த்தாது எனக்குப் பின்னவர்களான பரத்தையர் இல்லம் நோக்கிச் சென்றுவிடுவாயாக. (என்று தலைவி பாணனிடம் கூறினாள்.)*

*"பாணனே! காலில் கிண்கிணி அணிய, நெற்றிச் சுட்டி புழுதி படும்படி எம்மகனுடன் வீட்டின் முன், பரத்தையுடன் விளையாடுவது போல் தலைவன் விளையாட விரும்பான். ஆதலால் நீ வீணாக வாயில் வேண்டாதே" என்று தலைவி கூறினாள்.(பால சங்கரன் உரை)*

*152. நெய்யணி 'நயந்த கிழவனைக் கிழத்தி நெஞ்சு புண்ணுநீஇக் கூறியது*

*முலையாலும் பூணாலு முன்காட்டஞ் சேர்ந்த*
*விளையாலு மிட்ட குறியை - யுலையாது*
*நீர்சிதைக்கும் வாய்ப்புதல்வ னிற்கு முனைமுலைப்பா*
*றார்சிதைக்கும் வேண்டா தழு.*

*சொற்பிரிப்பு:*
*முலையாலும், பூணாலும், முன்கண் தாம் சேர்ந்த*
*விலையாலும், இட்ட குறியை உலையாது*
*நீர் சிதைக்கும் வாய்ப் புதல்வன் நிற்கும், உனை; முலைப்பால்*
*தார் சிதைக்கும்; வேண்டா, தழூஉ.*

*உன் மார்பில் நீ அணிந்துள்ள மாலையினை என் முலைப்பால் சிதைக்கும், ஆகவே என்னைத் தழுவ வேண்டாம் தலைவனே!*
*தனது முலைகளாலும், அணிகளாலும் முன்னே பரத்தையர்கள் தம் உறவுக்காகப் பெற்றுக் கொண்ட பொருளாலும் உனது மார்பில் அவர்கள் பொருந்தியதற்கான சுவடு கலையும் முன்பே, உமிழ் நீரினைச் சிந்துகின்ற வாயினையுடைய என் மகன் முன்னர் வரும் தலைவனே! (நீ என்னைத் தழுவினால்) எனது மார்பில் சுரக்கும் பால் உன் மார்பில் அணிந்துள்ள மாலையினை சிதைத்துவிடும் , ஆகவே என்னைத் தழுவாதே. (என்று தலைவி தலைவனின் அணைப்பை மறுத்துக் கூறினாள்.)*

*"தலைவ! பரத்தையர்கள் தம் மார்பாலும் அணிகளாலும் உன் மார்பில் பொறுத்திசைத்த குறியானது கெடாத வண்ணம் என் முன் வந்து நிற்கின்றாய். உமிழ்நீரைச் சிந்தும் வாயை உடைய என் மகன் உண்ணும் கொங்கையின் பால், உன்னைத் தழுவினால், வெளிப்பட்டு அழிந்து விடும். எனவே என்னைத் தழுவிக் கொள்ளுதல் வேண்டியது இல்லை" என்று தலைவி கூறினாள்.(பால சங்கரன் உரை)*

153. தலைமகள் தோழியிடத்துத் தலைமகனைக் காய்ந்து கூறியது

*துனிபுலவி யூடலி னோக்கென் றொடர்ந்த*
*கனிகலவி காதலினுங் காணேன் - முனிவகலி*
*னாணா நடுக்கு நளிவய லூரனைக்*
*காணாவெப் போதுமே கண்.*

*சொற்பிரிப்பு:*
*துனி, புலவி, ஊடலின் நோக்கேன்; தொடர்ந்த*
*கனி கலவி காதலினும் காணேன்; முனிவு அகலின்,*
*நாணா நடுக்கும்; நளி வயல் ஊரனைக்*
*காணா, எப்போதுமே, கண்.*

*துயர் தரும் மனப் பிரிவினை பொதுவான ஊடல் நிலை என்று எண்ணிப் பேசாதே தோழி! நான் எப்பொழுதுமே தலைவனைக் காண விரும்ப மாட்டேன். துயர் தரும் மனப் பிரிவினை பொதுவான ஊடல் நிலை என்று எண்ணிப் பேசாதே தோழி! தொடர்ந்து பலகாலம் கனிந்த அன்பினை தலைவனின் உறவில் நான் பெறவில்லை. ஆகவே, வெறுப்புற்று இருக்கும் எனது மனநிலை மாறினாலும் கூட, தனது செயலுக்காக வெட்கி நடுங்கும், குளிர்ந்த வயல்கள் கொண்ட மருத நிலத்தின் ஊர்த்தலைவனை நான் எப்பொழுதுமே காண விரும்ப மாட்டேன். (என்று ஊடலைக் கைவிடச் சொல்லும் தோழியிடம் தலைவி கூறுகின்றாள்.)*

*"தொடர்புடைய இன்பமாகிய கனியினைத் தலைவனுடன் கலந்த அந்த அன்பு மிக்க காலத்திலும் காணப் பெற்றதில்லை. ஆகவே மருதத் தலைவனை என் கண்கள் எப்போதும் காண விரும்பவில்லை. அப்படி இருக்கவும், வருத்தம் மிக்க மனவேறுபாட்டைப் பொதுவான ஊடலைப் போல் நினைத்துப் பேசுதல் எதற்காக" என்று தலைவி தோழியிடம் வினவினாள்.(பால சங்கரன் உரை)*

# சிறப்புப் பாயிரம்

*முனிந்தார் முனிவொழியச் செய்யுட்கண் முத்துக்
கனிந்தார் களவியற் கொள்கைக் - கணிந்தா
ரிணைமலை யீடிலா வின்றமிழால் யாத்த
திணைமாலை கைவரத் தேர்ந்து.*

*சொற்பிரிப்பு:
முனிந்தார் முனிவு ஒழிய, செய்யுட்கண் முத்துக்
கனிந்தார் களவியல் கொள்கைக்கு அணிந்தார்-
இணை மாலை ஈடு இலா இன் தமிழால் யாத்த
திணைமாலை கைவரத் தேர்ந்து.*

*அகப் பொருளைக் காமமென வெறுத்து விலக்குவோருக்காக கணிமேதாவியார் இயற்றிய திணைமாலை நூற்றைம்பது என்னும் நூல். நூலை எழுதியவர் பெயர் கூறும் பாயிரம் எனப்படும் இந்த செய்யுள், புறவுரை என்ற பாயிரப் பெயர்ப்பொருள் காரணமாக நூலின் இறுதியில் இடம்பெற்றுள்ளது.
அகப் பொருளைக் காமமென வெறுத்து விலக்குவோருக்காக, அகப் பொருள் மீது அவர்கள் கொண்ட வெறுப்பு விலகும்படியாக, முத்துக்களைப் போன்ற வெண்பாச் செய்யுட்களில் கனிவுடன் அகப் பொருளாகிய களவியற் கொள்கைகளைக் கூறினார் கணிந்தார் என்று கூறப்படும் கணிமேதாவியார். தொடுக்கப் பெற்ற மலர் மாலையினைப் போன்ற கருத்துக்களை ஆராய்ந்து, ஒப்புமை கூறுதற்கு இணையற்ற இனிய தமிழ் மொழியில், அகப் பொருள் ஒழுக்கத்தை மீண்டும் வழங்கி வரும்படி அவர் இயற்றிய திணைமாலை நூற்றைம்பது என்னும் நூலாகும் இது.*

*அகப்பொருளாகிய களவியற் கொள்கைகளை வெறுத்தவர்களின் வெறுப்பு விலகி விரும்பும்படி இனிய முத்துக்களைக் கொண்டு தொடுத்த மாலையினைப் போன்று, ஈடு இணை இல்லாத இன்ப வெண்பாக்களால் கோத்தது இந்த திணை மாலையாகும்.(பால சங்கரன் உரை)*

# உதவிய பனுவல்கள்

*1. கணிமேதாவியார் இயற்றிய திணைமாலை நூற்றைம்பது*
*மூலமும் உரையும் - மகாவித்வான் ரா. ராகவையங்கார்*
*செந்தமிழ்ப் பிரசுரம், 1927 (இரண்டாம் பதிப்பு)*
*https://upload.wikimedia.org/wikipedia/commons/4/4e/திணைமாலை_நூற்றைம்பது.pdf*
*https://ta.wikisource.org/s/31hg*

*2. கணிமேதாவியார் இயற்றிய திணைமாலை நூற்றைம்பது*
*விளக்க உரை - தமிழ்ப் புலவர் திரு. அ. நடராச பிள்ளை*
*http://www.tamilvu.org/library/l2F00/html/l2F00ind.htm*
*http://www.tamilvu.org/library/l2F00/html/l2F00vur.htm*

*3. கணிமேதாவியார் இயற்றிய திணைமாலை நூற்றைம்பது*
*உரையாசிரியர்: பால சங்கரன், எம்.ஏ., பி.எட்.*
*https://www.chennailibrary.com/pathinenkeelkanakku/thinaimaalai150.html*

*4. திணைமாலை நூற்றைம்பது - கணிமேதாவியார்*
*தமிழ் இலக்கியத் தொடரடைவு, முனைவர்.ப.பாண்டியராஜா*
*http://tamilconcordance.in/TABLE-THINAIMALAI150-TEXT.html*






ஆசிரியர்: தேமொழி

திணைமாலை நூற்றைம்பதில் ஒவ்வொரு திணையின் பாடல்களையும் ஐந்து சிறு கதைகளாகப் புனைந்து அவற்றை மணங்கமழும் ஒரு மாலையாகத் தொடுத்து ஐந்திணை மாலை என்னும் ஓர் அழகிய நூலைத் திருமதி தேமொழி படைத்துள்ளார்.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலையெனும் ஐவகை நிலங்களில் வாழ்ந்த மக்களின் அன்றைய ஒழுகலாற்றை தொகுத்துக் கூறும் திணைமாலை நூற்றைம்பதின் ஒவ்வொரு திணையின் பாடல்களையும் கதைகளாக உருவாக்கியுள்ள ஆசிரியரின் அறிவார்ந்த முயற்சி போற்றுதற்குரியதாகும். ஐந்திணைச் சூழலுக்குப் பொருந்திய கதைகள் மட்டுமின்றி, கதைகளுக்குரிய பாடல்களைச் சொற்பிரித்து கற்போருக்கு எளிய நடையில் எழில் ததும்ப ஆசிரியர் உரையெழுதிய பாங்கு தேமொழியின் இலக்கியப் புலமைக்கு அணி சேர்க்கின்றது.

முனைவர்.**ந.அருள்**
இயக்குநர் (மொழிபெயர்ப்பு) தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறை,
தலைமைச் செயலகம், சென்னை.

CoverDesign : naanaas@gmail.com










ISBN: 978-0-9963993-7-1